# கல்கி பொருளடக்கம்

மலர் 12 இதழ் 6 | 1952 செப்டம்பர் 7 | நந்தன ௵ ஆவணி 23





## சமாதான மகாநாடு!




சென்னையில் சமாதான மகாநாடு நடந்தது. அம்மகாநாட்டில் ஆவேசப் பிரசங்கங்கள் நடந்தனவாம்.

ஜூபிடர் & சங்கீதா வின்

# ஜமீன்தார்

சென்னை
கெயிட்டி
பாரத்
சயானி
சிவாஜி

பெங்களூர் ஸ்ரீ
" " " ஸ்வஸ்திக்
" " " மீனாக்ஷி
மதுரை ராஜா
கோயம்புத்தூர் அம்பிகா
சேலம் ஓரியண்டல்
வேலூர் பாப்புலர்
திருநெல்வேலி சோலைஹால்
திண்டுக்கல் முருகன்
காஞ்சீபுரம் ரீபூ சினிமா
திருப்பாப்புலியூர் ஜெய லக்ஷ்மி
மாயவரம் ரத்னா
புதுச்சேரி சாமுண்டீஸ்வரி
மைசூர் ராம விலாஸ்
காரைக்குடி சென்ட்ரல்
விருதுநகர் பாக்ய லக்ஷ்மி
தென்காசி அம்பிகை
கரூர் புஷ்பமண்டன்
உத்தமபாளையம்
5.9.52 முதல்
திருச்சிராப்பள்ளி ஸ்டார்

★



| கதை, வசனம் | டைரக்ஷன் | சங்கீதம் | ஸ்டுடியோ |
|---|---|---|---|
| P. கண்ணன்.. | P.V. கிருஷ்ணன்.. | G. ராமநாதன்.. | சென்ட்ரல் |

கல்கி

மலர் 12 | தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 6

# வாழ்விக்க வந்த சட்டம்! வளம் பெருக்க வந்த சட்டம்!

சோறுடைய சோழவள நாட்டையும் சோழ நாட்டை நம்பியுள்ள தமிழகத்தையும் வாழ வைக்கக் கூடிய சட்டம் வந்திருக்கிறது.

தமிழ் மக்கள் தாழ்ந்து வீழ்ந்து படாமல் தலை நிமிர்ந்து நிற்கச் செய்வதற்காக ராஜாஜி தந்த சட்டம் வந்திருக்கிறது.

அதற்குத் தஞ்சாவூர் விவசாயப் பாதுகாப்பு அவசரச் சட்டம் (ஆர்டினன்ஸ்) என்று பெயர்.

அவசரச் சட்டம் என்று இந்த ஆர்டினன்ஸ் சட்டத்தைக் கூறுவது ஒருவிதத்தில் பொருந்தும்; இன்னொரு விதத்தில் பொருந்தாது.

அவசரக்கோலம் அள்ளித் தெளித்த கதையாக யோசனையின்றிச் செய்யப்பட்ட சட்டம் இல்லை அது!

மிகமிகத் தீர்க்காலோசனையுடன், நன்றாக யோசித்து, குற்றங் குறை கண்டு பிடிக்க இடமில்லாமல் செய்த சட்டம் இது.

தஞ்சாவூர் ஜில்லாவில் நடைபெறும் விவசாயத்தில் பல முறைகள் உண்டு. குத்தகை, உள் குத்தகை, வார சாகுபடி, பண்ணை சாகுபடி, கூலியாள் சாகுபடி என்று இத்தனை முறைகள் அனுஷ்டிக்கப்படுகின்றன. ஒவ்வொரு முறையிலும் தாலூக்காவுக்குத் தாலூக்கா வித்தியாசம் உண்டு. உதாரணமாக, வார சாகுபடி முறையில் சில இடங்களில் வாரக்காரர்களுக்கு 100க்கு 20 பங்கும், வேறு இடங்களில் 100க்கு 25 பங்கும், மற்றும் சில இடங்களில் 100க்கு 30 பங்கும், 50 பங்கும் கூட உண்டு.

பண்ணையாள்களின் கூலி விகிதங்களிலும் அவர்களுடைய உரிமைகளிலும் வித்தியாசங்கள் உண்டு.

குத்தகை நிபந்தனைகளிலும் பல வேற்றுமைகள் உண்டு.

இவ்வளவையும் நுணுக்கமாக ஆராய்ந்து மேற்படி பாதுகாப்புச் சட்டம் குற்றம் கண்டு பிடிக்க இடமின்றி எல்லாருக்கும் பொதுவாக நியாயம் வழங்கும் முறையில் தயாரிக்கப் பட்டிருக்கிறது.

இதைத் தஞ்சை விவசாய முறைகளில் நன்கு அனுபவப் பட்டவர்கள் கண்டு அதிசயிக்கின்றனர்.

ஆகையால் இது ஆராயாமல் செய்த அவசரச் சட்டம் ஆகாது.

ஆனால் வெள்ளம் அணையை அடியோடு தகர்ப்பதற்குள், நோய் முற்றி உயிருக்கே ஆபத்து வருவதற்குமுன், மீனமேஷம் பார்க்காமல், காலந் தாழ்த்தாமல், சரியான சமயத்தில் துரிதமாக நிறைவேற்றிய காரியம் என்ற முறையில் இதை "அவசரச் சட்டம்" என்று சொல்லுவது பொருந்தும்.

அவசரமாகச் செய்ய வேண்டிய காரியங்கள் சில அவசியம் உண்டு.

ரயில் புறப்படும் நேரம் நெருங்கிய பிறகு. ரயிலைப் பிடிக்க நிதானமாகச் செல்லுவதில் உபயோகமில்லை.

பயிர் செய்த வயலில் மாடு இறங்கி மேய்ந்து கொண்டிருக்கும்போது அதை அவசரமாக அடித்தும் அதட்டியும் ஓட்டத்தான் வேண்டும். அச் சந்தர்ப்பத்தில் மதோன்மத்தமாயிருப்பது மடமையாகும்.

வாசலில் காயப்போட்ட தானியத்தை மாடு தின்பதைப் பார்த்துக் கொண்டு நிதானமாயிருத்தல் பெரும் அறிவீனமாகும்.

உடம்பில் சிரங்கு வெடித்துப் பழுத்துப் புரையோடும் சமயம் வந்த பிறகும் 'ஆபரேஷன் செய்யலாமா, வேண்டாமா' என்று யோசனை செய்து கொண்டு காலம் போக்குவது பெருங் குற்றமாகும். அதனால் ஒருவனுடைய உயிருக்கே அபாயம் நேர்ந்து விடலாம். நல்ல டாக்டர்கள் அத்தகைய நிலைமையில் ஒரு நிமிஷமும் காலதாமதம் செய்யமாட்டார்கள்.

இந்த முறையில் பார்க்கும்போது தஞ்சாவூர் விவசாயப் பாதுகாப்பு ஆர்டினன்ஸை அவசரச் சட்டம் என்று சொல்வது பொருத்தமானதுதான்.

*　　　　*　　　　*

தஞ்சாவூர் ஜில்லா விவசாயத்துக்குச் சில வருஷங்களுக்கு முன்பே நோய்கண்டு விட்டது. அதை மூடி மூடி வைத்துக் கொண்டிருந்தார்கள். "பாடப் பாட ராகம்; மூட மூட ரோகம்" என்பது பழமொழி அல்லவா!

அது போலவே மூடப்பட்ட நோய் முற்றி வந்தது. பிளவை பெரிதாகிச் சீழ் பிடித்து அக்கம் பக்கம் வீங்கிப் புரையோடும் நிலைமையும் ஏற்பட்டு விட்டது. இனி மேல் தாமதித்தால் நோயாளி 'பைஸல்' ஆவான் என்று தெரிந்து போயிற்று. இது எப்போது நன்கு தெரிந்தது என்றால், சென்ற பொதுத் தேர்தலின் போதுதான்.

வெகு காலமாகத் தேசிய உணர்ச்சிக்கும் காங்கிரஸ் பற்றுக்கும் பெயர் போன தஞ்சை ஜில்லாவில் காங்கிரஸ் அபேட்சகர்கள் பாதிப்பேருக்கு மேல் படுதோல்வி அடைந்தார்கள். குழப்பம் விளைவிப்பதையே நோக்கமாகக் கொண்டவர்கள் வெற்றி அடைந்தார்கள்.

இதிலிருந்து நோய் முற்றி விட்டது என்று நன்கு தெரிந்தது. ஆபரேஷன் செய்ய வேண்டியது அத்தியாவசியம் என்றும் ஏற்பட்டது.

ஆபரேஷனைச் செய்வதற்கு முதல்தர ஸர்ஜன் ஒருவர் வேண்டுமே என்று பலரும் கவலைப் பட்டோம்; பிரார்த்தனை செய்தோம்.

"ஆபரேஷன் வெற்றி; ஆசாமி பைஸல்" என்று சொல்லும்படியான ஸர்ஜனாயிருக்கக் கூடாதே என்று கவலைப் பட்டோம்.

அவ்விதமின்றி, முதல்தரத் திறமை வாய்ந்த ஸர்ஜன் அதிர்ஷ்ட வசமாக நமக்குக் கிடைத்தார். அவருக்கு நல்ல உதவியாளர்களும் கிடைத்தார்கள்.

தஞ்சாவூர் நோயைத் தீர்க்கும் ஆபரேஷன் நடந்தது. ஆபரேஷனும் வெற்றியாயிற்று; நோயாளி பிழைத்துக் கொள்வான் என்பது நிச்சயமாயிற்று.

*　　　　*　　　　*

ஆபரேஷன் என்றால், செய்த இடத்தில் சில நாள் எரிச்சல் இருக்கத்தான் செய்யும். அதைச் சகித்துக் கொள்ளத்தான் வேண்டும். இந்த மட்டும் உயிர் பிழைத்ததே என்று எண்ணிப் பொறுமையைக் கைக்கொள்ள வேண்டும்.

புத்திசாலிகள் அப்படிச் சகிப்புடனிருந்து, ஆபரேஷன் செய்த இடத்தைச் சரியாகக் கட்டுப் போட்டுப் பாதுகாத்துக் குணம் அடைவார்கள்.

முட்டாள்கள் ஆபரேஷன் செய்த ஸர்ஜனைத் திட்டி விட்டு, கட்டுக்களை அவிழ்த்தெறிந்து, நல்ல வலிக்குப் பதில் திருகு வலியை வரவழைத்துக் கொள்வார்கள்; செத்துப்போனாலும் போவார்கள்.

விவசாயப் பாதுகாப்பு அவசரச் சட்டம் செய்த பிறகு ராஜாஜி உடனடியாகத் தஞ்சை ஜில்லாவுக்குச் சென்றார். தஞ்சை மக்கள் அவரைக் குதூகலமாக வரவேற்றார்கள். விவசாயப் பாதுகாப்புச் சட்டத்தைத் தங்களை வாழ்விக்க வந்த சட்டம் என்று கொண்டாடினார்கள். சிற்சிலர் அது சம்பந்தமாக ஏற்பட்ட சந்தேகங்களைக் கேட்டுத் தெளிந்தார்கள். இதிலிருந்து தஞ்சை மக்கள் நல்ல அறிவாளிகள் என்ற பெயரை நன்கு நிலைநாட்டிக் கொண்டார்கள்.

*　　　　*　　　　*

விவசாயப் பாதுகாப்புச் சட்டத்தினால் தஞ்சை மிராசுதார்கள் அல்லது பட்டாதார்கள் ஓரளவு பாதிக்கப் படுகிறார்கள் என்பதில் சந்தேகமில்லை. முன்னேற்றத்தைக் குறியாகக் கொண்ட எந்தச் சீர்திருத்தமும் ஒரு சிலரைப் பாதிக்கத்தான் செய்யும். பிரதிகூலங்கள் என்று நினைக்கக்கூடிய அம்சங்கள் இவை :—

1. பட்டாதார்கள் தங்கள் இஷ்டம் போல் உழவர்களை நிலத்திலிருந்து அப்புறப் படுத்த முடியாது. விவசாயத்துக்குப் பாதகம் விளைக்கும் முறையில் உழவர்கள் நடந்து கொண்டார்கள் என்பதை நிரூபித்தால்தான் அப்புறப் படுத்தலாம்.

இது பட்டாதார்களுக்கு மனச் சங்கடத்தை அளிக்கக் கூடும். "நம்முடைய நிலத்திலிருந்து நாம் ஆள்களை அப்புறப் படுத்துவதற்குத் தடையா!" என்று தோன்றலாம். வீம்புக்காரர்களுக்கு இது ஆத்திரமும் அளிக்கும்.

2. பண்ணை முறையிலும் சரி, வார முறையிலும் சரி, முன்னைவிட உழவர்களுக்கு விளைவில் அதிக பங்கு கொடுத்தாக வேண்டும். இதுவும் சிலருக்குச் சங்கடமாயிருக்கும்.

ஆனால் இந்தப் பிரதிகூலங்களுக்கு ஈடாக, அவசரச் சட்டத்தினால் பட்டாதார்களுக்கு ஏற்படும் அநுகூலங்களைப் பாருங்கள்:—

1. மிராசுதார்களைச் சிலர் ஜமீன்தார்களுக்குச் சமமாக எண்ணுவது வழக்கமாயிருந்தது. அப்படியில்லை யென்றும் மிராசுதார்கள் அல்லது பட்டாதார்கள் நிலத்தின் சொந்தக்காரர்கள் என்றும் இச்சட்டம் ஒப்புக் கொள்கிறது.

வீடு, கடை, ஆலை முதலிய சொத்துக்களைப் போல் நிலமும் பட்டாதார்களின் சொந்த சொத்து என்று ஏற்படுகிறது.

2. தகுந்த காரணமிருந்தால், உழவர்களையும் வாரம்தார்களையும் மாற்றும் உரிமை அவர்களுக்கு அளிக்கப் படுகிறது.

3. குழப்பமில்லை தீர்ந்து விவசாயம் நல்லபடியாக நடக்கும் என்ற உறுதி ஏற்படுகிறது. உழவர்கள் அத்துமீறி நடந்து கொண்டால் சர்க்காரின் பாதுகாப்பு பட்டாதார்களுக்கு நிச்சயமாக உண்டு.

மொத்தத்தில் பார்க்கும்போது, பட்டாதார்களுக்கு ஏற்படும் பிரதிகூலங்களைக் காட்டிலும் அநுகூலங்களே அதிகம் என்பது நிச்சயம்.

*　　　　*　　　　*

உழவர்களுடைய நோக்கிலிருந்து பார்க்கும்போது அவர்களுக்கு இந்த அவசரச் சட்டம் ஒரு பெரிய வரப்பிரஸாதம் என்றே சொல்ல வேண்டும்.

1. மேற்படி சட்டத்தின் பிரகாரம் பெரும்பாலான வாரம்தார்களும் பண்ணை ஆட்களும் இப்போது பெற்று வரும் வருமானத்தைக் காட்டிலும் அதிக வருமானத்தைப் பெறுவார்கள்.

விளைச்சலில் நூற்றுக்கு 25 அல்லது 30 விகிதம் பெற்று வந்தவர்கள் இனி 40 விகிதம் பெறுவார்கள். கொடுத்தே தீர வேண்டும் என்று சட்டம் வற்புறுத்துகிறது.

2. உழவர்கள் பண்படுத்தும் நிலத்தில் தொடர்ந்து ஐந்து வருஷம் வேலை செய்து, அதன் விகிதாசாரப் பலனை அநுபவிக்கும் உரிமை அவர்களுக்கு ஏற்படுகிறது.

பட்டாதார்கள் தங்கள் மனம் போன போக்காக உழவர்களை அப்புறப் படுத்த முடியாது.

சமீப காலத்தில் அப்புறப் படுத்தப் பட்டவர்களுக்கு அவர்கள் வேலை செய்த நிலம் திரும்பச் சாகுபடிக்குக் கொடுக்கப்படும்.

இப்படி சேர்ந்துள்ள இடங்களில் மிராசுதார்களுடைய மனச் சங்கடத்தைப் பொருட்படுத்தாமல் உழவர்கள் நிலத்தைத் திரும்பப் பெறும் உரிமை தரப் பட்டிருக்கிறது.

இதைக் காட்டிலும் அதிகமாகத் தற்போதைய நிலையில் வேறு யாரும் அவர்களுக்கு அநுகூலம் செய்திருக்க முடியாது என்பதை உறுதியாகக் கூற







- தஞ்சை மிராசுதார்கள் மகா நாட்டில் ராஜாஜி அவசரச் சட்டத்தை விளக்கினார்.
- தஞ்சைப் பொதுக் கூட்டத்தில் நிதி மந்திரி பேசினார்.
- மகாத்மாஜியும் சிலை வடிவத்தில் ஆசீர்வதித்தார்.
- மன்னார்குடியில் வீட்டு மாடிகள் மீதும் மக்கள் திரண்டிருந்தனர்.







○●○

- திருவாரூர்ப் பொதுக் கூட்டத்தில் பெண் மணிகள் பகுதி.
- தஞ்சையில் உச்சி வேளை வெய்யிலில் கூடியிருந்த கூட்டம்.
- மாயூரத்தில் மத்தியானம் மூன்று மணி வெய்யிலில் கூடியிருந்தவர்கள் மைதானம் கொள்ளாமல் மரத்தின் மேலும் நின்றார்கள்.

○●○

# நத்தை வேகம்!



ஜெனீவாவில் மறுபடியும் காஷ்மீர் சமாதானத்துக்கான பேச்சு வார்த்தைகள் நடக்கப் போகிறதாம்.

லாம். உழவர்களுக்கு நிச்சயமான அனுகூலம், எதிர் பாராத அளவு அனுகூலம், மேற்படி சட்டத்தின் மூலம் இருப்பதினாலேயே, உழவர்களின் சார்பாகப் பேசுகிறவர்கள் எல்லாரும், இந்தப் பாதுகாப்புச் சட்டத்தை வரவேற்கிறார்கள்.

காங்கிரசுக்குள்ளிருந்து உழவர்களின் கட்சியை எடுத்துரைத்துப் பாடு பட்ட ஸ்ரீ ஜி. நாராயண சாமி நாயுடு போன்றவர்கள் உற்சாகமாக வர வேற்று, "இது உழவர் கட்சியின் மகத்தான வெற்றி" என்று பறைசாற்றுகிறார்கள்.

பிரஜா கட்சித் தலைவர் ஸ்ரீ டி. விசுவநாதன் இச் சட்டத்தை வர வேற்று, "நாங்கள் அதிகாரத் துக்கு வந்திருந்தால் நாங்களும் இம்மாதிரி சட் டம் செய்திருப்போம்" என்கிறார்.

கம்யூனிஸ்டுகளும் வேறு வழியில்லாமல் சட் டத்தை வரவேற்று, "ஆனால் இது எங்களுடைய முயற்சியினால்தான் உழவர்களுக்குக் கிடைத்தது" என்று சொல்லிக் கொள்கிறார்கள்.

யாரால் வந்ததாயிருந்தாலும் அதைப் பற்றிக் கவலை யில்லை. இந்தச் சட்டத்தின் மூலம் என்ன பலன் கிடைக்க வேண்டும் என்று எதிர் பார்க் கிறோமோ, அது கிடைத்தால் சரிதான்.

*   *   *

ராஜாஜி சட்டசபையின் காங்கிரஸ் கட்சித் தலைவரானதும் செய்த முதல் பிரசங்கத்தில் "இரண்டு காரியங்களைச் செய்து முடித்தால் நாம் திருப்தி அடையலாம். (1) அரசாங்க நிர்வாகத் தைத் தூய்மைப் படுத்த வேண்டும். (2) விவசா யத் தொழிலை மகிழ்ச்சிகரமான தொழிலாக ஆக்க வேண்டும்" என்று சொன்னார்.

விவசாயத்தை மகிழ்ச்சிகரமான தொழிலாக்கு வதற்காக ராஜாஜி முதலில், தானியக் கண்ட் ரோல் முறையை ரத்து செய்தார். அதை ஒரு வரப் பிரஸாதம் என்று விவசாயிகள் அனைவரும் பாராட்டினார்கள். முக்கியமாக நிலச் சொந்தக் காரர்கள் குதூகலம் அடைந்தார்கள்.

அதுபோல் பாட்டாளி உழவர்களுடைய வாழ்க் கையையும் மகிழ்ச்சிகரமாகச் செய்வதற்காகவே இப்போது அவசரப் பாதுகாப்புச் சட்டத்தைக் கொண்டு வந்திருக்கிறார்.

சட்டத்தைச் சரிவரப் பின்பற்றி நடந்துகொண் டால், மிராசுதார்கள்—உழவர்கள் எல்லாருடைய வாழ்க்கையும் மகிழ்ச்சிகரமாவது நிச்சயம்.

விவசாயப் பாதுகாப்புக்காக இந்தச் சட்டமாகிய முள் வேலி போடப் பட்டிருக்கிறது. வேலி அவ சியம் என்பதை உணர்ந்து நடந்தால், பயிர்கள் மாடு மேயாமல் செழித்து வளர்வதைப் பார்த்து அனைவரும் மகிழ்ச்சி அடையலாம்.

அதற்கு மாறாக, வேலியில் பலவந்தமாகப் பிர வேசிக்க விரும்புகிறவர்களின் மீது வேலியின் முள் குத்தத்தான் செய்யும். "ஐயோ! முள் குத்தி விட்டதே! வலிக்கிறதே!" என்று அலறு கிறவர்களிடம் அநுதாபம் காட்ட முடியாது.

அனைவருக்கும் திருப்தியளித்திருக்கும் இந்தச் சட்டத்துக்குப் பிறகும் தஞ்சை ஜில்லாவில் குழப்பம் உண்டாக்கி விவசாயத்தைக் கெடுக்க முயற்சிப்பவர்களைச் சர்க்காரும் மன்னிக்க மாட் டார்கள்; பொது மக்களும் மன்னிக்க முடியாது.

ஆதலின் தஞ்சை ஜில்லாவின் பெரிய மிராசு தார்கள், சிறிய பட்டாதார்கள், குத்தகைக் காரர்கள், வாரம்தார்கள், உழவர்கள், அரசியல் வாதிகள் அனைவரும் புதிய சட்டத்தை மனப்பூர்வ மாக ஒப்புக் கொண்டு ஒத்துழைக்க வேண்டு மென்று வேண்டுகிறோம். அவர்களுடைய அறி வாற்றல் அனைத்தையும் விவசாய வளர்ச்சியிலும் விளைவைப் பெருக்குவதிலும் காட்ட வேண்டும் என்றும் கேட்டுக் கொள்கிறோம்.

# ஐந்தாம் தமிழ் விழாவும் அகில இந்திய ரேடியோவும்

சென்னை மா நகரம் ஒரு விசித்திரமான நகரம். அதில் நாலா புறங்களிலும் எழும் கூச்சல்கள் மிக மிக அதிகம். இத்தகைய கூச்சல்களில் எது முக்கியமானது, எது முக்கியமற்றது என்பதைக் கண்டு பிடிப்பது மிகக் கடினம்.

சில சமயம், எழெட்டுப் பேர் கூடியுள்ள மகா சபையில் மூன்றே முக்கால் பிரமுகர்கள் செய்யும் உபந்நியாசங்களுக்குப் பிரமாதமான விளம்பரம் கிடைத்து விடும்.

மற்றும் சில சந்தர்ப்பங்களில் பதினாயிரக் கணக்கானவர்கள் சேர்ந்து செய்யும் பெரு முயற்சிகளுக்கு விளம்பரம் இல்லாமலே போய்விடும்.

சென்னை மா நகரில் இலக்கிய சம்பந்தமான விழாக்கள் நடத்துவது சுலபமான காரியம் அல்ல.

வெளியூர்களில் 'தமிழ் விழா' நடந்தால், அந்த ஊரிலும் சுற்றுப் புறங்களிலும் பல தினங்களுக்கு அதே பேச்சாயிருக்கும். ஊரும் காடும் திரண்டு வந்து விடும். விழா கோலாகலமாக நடக்கும்.

ஆனால் சென்னை மா நகரில் எவ்வளவு பெரிய அளவில் ஓர் இலக்கிய விழாவை நடத்தினாலும் அது சமுத்திரத்தில் கரைந்த பெருங்காயமாக ஆகி விடலாம். எத்தனையோ கூச்சல்களில் அதுவும் ஒரு கூச்சலாகப் போய்விடக் கூடும்.

எனவே, ஐந்தாம் தமிழ் விழாவைச் சென்னை மா நகரில் நடத்துவது பற்றித் தமிழ் வளர்ச்சிக் கழகத்தார் பெரிதும் தயங்கினார்கள். விழாவை நடத்துவதற்கு முன் வந்த தமிழ் அன்பர்களும் கவலையுடனேதான் அந்தப் பொறுப்பை ஒப்புக் கொண்டார்கள்.

இதை யெல்லாம் எண்ணிப் பார்க்கும்போது சென்னையில் நடந்த ஐந்தாம் தமிழ் விழா எதிர் பார்த்ததைக் காட்டிலும் மிகச் சிறப்புடன் அமோகமாக நடந்தது என்றே சொல்லவேண்டும்.

ஐந்தாம் தமிழ் விழாவுக்குச் சிறப்புத் தந்த காரணங்களில், இலங்கையிலிருந்து பல அன்பர்கள் விஜயம் செய்து 'சமூகம் தந்தது' ஒரு தனிச் சிறப்புடைய காரணமாகும்.

தமிழ் விழாவின் கலைப் பகுதிக்குத் தலைமை வகிக்கும்படி ஸ்ரீ எஸ். நடேசன் அவர்களைக் கேட்டுக் கொண்டபோது, அவர் தமிழன்பரும் கலை அன்பருமான ஸ்ரீ நடேசனாக மட்டுமே இருந்தார். பின்னர், அவர் இலங்கை அரசாங்கத்தின் தபால் இலாகா மந்திரியாகி, கனம் எஸ். நடேசன் ஆனார். இதன் காரணமாகத் தமிழ் விழாவுக்கு அவருடைய விஜயம் தடைப்படவில்லை யென்பது மகிழ்ச்சிக் குரியது. மற்றும், மந்திரி பதவியானது எந்த விதத்திலும் அவருடைய உடை நடை பாவனைகளிலும் மனோநிலையிலும் மாறுதல் உண்டாக்க வில்லை யென்பதைத் தமிழ் விழாவில் கூடியிருந்த திரளான தமிழன்பர்கள் கண்டு மகிழ்ந்தார்கள்.

ஸ்ரீ எஸ். நடேசன் அவர்களையும் அவர்களுடைய வாழ்க்கைத் துணைவியாரையும் தவிர, மற்றும் பல இலங்கைத் தமிழன்பர்களும் விழாவுக்கு வந்திருந்தார்கள். கொழும்பிலிருந்து பேராசிரியர் அருள் நந்தி அவர்களும், யாழ்ப்பாணத்திலிருந்து ஸ்ரீ அம்பிகை பாகன், ஸ்ரீ ராஜ அரியரத்தினம் ஆகியவர்களும், கண்டியிலிருந்து ஸ்ரீ ராமானுஜம், ஸ்ரீ குமாரவேலு, ஸ்ரீ தம்பித்துரை முதலிய பலரும் விஜயம் செய்து தமிழ் விழாவைச் சிறப்பித்தார்கள்.

அடுத்த ஆண்டில் நடைபெறும் தமிழ் விழாவுக்கு இன்னும் அதிகமான தமிழன்பர்கள் இலங்கையிலிருந்து வந்து கலந்து கொள்வார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

*　　*　　*

இலங்கைத் தமிழன்பர்களின் தமிழார்வம் எத்தகைய சிறப்பு வாய்ந்தது என்பதை நேயர்கள் அறிவார்கள். சுவாமி விபுலானந்தர் ஜனனம் ஆன மட்டக்களப்பிலிருந்து வந்த பின்வரும் கடிதம் அதை ஒருவாறு எடுத்துக் காட்டுகிறது:—

"ஐயா,

'தமிழ் விழா' தமிழர்களின் எழுச்சிக் குரல்; தமிழர்களைத் தட்டி எழுப்பும் இதய ஒலி. ஆனால் மூன்றரைக் கோடித் தமிழர்களுக்கும் தமிழ் விழாவுக்கு விஜயம் செய்வதற்கு வாய்ப்புக் கிடைப்பதில்லை. பண நிலை. 'பாஸ் போர்ட்' சங்கடம் இவை யெல்லாம் விழாவையும் இலங்கைத் தமிழர்களையும் பிரித்து வைக்கின்றன. இந்த அபாக்கிய சாலிகளுக்கு இந்திய வானொலியும் கை கொடுக்காது போயிற்று. மூன்று நாள் முழுதாக நடந்த தமிழ் விழாவை அரை அரை மணியாக இரண்டு மணி நேரந்தான் அஞ்சல் செய்தார்கள். அவசியமில்லாத சினிமாப் பாட்டுக்களை நிறுத்தித் தமிழ் விழாவை அஞ்சல் செய்ய உள்ளம் படைத்தவர்கள் அங்கே இல்லாது போய் விட்டார்கள்.

ஆனால் சென்ற ஆண்டு நடந்த தமிழ் விழாவை இலங்கை வானொலி நிலையத்தார் தினம் ஐந்து மணி நேரம் அஞ்சல் செய்தது குறிப்பிடத் தக்கது.

அடுத்த ஆறும் தமிழ் விழாவை அனைவரும் கண்டு மகிழ முடியாவிட்டாலும் கேட்டாவது மகிழும்படியாக தமிழ் வளர்ச்சிக் கழகமும் வானொலி நிலையமும் முயற்சிக்குமா!

மட்டக்களப்பு　　கோ. கோணேச பிள்ளை,
26—8—52　　சிவானந்த வித்தியாலயம்."

மேற் கண்ட கடிதம் நமக்கு ஓரளவு அவமானத்தை உண்டாக்கத்தான் செய்கிறது.

இலங்கை வானொலி நிலையம் சிங்கள சர்க்காரின் நேர் ஆதிக்கத்துக்கு உட்பட்டது. ஆயினும் அந்த நிலையம் சென்ற வருஷத்தில் யாழ்ப்பாணத்தில் நடந்த தமிழ் விழா நடவடிக்கைகளுக்குத் தினம் ஐந்து மணி நேரம் அளித்தது. இதன் காரணமாக இலங்கைத் தீவு முழுவதும் அந்த இரண்டு நாளும் தமிழ் முழக்கமாகவே இருந்தது. இலங்கை வானொலி நிலையத்தில் வழக்கமாக சினிமாப் பாட்டுக்களுக்கு அளிக்கும் நேரத்தைக் கூடக் குறைத்துக் கொண்டு தமிழ் விழாவுக்கு அந்த நேரத்தை அளித்தார்கள்.

சென்னையில் உள்ள அகில இந்திய ரேடியோ நிலையத்தார் அப்படி யெல்லாம் தமிழுக்கு முக்கியம் கொடுத்து விடுவார்களா!

அதிலும் தமிழ் விழாவுக்காக இசைத் தட்டு சங்கீதத்தைச் சென்னை ரேடியோவில் நிறுத்துவது என்று ஏற்பட்டு விட்டால், பாலாற்றில் நேற்றுப் பெருகி வந்த ஓர் அடித் தண்ணீரும் திரும்பி அல்லவா போய்விடும்!

ஏதோ இந்த மட்டும் இரண்டு மணி நேரமாவது தமிழ் விழாவுக்குக் கொடுத்தார்களே, அதற்காக நாம் நன்றி செலுத்த வேண்டியதுதான்!

# அநாதை ஜில்லா அல்ல

வட ஆற்காடு ஜில்லாவைச் சேர்ந்த மூன்று சட்டசபை அங்கத்தினர்கள் பின்வரும் கடிதத்தை எழுதியிருக்கிறார்கள் :—

"வட ஆற்காடு ஜில்லாவில் பஞ்ச நிலை இருப்பது ஓர் அளவுக்கு உண்மை. இந்த நிலையைப் போக்க யாதொரு முயற்சியும் எடுக்க வில்லை என்று எழுதியிருக்கிறீர்கள். இது உண்மை அல்ல.

இந்த ஜில்லாவில் எங்களைப் போன்ற சட்டசபை அங்கத்தினர்கள் எங்களால் கூடிய மட்டில் சேவை செய்து வருகிறோம். இங்குள்ள பஞ்ச நிலைமையை அதிகாரிகளுக்குத் தெரிவித்து வேண்டிய கஞ்சித் தொட்டிகள் ஏற்படுத்தியும், குடி தண்ணீர் வசதிக்காகக் கிராமங்களில் கிணறுகளை வெட்ட ஏற்பாடு செய்தும், பஞ்ச நிவாரணத்துக்காக ஏழை மக்களுக்குக் கூலி கிடைக்க ஏரி, கால்வாய், மண் வேலைகளும் செய்ய ஏற்பாடு செய்தும். சேலை, வேஷ்டி, பணம் முதலிய சகாயங்கள் செய்தும், சர்க்கார் அதிகாரிகளுடன் ஒத்துழைத்துப் பணியாற்றி வருகிறோம்.

மீண்டும் கிராமங்களில் வேண்டிய கஞ்சித் தொட்டிகள், குடி தண்ணீர் வசதி, நீர்ப்பாசன திட்டங்களுக்கு வேண்டிய ராணுவ உதவி ஆகியவற்றை வற்புறுத்தி நமது மாகாணச் சர்க்காருக்குத் தெரியப்படுத்தி யிருக்கிறோம்.

இவைகளின் பயனாக ஸ்ரீ ஹெச்மாடி ஐ. சி. எஸ். சென்ற வாரத்தில் எங்கள் ஜில்லாவில் சுற்றுப் பிரயாணம் செய்து உண்மை நிலைமையைப் பார்வையிட்டு விட்டுப் போயிருக்கிறார்.

எங்கள் வேண்டுகோளுக்கு இணங்கி கனம் ரெவின்யூ மந்திரி ஸ்ரீ மாணிக்கவேலு நாயக்கர் அவர்கள் 29—8—52-ல் உண்மை நிலையை நேரில் கண்டு கொள்ள வாலாஜா, அரக்கோணம் தாலூக்காக்களில் சுற்றுப் பிரயாணம் செய்ய ஏற்பாடு செய்திருக்கிறார்.

எங்களைப் போன்றவர்களின் சேவையை விளம்பரப்படுத்திக் கொள்ள இதை எழுதவில்லை. பொது மக்கள் நாங்கள் சோம்பியிருக்கிறோம் என்று நினைக்கக் கூடாது என்பதற்காக இதை எழுதுகிறோம்.

பி. பக்தவத்சலு நாயுடு
எம். எல். ஏ. (அரக்கோணம்)

எஸ். காதர் ஷெரீப்
எம். எல். ஏ. (ஆற்காடு)

ராணிப்பேட்டை
26—8—52

பஞ்சாக்ஷரம் எம். எல். ஏ."

* * *

சட்டசபை அங்கத்தினர்கள் விழிப்புடனிருந்து வருவது பற்றிச் சந்தோஷம். "எங்களுடைய சேவையை விளம்பரப் படுத்த எழுத வில்லை" என்று நம் எம். எல். ஏ. நண்பர்கள் குறிப்பிட வேண்டிய அவசியம் இல்லை.

ஜனநாயக முறையின் கீழ் ஜனப்பிரதிநிதிகள் தங்கள் கடமையை ஆற்றவும் வேண்டும்; கடமையை ஆற்றி வருவதாகப் பொது மக்கள் உணரும்படி செய்யவும் வேண்டும்.

சென்ற பொதுத் தேர்தலில் பல இடங்களில் காங்கிரஸ் தோல்வியடைந்ததற்கு ஒரு முக்கிய காரணம் போதிய பிரசார மின்மையாகும்.

ஆகையால் 'தற்பெருமை அடித்துக் கொள்வதாக' யாராவது நினைத்துக் கொண்டாலும் நினைத்துக் கொள்ளட்டும் என்று, எம். எல். ஏ. க்கள் தாங்கள் பொது மக்களுக்காகச் செய்து வரும் பணிகளை அவ்வப்போது வெளிப்படுத்தி வருவது மிகவும் அவசியம்.

'வலது கையினால் தானம் கொடுப்பது இடது கைக்குத் தெரியக்கூடாது' என்னும் பழமொழியை அரசியலில் அனுசரிப்பது யுக்தமன்று.

* * *

மற்றொரு பக்கத்தில் வடாற்காடு ஜில்லாவைச் சேர்ந்த பல அன்பர்களின் கடிதங்களை வெளியிட்டிருக்கிறோம். அவற்றிலிருந்து, அந்த ஜில்லாவின் நிலைமை எவ்வளவு பரிதாபகரமா யிருக்கிறது என்பது தெரிய வருகிறது.

வடாற்காடு ஜில்லா நிலைமை பற்றி சென்ற ஆகஸ்டு மாதம் 24-உ "கல்கி" இதழில் குறிப்பு வெளியான பிறகு ரெவின்யூ போர்டு அங்கத்தினர் ஸ்ரீ ஹெஜ்மாடி ஐ. சி. எஸ். மேற்படி ஜில்லாவில் சுற்றுப் பிரயாணம் செய்து விட்டு வந்து வெளியிட்ட அறிக்கை தினப் பத்திரிகைகளில் எல்லாம் பிரசுரிக்கப் பட்டது.

ரெவின்யூ மந்திரி கனம் மாணிக்கவேலு நாயக்கர் பஞ்சப் பிரதேசங்களை நேரில் போய்ப் பார்த்து, வடாற்காடு ஜில்லாவைப் பஞ்சப் பிரதேசமாக அறிவிக்கப் போவதாகத் தெரிவித்திருக்கிறார்.

வடாற்காடு ஜில்லா போர்டு கூட, பஞ்ச நிவாரணத்துக்காகச் சாலை மராமத்து முதலிய வேலைகள் தொடங்கச் சர்க்காரைப் பண உதவி கேட்டிருக்கிறது.

சென்னை சர்க்கார் வடாற்காடு ஜில்லாவுக்குச் செய்ய வேண்டிய கடமையைச் செய்வார்கள் என்று எதிர் பார்க்கலாம். ஆனால் அதே சமயத்தில் எல்லாப் பொறுப்புக்களையும் சர்க்கார் தலையிலேயே போட்டு விட்டு, மற்றவர்கள் சும்மா இருந்துவிடக் கூடாது.

அந்த ஜில்லா சுபிட்சமாயிருந்த காலத்தில் பணம் சேர்த்த செல்வர்கள் முன் வந்து பஞ்சத்தினால் பீடிக்கப்பட்டவர்களுக்கு உதவ வேண்டும்.

பொது வாழ்வில் ஈடுபட்ட பிரமுகர்களும் பொதுஜன ஊழியர்களும் இச் சமயத்தில் தங்கள் கடமையை ஆற்ற வேண்டும்.

* * *

மேற் கண்டதை நாம் எழுதிய பிறகு, வருண பகவானும் கண் திறந்து, வடாற்காடு ஜில்லாவை அநாதை ஜில்லாவாக விடக்கூடாது என்று மனங் கொண்டு, சிறிது கருணை புரிந்திருப்பதாகத் தெரிய வருகிறது.

வேலூரிலும் சுற்றுப் புறத்திலும் மழை பெய்திருப்பதால் பத்து வருஷங்களுக்குப் பிறகு பாலாற்றில் வெள்ளம் வந்திருக்கிறதாம்!

அதை ஒரு பெரிய அதிசயமாக மக்கள் போய்ப் பார்த்து வருகிறார்களாம்!

நல்ல அதிசயம்! நல்ல பாலாறு!

# பொன்னியின் செல்வன்

கல்கி

## இரண்டாம் அத்தியாயம்

## பாட்டனும் பேரனும்

பின்னால் ரதத்தில் வந்த கிழவர் சமிக்ஞை செய்யவே, ஆதித்த கரிகாலன் குதிரையைத் திருப்பிக் கொண்டு அவர் வீற்றிருந்த ரதத்தின் அருகில் சென்றான்.

"குழந்தாய்! கரிகாலா! நான் இவ்விடத்தில் உங்களிடம் விடை பெற்றுக் கொண்டு திருக்கோவலூர் போக எண்ணுகிறேன். போவதற்கு முன்னால் உன்னிடம் சில முக்கிய விஷயங்கள் சொல்ல வேண்டும். சற்றுக் குதிரையிலிருந்து இறங்கி அந்த அரச மரத்தடியிலுள்ள மேடைக்கு வா!" என்றார்.

"அப்படியே ஆகட்டும், தாத்தா!" என்று ஆதித்த கரிகாலன் குதிரையிலிருந்து கீழே குதித்தான்.

கிழவரும் ரதத்திலிருந்து இறங்கினார்.

இருவரும் அரசமரத்தடி மேடைக்குச் சென்றார்கள்.

அப்போது பார்த்திபேந்திரன் கந்தமாறனைப் பார்த்து, "நல்ல வேளையாய்ப் போயிற்று. இந்தக் கிழவர் விடேன் தொடேன் என்று நம்முடன் நெடுகிலும் வந்து விடுவாரோ எனப் பயந்து கொண்டிருந்தேன்!" என்றான்.

"அப்படித் தொடர்ந்து வந்தால் இவரை வெள்ளாற்றின் பிரவாகத்தில் தள்ளி முழுக அடித்து விடுவது என்று நான் எண்ணியிருந்தேன்!" என்றான் கந்தமாறன்.

இருவரும் தங்கள் பேச்சில் தாங்களே சிரித்து மகிழ்ந்தார்கள்.

ஆதித்த கரிகாலனைப் பார்த்து மலைநாடு உடையாராகிய திருக்கோவலூர் மலையமான் சொல்லலுற்றார் :—

"ஆதித்தா! இன்றைக்கு இருபத்து நான்கு ஆண்டுகளுக்கு முன்னால் நீ பிறந்தாய்! திருக்கோவலூரில் என்னுடைய அரண்மனையிலேதான் பிறந்தாய்! அச்சமயம் நடந்த கொண்டாட்டங்கள் நேற்று நடந்ததுபோல் எனக்கு ஞாபகமிருக்கின்றன. உன்னுடைய குலத்தைச் சேர்ந்தவர்களும் என்னுடைய குடியைச் சேர்ந்தவர்களும் சோழ நாட்டையும் தொண்டை நாட்டையும் சேர்ந்த சிற்றரசர்கள் பலரும் வந்திருந்தார்கள். இவர்கள் எல்லாரையும் சேர்ந்த வீரர்கள் முப்பதினாயிரம் பேர் வந்திருந்தார்கள். அவர்களுக்கெல்லாம் நடந்த விருந்தின் விமரிசையைச் சொல்லி முடியாது. உன் தந்தையின் பட்டாபிஷேக வைபவத்தின் போது கூட அத்தகைய விருந்துகளும் கோலாகலங்களும் நடைபெறவில்லை. என் பொக்கிஷத்தில் என் முன்னோர்கள் காலத்திலிருந்து நூறு வருஷங்களாகச் சேர்த்து வைத்திருந்த பொருள் அவ்வளவும் அந்த மூன்று நாள் கொண்டாட்டத்தில் தீர்ந்து போய் விட்டது!

அச்சமயம் உன்னுடைய கொள்ளுப் பாட்டனாராகிய பராந்தக சக்கரவர்த்தியே திருக்கோவலூருக்கு வந்திருந்தார். உன் பெரிய பாட்டனார் கண்டராதித்தரும் உன் தந்தை சுந்தர சோழரும்

வந்திருந்தார்கள். ஆண் குழந்தை பிறந்த செய்தி அறிந்ததும் அவர்கள் அனைவரும் அடைந்த ஆனந்தத்துக்கு அளவேயில்லை. சோழர் குலத்தை விளங்க வைப்பதற்கு நீ பிறந்து விட்டாய் என்று குதூகலம் அடைந்தார்கள். உன் பாட்டனின் மூத்த தமையன்மார்களுக்கு அதுவரையில் சந்ததியில்லை. அரிஞ்சயனுக்கும் உன் தகப்பன் ஒரே மகனாக விளங்கினான். அவன் உன் பிராயத்தில் மன்மதனை யொத்த அழகுடன் விளங்கினான். சோழ குலத்திலோ அல்லது தமிழகத்துச் சிற்றரசர் வம்சத்திலோ அவ்வளவு அழகுடைய பிள்ளையை யாரும் அதற்கு முன் கண்டதில்லை. இதனால் உன் தந்தைக்குச் சில சங்கடங்களும் நேர்ந்தன. குடும்பத்தார் அனைவருக்கும் அவன் செல்லப் பிள்ளையாக இருந்தான். அரண்மனைப் பெண்டிடிர்கள் அவனுக்குப் பெண் வேடம் போட்டுப் பார்த்து மகிழ்ந்தார்கள். 'இவன் மட்டும் பெண்ணாய்ப் பிறந்திருந்தால்?' என்று பேசிப் பேசிப் பூரித்தார்கள். உன் தந்தைக்குத் தங்கள் பெண்ணைக் கொடுப்பதற்கு இலங்கை முதல் விந்திய பர்வதம் வரையில் உள்ள மன்னாதி மன்னர்களும் சிற்றரசர்களும் தவம் கிடந்தார்கள். அர்ச்சுனனையும் மன்மதனையும் நிகர்த்த அழகன் அவன் என்பதுடன் சோழ சிங்காதனத்துக்கு உரியவன் என்ற எண்ணத்தினாலும் அவ்வளவு ஆர்வத்துடன் இருந்தார்கள். உன் தந்தையை மருமகனாகப் பெறும் பேறு கடைசியில் எனக்குக் கிடைத்தது.

எங்கள் வம்சத்தில் நாங்கள் ஆண் ஆகட்டும், பெண் ஆகட்டும் மேனி அழகுக்குப் பெயர் போனவர்கள் அல்ல. ஆண் பிள்ளைகள் உடம்பில் எத்தனைக் கெத்தனை போர்க் காயங்களைப் பெறுகிறோமோ, அவ்வளவுக்கு அழகுடையவர்களாக எண்ணிக் கொள்வோம். எங்கள் குலத்துப் பெண்களுக்குக் கற்பும் குணமும்தான் அழகும் ஆபரணமும். உன் தந்தைக்கு என் மகளைக் கலியாணம் செய்வதென்று தீர்மானித்த போது மலையமானாடு முழுதும் அல்லோல கல்லோலப் பட்டது. அவ்வளவுக்குத் தமிழகத்துச் சிற்றரசர்கள் எல்லாரும் அசூயை கொண்டார்கள். அதை நான் பொருட்படுத்தவில்லை. மூன்று உலகமும் பிரமிக்கும்படியாக உன் பெற்றோர்களின் திருமணம் தஞ்சையில் நடந்தது. என்றாலும், அப்போது நடந்த கொண்டாட்டத்தைக் காட்டிலும் நீ பிறந்த போது திருக்கோவலூரில் நடந்த கொண்டாட்டம்தான் அதிக குதூகலமாயிருந்தது. உனக்கு என்ன பெயர் வைப்பது என்பது பற்றிக் குதூகலமான சர்ச்சை நடந்தது. சிலர், உன் குலத்து முன்னோரில் மிகப் புகழ் பெற்ற கரிகால் வளவன் பெயரை இடவேண்டும் என்றார்கள். நானும் இன்னும் சிலரும் உன் பெரிய பாட்டனார் இராஜாதித்யர் பெயரைத்தான் வைக்க வேண்டும் என்று வற்புறுத்தினோம். கடைசியில் இரண்டையும் சேர்த்து 'ஆதித்த கரிகாலன்' என்று உனக்கு நாமகரணம் செய்தார்கள்.

அதோ பார்! ஆதித்தா! திருநாவலூரின் கோவில் சிகரம் தெரிகிறது. நம்பி ஆரூரர் சுந்தர மூர்த்தி அடிகள் பிறந்த ஸ்தலம் அது. அங்கே, இன்றைக்கு இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் உன் பெரிய பாட்டனார் இராஜாதித்ய சோழர் முகாம் செய்திருந்தார். கதைகளிலும் காவியங்களிலும் வரும் எத்தனையோ வீரர்களைப் பற்றிக் கேட்டறிந்திருக்கிறேன். இந்த வீரத் தமிழகத்தில் எவ்வளவோ வீரர்களைப் பார்த்துமிருக்கிறேன். ஆனால் இராஜாதித்யரைப் போன்ற இன்னொரு வீரரைப் பார்த்ததுமில்லை; கேட்டதுமில்லை. போர்க்களத்தில் அவர் போர் செய்வதைப் பார்த்தவர்கள் யாராயிருந்தாலும், அப்படித்தான் சொல்லுவார்கள்.

ஒரு மாபெரும் சைன்யத்தைத் திரட்டிக் கொண்டு வடநாட்டின்மீது படை எடுத்துச் செல்ல அவர் இங்கே ஆயத்தம் செய்து கொண்டிருந்தார். இரட்டை மண்டலத்து அரசனாகிய கன்னரதேவனை முறியடித்து, மானிய கேடம் என்னும் அவனுடைய தலைநகரைத் தரைமட்டமாக்க வேண்டும் என்று அவர் உறுதி கொண்டிருந்தார். முன்னொரு காலத்தில் பல்லவ குலத்து மாமல்ல சக்கரவர்த்தி வாதாபி நகரை அழித்ததுபோல், மானிய கேட நகரை அடியோடு அழித்தால்தான் இரட்டை மண்டலத்தாரின் கொட்டம் அடங்கும் என்றும், தானும் மாமல்லரைப்போல் புகழ் பெறலாம் என்றும் இராஜாதித்யர் எண்ணினார். அதற்கு வேண்டிய மாபெரும் சைன்யத்தைத் திரட்டுவதென்றால் இலேசான காரியமா? மாமல்லர் ஏழு வருஷ காலம் படை திரட்டியதாகச் சொல்லுவார்கள். அவ்வளவு காலம் தனக்கு வேண்டியதில்லையென்றும் மூன்று அல்லது நாலு ஆண்டுகள் போதும் என்றும் இராஜாதித்யர் கூறினார். படை திரட்டிச் சேர்ப்பதற்

கும், திரட்டிய படைகளுக்குப் போர்ப் பயிற்சி தருவதற்கும் தகுந்த பிரதேசம் இந்தக் கெடிலம் ஆற்றுக்கும் தென் பெண்ணை நதிக்கும் இடைப்பட்ட நாடு தான் என்று தேர்ந்தெடுத்தார்.

"ஆதித்தா! அந்த நாளில் இந்த இரு நதிகளுக்கும் இடையிலுள்ள பிரதேசத்தை நீ பார்க்கக் கொடுத்து வைக்கவில்லை. அந்தக் காட்சிகளைப் பார்த்தவர்களோ, உயிர் உள்ள வரையில் அதை மறக்க மாட்டார்கள். திருநாவலூரில் இராஜாதித்யர் முப்பதினாயிரம் வீரர்களுடன் தங்கி யிருந்தார். பெண்ணையாற்றங் கரையிலுள்ள முடியூரில் சேர நாட்டுச் சிற்றரசன் வெள்ளன் குமரன் இருபதினாயிரம் வீரர்களுடன் முகாம் செய்திருந்தான். உன் பாட்டன் அரிஞ்சயன் என்னுடன் திருக்கோவலூரில் இருந்தான். நானும் அரிஞ்சயனும் ஐம்பதினாயிரம் வீரர்களை ஆயத்தம் செய்தோம். இன்னும் கொடும்பாளூர்ப் பெரிய வேளான், இன்று சோழ நாட்டுக்குச் சனியனை மூளைத்திருக்கும் பழுவேட்டரையன், கடம்பூர் சம்புவரையன், இந்தத் திருமுனைப்பாடி நாட்டின் சிற்றரசனை முனைய தரையன், மழநாட்டு மழவரையன், குன்றத்தூர்க் கிழான், வைதும்பராயன் முதலியவர்கள் தத்தம் படைகளுடன் இந்த இரண்டு நதிகளுக்கும் இடையில் தங்கி யிருந்தார்கள். யானைப் படைகளும், குதிரைப் படைகளும், தெரிந்த கைக்கோளரின் மூன்று கைப் படைகளும் இங்கே முகாம் போட்டிருந்தன. இப்படித் தங்கி யிருந்த படைகளுக்குள்ளே அடிக்கடி பயிற்சிப் போர்கள் நடக்கும். யானைகளோடு யானைகள் மோதும்போது பூகம்பம் வந்து விட்டதாகத் தோன்றும். குதிரைப் படைகளின் அணிவகுப்புகள் வேல் பிடித்த வீரர்களுடன் பாய்ந்து செல்லுங்கால் எழும் சத்தம் பிரளய கால சமுத்திரம் பொங்கிவருவது போலிருக்கும். வீரர்கள் வில்லுகளிலிருந்து அம்புகள் விட்டுப் பழகிக் கொள்ளும்போது அந்தச் சரமாரியினால் வானமே மறைந்துவிடும். எதிரிப் படைகளைத் தாக்குவதற்காக ஆயிரமாயிரம் வீரர்கள் 'நாவலோ நாவல்' என்று ஏககாலத்தில் கர்ஜித்துக் கொண்டு கிளம்பிப் பாயும்போது உலகத்தின் முடிவு நெருங்கிவிட்டதாகவேதோன்றும். இதையெல்லாம் வேடிக்கை பார்ப்பதற்குத் திரள் திரளாக ஜனங்கள் வருவார்கள்.

இந்தத் திருமுனைப்பாடி நாட்டிலும் நடு நாட்டிலும் உள்ள ஜனங்கள் மிக நல்லவர்கள். அதோடு வீரம் மிகுந்தவர்கள். இங்கே படை திரண்டிருந்த போது அவர்களுடைய விவசாயத்துக்குப் பெரும் குந்தகங்கள் நேர்ந்தன. அதை எல்லாம் அவர்கள் பொருட்படுத்தவில்லை. இத்தகைய மக்களுக்கு நன்றி தெரிவித்துக் கொள்வதற்காகவே இராஜாதித்யர் இந்த இரண்டு நாட்டிலும் பல ஏரிகள் தோண்டுவித்தார். கொள்ளிடத்திலிருந்து புதிய ஆறு வெட்டிக் கொண்டு வந்து வீர நாராயணபுரத்து ஏரியில் தண்ணீர் நிரப்புவதற்கும் ஏற்பாடு செய்தார். ஆதித்தா! அந்த ஏரியின் வளத்தினால் பெருநன்மை அடைந்தவன் கடம்பூர் சம்புவரையன். அவன் அன்றைக்கு இராஜாதித்யரின் அடிபணிந்து நின்ற நிலையையும் இன்று அடைந்திருக்கும் செல்வச் செருக்கையும் ஒப்பிட்டுப் பார்த்தால் எனக்குப் பெரு வியப்பு உண்டாகிறது!........."

ஆதித்த கரிகாலன் குறுக்கிட்டு, "தாத்தா! சம்புவரையர் செருக்கைப் பற்றித் தங்களுக்கு என்ன கவலை? தக்கோலத்தில் நடந்த யுத்தத்தைப் பற்றிச்சொல்லுங்கள். இந்தக் கெடிலக்கரையில் திரட்டிய மாபெரும் சைனியம் எப்போது இங்கிருந்து புறப்பட்டது? அவ்வளவு முன்னேற்பாடுகள் செய்திருந்தும், என் பெரிய பாட்டனார் அவ்வளவு பெரிய மகா வீரராயிருந்தும், ஏன் நம் படைகள் தக்கோலத்தில் தோல்வியுற்றன? தாங்களும் அந்தப் போரில் கலந்து போரிட்டவர் அல்லவா? ஆகையால் நேரில் பார்த்துத் தெரிந்து கொண்டிருப்பீர்களே?" என்றான்.

"ஆம்; நானும் அந்தப் போர்க்களத்தில் இருந்தேன். அதைப் பற்றித்தான் உனக்குச் சொல்லப் போகிறேன்.

இராஜாதித்யர் இங்கே பல வகைப் படைகள் திரட்டித் தூர தேசங்களுக்குச் சென்று போர் செய்வதற்குப் பயிற்சி அளித்துக் கொண்டிருந்தார் அல்லவா? சில காரணங்களினால் உத்தேசித்திருந்த காலத்துக்குள் அவர் புறப்பட முடியவில்லை. இலங்கையில் மறுபடியும் போர் மூண்டதாகச் செய்தி வந்தது. அதை வெற்றிகரமாக முடிப்பதற்கு மேலும் படைகள் அனுப்ப வேண்டி யிருந்தது. தெற்கே ஒரு பகைவனை வைத்துக் கொண்டு வடக்கே நெடுந் தூரம் சோழ நாட்டின் முக்கிய சேனா வீரர்களும் தளபதிகளும் போவதைச் சக்கரவர்த்தி விரும்பவில்லை. இலங்கைப் போர் முடிந்ததாகச் செய்தி வந்த பிறகு புறப்பட

வாம் என்று கூறி வந்தார். இராஜாதித்யரும் தந்தையின் வார்த்தையைத் தட்ட முடியாமல் பொறுமையுடன் காத்திருந்தார். ஆனால் பகைவர்கள் அவ்விதம் காத்திருக்க இணங்கவில்லை. இரட்டை மண்டலச் சக்கரவர்த்தி கன்னரதேவனும் அதே சமயத்தில் சோழ நாட்டின் மீது படை எடுப்பதற்காகப் பெரிய சைன்யம் சேர்த்துக் கொண்டு வந்தான். அந்த மாபெரும் சைன்யத்துடன் அவன் தெற்கு நோக்கிப் புறப்பட்டு விட்டான். கங்க நாட்டு மன்னன் பூதுகனும் தன் பெரும் படையுடன் கன்னரதேவனோடு சேர்ந்து கொண்டான். வட கடலும் தென் கடலும் ஒன்று சேர்ந்தாற்போல் இரட்டை மண்டல சைன்யமும் கங்க நாட்டுப் பூதுகன் சைன்யமும் சேர்ந்து ஒரு மகா சமுத்திரமாகி முன்னேறி வந்தது. அந்தச் சமுத்திரத்தில் யானைகளாகிற திமிங்கலங்கள் ஆயிரக் கணக்கிலும் குதிரைகளாகிற மகர மீன்கள் பதினாயிரக் கணக்கிலும் இருந்தன. பிரளய காலத்தில் ஏழு கடலும் சேர்ந்து பொங்குவது போல் பொங்கி முன்னேறி வந்த அந்தச் சேனா சமுத்திரம் தென்னாட்டை அடியோடு மூழ்க அடித்து விடும் என்று தோன்றியது. அந்தச் சைன்யத்தைப் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொண்டு முன்னால் வாயுவேக மனோ வேகமாக ஓடி வந்து அறிவித்த நம் ஒற்றர்கள் அவ்வாறு சொன்னார்கள்.

ஆனால் இதுவும் ஒரு விதத்தில் நல்லதே என்று பராந்தக சக்கரவர்த்தி கூறினார். நம்முடைய சைன்யங்களைத் தொலை தூரம் பிரயாணம் செய்யப் பண்ணி, பிரயாணக் களைப்புடன் பகைவர்களின் நாட்டில் எதிரி சைன்யத்துடன் போர் புரியச் செய்வதைக் காட்டிலும், எதிரி சைன்யங்களை நமது நாட்டுக்குச் சமீபமாக இழுத்து அவர்களை நாலாபுறமும் மடக்கி அதம் செய்வது தான் நல்ல போர் முறை என்று சக்கரவர்த்தி கூறினார். எதிரி சைன்யம் வட வேங்கடம் வரை நெருங்கி விட்டதென்று தெரிந்த பிறகு தான் பிரயாணப்படுவதற்கு அனுமதி கொடுத்தார்.

அனுமதி கிடைத்ததோ, இல்லையோ. இராஜாதித்யர் புறப்பட்டு விட்டார். மூன்று லட்சம் காலாள் வீரர்களும், ஐம்பதினாயிரம் குதிரை வீரர்களும், பதினாயிரம் போர் யானைகளும், இரண்டாயிரம் ரதங்களும், முந்நூற்றிருபது தளபதிகளும், முப்பத்திரண்டு சிற்றரசர்களும் அப் பெரும் சைன்யத்தில் சேர்ந்து சென்றார்கள். அவர்களிலே ஒருவனாகச் செல்லும் பாக்கியம் எனக்கும் கிடைத்தது. ஆனால் உயிர் பிழைத்துத் திரும்பி வந்த துர்ப்பாக்கிய சாலியும் ஆனேன்.

மூன்று நாள் பிரயாணத்துக்குப் பிறகு காஞ்சிக்கு வடக்கே இரண்டு காத தூரத்தில் தக்கோலம் என்னும் இடத்தில் நம் படைகளும் எதிரிகளின் படைகளும் போர்க்களத்தில் சந்தித்தன!

ஆதித்தா! புராணங்களில் தேவேந்திரனுக்கும் விருத்திராசுரனுக்கும் நடந்த யுத்தம் பற்றிக் கேட்டிருக்கிறோம். இராம ராவண யுத்தம் பற்றியும் பாண்டவர் கௌரவர் யுத்தம் பற்றியும் அறிந்திருக்கிறோம். தக்கோலத்தில் நடந்த கோர யுத்தத்தை நேரில் பார்த்தவர்கள் அந்த யுத்தங்கள் எல்லாம் அற்பமானவை என்றே சொல்லுவார்கள். நம்முடைய படைகளைக் காட்டிலும் எதிரிகளின் படைகள் சுமார் இரண்டு மடங்கு அதிகமாயிருந்தன. ஐந்து லட்சம் வீரர்களும் முப்பதினாயிரம் போர் யானைகளும் அச் சைன்யத்தில் இருந்ததாகத் தெரிந்தது. இருந்தால் என்ன? உன்னுடைய பெரிய பாட்டனார் இராஜாதித்யரைப் போன்ற சேனாதிபதி அந்தச் சைனியத்தில் இல்லை. ஆகையால் வீர லக்ஷ்மியும் ஜயலக்ஷ்மியும் நம்முடைய பக்கத்திலேயே இருந்து வருவதாகத் தோன்றியது.

பத்து நாள் வரையில் யுத்தம் நடந்தது. இரு பக்கத்திலும் இறந்துபோன வீரர்களைக் கணக்கு எடுப்பது அசாத்தியமாயிற்று. போர்க் களங்களில் கரிய குன்றுகளைப் போல் யானைகள் இறந்து விழுந்து கிடந்தன. இரு பக்கத்திலும் சேதம் அதிகமாயிருந்தாலும், எதிரிகளின் கட்சியே விரைவில் பலவீனமடைந்தது. இதற்குக் காரணம் என்னவென்பதை எதிரிகள் கண்டு கொண்டார்கள். புலிக்கொடியைக் கம்பீரமாகப் பறக்க விட்டுக் கொண்டு இராஜாதித்யரின் யானை போகுமிடமெல்லாம் ஜயலக்ஷ்மியும் தொடர்ந்து போகிறாள் என்பதை அறிந்து கொண்டார்கள். எங்கெங்கே நமது படையில் சோர்வு ஏற்படுகிறதாகத் தென்பட்டதோ அங்கே இராஜாதித்யரின் யானை போய்ச் சேர்ந்தது. அந்த யானையையும் அதன் மீது வீற்றிருந்த வீர புருஷரையும் பார்த்ததும் நம் வீரர்கள் சோர்வு நீங்கி மும்மடங்கு பலம் பெற்று எதிரிகளைத்

தாக்கினார்கள். இதையெல்லாம் பத்து நாளும் கவனித்து வந்த பகைவர்கள் ஒரு படுபாதகமான சூழ்ச்சி செய்தார்கள். அது சூழ்ச்சி என்று பின்னால்தான் தெரிய வந்தது. சூழ்ச்சி செய்தவனும் அதை நிறைவேற்றி வைத்தவனும் கங்க மன்னன் பூதுகன்தான். திடீரென்று அந்தப் பாதகன் தன் யானையின் மீது சமாதானக் கொடியைப் பறக்க விட்டுக் கொண்டு இரண்டு கைகளையும் தலைக்கு மேல் தூக்கிக் கொண்டு 'சரணம்! சரணம்!' என்று கூவிக் கொண்டு வந்தான். அச்சமயம் இராஜாதித்யரே சமீபத்தில் இருந்தார். புலிக் கொடி பறந்த அவருடைய யானையின் அம்பாரியைப் பார்த்த பின்னரே பூதுகன் அவ்வாறு செய்திருக்க வேண்டும். மகா வீரராகிய இராஜாதித்யர் இவ்வாறு ஒரு பகை மன்னன் 'சரணாகதி' என்று சொல்லிக் கொண்டு வருவதைப் பார்த்ததும் மனம் இளகி விட்டார். இரட்டை மண்டலச் சக்கரவர்த்தியே போரை நிறுத்திச் சமாதானம் கோருகிறாரா அல்லது அவரைப் பிரிந்து இந்தப் பூதுகன் மட்டும் நம்முடன் சேர வருகிறானா என்று தெரிந்து கொள்ள விரும்பினார். ஆகையால் சங்க நாதம் செய்து தன்னைச் சுற்றி நின்ற மெய்காப்பாளரை விலகச் செய்தார். பூதுகன் ஏறியிருந்த யானையைத் தாம் ஏறியிருந்த யானைக்கு அருகில் வரும்படி சமிக்ஞை செய்தார். பூதுகன் இராஜாதித்யரின் அருகில் வரும் வரையில் கைகூப்பிய வண்ணம் வந்தான். அவனுடைய கண்களிலிருந்து கண்ணீர் பெருகியதையும் இராஜாதித்யர் பார்த்தார். இதனால் அவருடைய மனம் இன்னும் இளகி விட்டது.

**'தொழுத கையுள்ளும் படையொடுங்கும், ஒன்னார்**
**அழுத கண்ணீரும் அனைத்து'**

என்னும் தமிழ்நாட்டுப் பெரும் புலவரின் வாக்கு அச்சமயம் இராஜாதித்யரின் ஞாபகத்தில் இருக்கவில்லை. கண்ணீரைக் கண்டு கரைந்து விட்டார். இன்னும் சமீபமாகப் பூதுகனை வரவிட்டு, 'என்ன சேதி?' என்று கேட்டார். அதற்கு அவன் கூறிய மறுமொழி இராஜாதித்யரை அருவருப்புக் கொள்ளும்படி செய்தது. இரட்டை மண்டலப் படைகளுக்குத் தோல்வி நிச்சயம் என்று தெரிந்து விட்டதால் சரணாகதி அடைந்து விடும்படி கன்னர தேவனிடம் தான் கூறியதாயும், அவன் அதை மறுத்து விட்டபடியால் தான் மட்டும் தனியே பிரிந்து வந்து சரணாகதி அடையத் தீர்மானித்ததாகவும் பூதுகன் கூறினான். இதைக் கேட்டதும் இராஜாதித்யர் அவனைக் கடுமையாக நிந்தித்தார்.

அத்தகைய நீசனைத் தாம் தம் கட்சியில் சேர்த்துக் கொள்ள முடியாது என்றும், திரும்பிப் போகும்படியும் கூறிக் கொண்டிருக்கும்போதே, பூதுகன் கண்மூடிக் கண் திறக்கும் நேரத்தில் அந்தப் பயங்கரமான வஞ்சகச் செயலைப் புரிந்து விட்டான். மறைவாக வைத்திருந்த வில்லையும் அம்பையும் எடுத்து வில்லில் நாணேற்றி அம்பைப் பூட்டி எய்து விட்டான். அந்தக் கொடிய விஷம் தோய்ந்த அம்பு எதிர்பாராத சமயத்தில் இராஜாதித்யரின் மார்பில் பாய்ந்ததும் அவர் சாய்ந்தார். இப்படிப்பட்ட வஞ்சனையை யாரும் எதிர்பார்க்கவில்லையாதலால் சுற்றிலும் நின்ற வீரர்கள் என்ன நேர்ந்தது என்பதையே சிறிது நேரம் தெரிந்து கொள்ளவில்லை. இராஜாதித்யர் பூதுகனைத் திரும்பிப் போகும்படி கட்டளையிட்டது மட்டும் அவர்கள் காதில் விழுந்தது. உடனே பூதுகன் தன் யானையை விரட்டி அடித்துக் கொண்டு ஓடிப் போனான்!

இராஜாதித்யர் யானை மேலிருந்தபடியே மரணமடைந்தார் என்ற செய்தி பரவியதும் நமது படையைச் சேர்ந்தவர்கள் அனைவருக்கும் தனித் தனியே தலையில் இடி விழுந்ததுபோல் ஆகி விட்டது. அந்த மாபெரும் துயரத்தினால் யுத்தத்தையே மறந்து விட்டார்கள். சிற்றரசர்கள், தளபதிகள், படை வீரர்கள் எல்லாருமே செயல் இழந்து புலம்பத் தொடங்கி விட்டார்கள். அந்த நிலைமையில் பகைவர்களின் கை ஓங்கி விட்டதில் ஆச்சரியம் இல்லையல்லவா? சிறிது நேரத்துக்கெல்லாம் நமது சைனியம் பின் வாங்க வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது. ஓடுகிறவர்களைத் துரத்துவது எல்லாருக்குமே எளிது தானே? அப்படி ஓடி வந்தவர்களில் நானும் ஒருவன்தான்! இந்தக் கெடில நதிக்கரை வரையிலே கூடப் பகைவர்களின் சைனியம் வந்துவிட்டது. இங்கே வந்த பிறகுதான் நாங்கள் சுய உணர்வு பெற்றுத் திரும்பி நின்றோம். பகைவர்களைத் தடுத்து நிறுத்தினோம். நான் திருக்கோவலூரிலிருந்து என் குடும்பத்தாரை அழைத்துக் கொண்டு போய் மேற்கே மலை நாட்டில் இருக்கும் என்னுடைய கோட்டையிலே விட்டேன்.

அந்த மலைச்சாரலிலேயே படைகளைத் திரட்டினேன். இந்தக் கெடில நதிவரையில் வந்துவிட்ட பகைவர்களை அவ்வப்போது தாக்கிக் கொண்டு வந்தேன். ஆயினும் அப்போது வந்த பகைவர்கள் பல வருஷ காலம் இந்தப் பகுதியை விட்டுப் போகவில்லை. அங்குமிங்கும் தங்கித் தொல்லை கொடுத்துக் கொண்டுதானிருந்தார்கள். காஞ்சி நகர் அவர்கள் வசத்திலேதான் இருந்தது. மூன்று ஆண்டுகளுக்கு முன்னால் நீ வீரபாண்டியனை முறியடித்த பிறகு இந்தப் பக்கம் வந்துதான் காஞ்சி நகரை மீட்டாய்......''

ஆதித்த கரிகாலன் மீண்டும் குறுக்கிட்டு, ''தாத்தா! இதெல்லாம் எனக்கு முன்னமே தெரிந்ததுதான்! ஆனால் தக்கோலப் போரைப் பற்றியும் இராஜாதித்யர் வரலாற்றையும் எத்தனை தடவை கேட்டாலும் எனக்கு அலுப்பதில்லை. இப்போது இராஜாதித்யரைப் பற்றி எனக்கு எதற்காக நினைப்பூட்டினீர்கள்? அதைச் சொல்லுங்கள்!'' என்றான்.

''குழந்தாய்! உன் பெரிய பாட்டனார் இராஜாதித்யர் சோழ சாம்ராஜ்யத்தை இலங்கை முதல் கங்கை நதிவரையில் விஸ்தரிக்க ஆசை கொண்டிருந்தார். அந்த ஆசை நிறைவேறாமலே உயிர் நீத்தார். அவரைப் போன்ற மகா வீரன் என் பேரன் ஆதித்த கரிகாலன் என்று நாடு நகரமெல்லாம் பேச்சாயிருக்கிறது. அவர் சாதிக்க நினைத்த காரியத்தை நீ சாதிக்கப் போகிறாய் என்று இத்தமிழகமெங்கும் ஜனங்கள் பேசிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் இராஜாதித்யரைப் போல் நீயும் வஞ்சகத்திற்கு ஏமாந்து போகக் கூடாது என்பதற்காகவே அவருடைய வரலாற்றை உனக்கு நினைவூட்டினேன்...''

''தாத்தா! என் பெரிய பாட்டனார் போர்க்களத்தில் பகைவர்களின் வஞ்சனையினால் உயிரை இழந்தார். அதை இப்போது எனக்கு எதற்காக நினைவூட்டுகிறீர்கள்? நான் போர்க்களத்துக்குப் போகவில்லையே? என்னை வஞ்சிக்கக் கூடிய பகைவர்களின் மத்தியிலும் போகவில்லையே? என் தந்தையின் அத்யந்த நண்பர்களையல்லவா பார்க்கப் போகிறேன்? அவர்கள் என்னை எந்த விதத்தில் எதற்காக வஞ்சிக்கப் போகிறார்கள்?'' என்றான் ஆதித்த கரிகாலன்.

''கேள், கரிகாலா! எதிரிகள் தொழுத கையிலும் அழுத கண்ணீரிலும் கொடிய ஆயுதம் இருக்கக் கூடும் என்று கூறிய திருவள்ளுவர் பெருமான், வெளிப் பகையைக் காட்டிலும் உட்பகை கொடியது என்றும் கூறியிருக்கிறார்.

**'வாள்போல் பகைவரை அஞ்சற்க—அஞ்சுக
கேள் போல் பகைவர் தொடர்பு'**

வாளைப் போல் வெளிப் படையாக எதிர்த்து நிற்கும் பகைவர்களிடம் பயம் வேண்டியதில்லை; சிநேகிதர்களைப் போல் நடிக்கும் பகைவர்களிடமே பயப்பட வேண்டும் என்று சொல்லியிருக்கிறார். குழந்தாய்! கேளிரைப் போல் நடிக்கும் பகைவர்களின் மத்தியில் இப்போது போகிறாய். நான் வேண்டாம் என்று தடுத்தும் கேளாமல் நீ போகிறாய். ஏதோ ராஜ்யம் சம்பந்தமாகத் தகராறு நேர்ந்துவிட்டதாகவும் அதைத் தீர்த்து வைக்கப் போவதாகவும் உன்னை அழைத்திருக்கிறார்கள். சம்புவரையன் மகள் ஒருத்தியை உன் கழுத்தில் கட்டிவிட உத்தேசித்து உன்னை அழைத்திருப்பதாகவும் அறிகிறேன். ஆனால் அவர்களுடைய உண்மையான நோக்கம் இன்னதென்பது எனக்கும் தெரியாது; நீயும் அறிந்திருக்க முடியாது. உனக்குப் பெண் கொடுப்பதற்கு இந்தப் பாரத தேசத்தில் மன்னாதி மன்னர்கள் பலர் காத்திருக்கிறார்கள். இந்தச் சம்புவரையன் மகள் தான் வேண்டுமென்பதில்லை. இராஜ்யத்தை உனக்குப் பாதி என்றும் மதுராந்தகனுக்குப் பாதி என்றும் பிரித்துக் கொடுத்துச் சமாதானம் செய்விக்கப் போகிறார்கள் என்றும் கேள்விப் படுகிறேன். அதில் என்ன சூது இருக்குமோ, சூழ்ச்சி இருக்குமோ, எனக்குத் தெரியாது. எது எப்படியானாலும், நான் உடனே திருக்கோவலூருக்குச் சென்று என்னுடைய பாதுகாப்புப் படைகளையெல்லாம் திரட்டிக் கொண்டு வந்து வெள்ளாற்றங் கரையில் தங்கியிருப்பேன். சம்புவரையர் அரண்மனையில் இருக்கும்போது உனக்கு ஏதேனும் சந்தேகம் தோன்றினால் எனக்கு உடனே சொல்லி அனுப்பு!......''

இச்சமயம் ஆதித்த கரிகாலனுடைய கவனம் தன் பக்கம் இல்லை என்பதையும் வேறு பக்கம் திரும்பியிருக்கிறதென்பதையும் மலையமான் கண்டார்.

''தாத்தா! அதோ பாருங்கள்!'' என்று ஆதித்த கரிகாலன் கலக்கத்துடன் கூறிய வார்த்தைகளை அந்த வீரக் கிழவர் கேட்டு, அந்தத் திசையை உற்று நோக்கினார்.

(தொடரும்)

# என்றுமே மதிப்பில் குறையாத முதலீடுகள்.

## நேஷனல் ஸேவிங்ஸ் ஸர்ட்டிபிகேட்டுகள்.

## பத்து வருஷ ட்ரெஷரி ஸேவிங்ஸ் டிபாஸிட்டுகள்.

கிடைக்கும் வட்டிக்கு

## வரி கிடையாது

இந்த முதலீடுகள் சம்பந்தமான இதர விபரங்கள், அல்லது விதிகளுக்கு, நேஷனல் ஸேவிங்ஸ் கமிஷனர், கார்ட்டன் காஸில், ஸிம்லா-3 என்கிற விலாசத்துக்கு எழுதவும்.

AC 380



# யாழ்நகரில் தமிழ்த்திருவிழா

## பகீரதன்

— சென்ற வாரத் தொடர்ச்சி —

கவிஞர்களும், புலவர்களும் தங்கள் கற்பனா சக்தியால், அறிவுத் திறமையால் எத்தனை எத்தனையோ அற்புதங்களைச் செய்து விடுகிறார்கள். சூரியனையும் சந்திரனையும் ஒரே சமயத்தில் பிரகாசிக்கச் செய்து காட்டுகிறார்கள். நம்மை எல்லாம் எங்கோ அழைத்துச் சென்று பல காட்சிகளை நம் உளக் கண்ணால் பார்த்து மகிழும்படி செய்கிறார்கள். இப்படி உளக் கண்ணால் தமிழ் மொழியின் வளத்தையும், பழந் தமிழ் காலத்திலிருந்து பாரதியார் காலம் வரையில் இருக்கும் தமிழின் இயல்பையும், காதல் மூலமாக ஏற்படும் உலக ஒற்றுமையையும், சாம்ராஜ்ய உணர்ச்சி இன்றி வாழ்ந்த பண்டையத் தமிழர்களின் வாழ்க்கையையும் பார்த்து மகிழும் பாக்யத்தைப் பெற்றார்கள், தமிழ் விழாவில் கூடியிருந்த பல்லாயிரக்கணக்கான மக்கள். விழாத் தலைவர் திரு. வி. க. அவர்கள் நிகழ்த்திய தலைமைப் பேருரையில்தான் மேற்படி காட்சிகளைக் கண்டு பிரமித்தார்கள்.

தமிழ்த் திருமுனிவர் திரு. வி. க. அவர்கள் தமக்கே உரிய இலக்கியப் பண்பு வாய்ந்த இன்பத் தமிழில் காதல் கொள்கையைக் கவர்ச்சிகரமாக வற்புறுத்தினார். உடல் நலம் வெகுவாகக் குன்றியிருந்தும், புறக் கண் செயல்படாமல் இருந்தும், உறுதியான உள்ளத்துடன், உளக் கண்ணால் தமிழ்ப் பெரு மக்களைப் பார்த்துக் கணீரென்ற குரலில் கன்னித் தமிழில் பேசினார். தூய கதர் ஆடை தரித்து, கண்களில் கருப்புக் கண்ணாடி மிளிர உட்கார்ந்த வண்ணம் இடது கையின் ஆட்காட்டி விரலை உயர்த்தி எச்சரிக்கை விடுவது போல் பேசினார். குழைந்து குழைந்து கொஞ்சுவது போல் பேசினார். இந்த வயோதிக காலத்தில் வாய்தான் வலிக்காதோ! வார்த்தைக்கேனும் தடை கிடையாதோ என்று வியக்கும் வண்ணம் பேசினார். "காதலில் ஊன்றி ஊன்றி, ஒன்றி ஒன்றி, கடவுள்பால் செல்லலாம். காதலின் முதிர்ச்சியே கடவுள்" என்று கூறி அறப் பொருளின் உயிரான காதல் உலக மெங்கும் பரவ வேண்டும் என்று வற்புறுத்தினார். "உலகம் உடல், இந்தியா உளம், தமிழ் உயிர்" என்று போற்ற வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். தமிழ் மொழியைத் தெய்வமாகக் கொண்டு வந்து கண் முன் நிறுத்தினார். அத்தகைய தெய்வத் தமிழைப் போற்றி வளர்க்க வேண்டும் என்று கூறிவிட்டு, "தமிழ் வாழ்க!" என்று வாழ்த்தித் தமிழ்ப் பெரு மக்களின் உணர்ச்சி மிகுந்த கரகோஷங்களுக்கு இடையில் தம் தலைமைப் பேருரையை முடித்தார்.

தமிழ்த் திருவிழாவின் இரண்டாவது நாள் காலை நிகழ்ச்சி இனிது முடிந்தது.

** ** **

ஸ்ரீ டி. கே. ஷண்முகம் அவர்கள் கணீரென்ற குரலில் கடவுள் வணக்கம் பாட விழாவின் பிற்பகல் நிகழ்ச்சி ஆரம்பமாயிற்று.

"தமிழ் மக்கள் எங்கிருந்தாலும் மொழியும் கலாசாரமும் அவர்களைப் பிணைத்துக் கொண்டிருக்கின்றன. இந்தியாவுக்கும் இலங்கைக்கும் உள்ள மொழி, பண்பாடு ஆகிய கலாசாரத் தொடர்பை யாராலும் தகர்க்க முடியாது" என்று கூறி ஓவியச் சிறப்புப் பகுதிக்குத் தலைமை வகிப்பதற்கு வந்திருந்த இலங்கை மந்திரி ஸ்ரீ க. நடேச பிள்ளை அவர்களை நம் நிதி மந்திரி ஸ்ரீ சி. சுப்ரமணியம் வரவேற்றார்.



இலங்கை மந்திரி ஸ்ரீ நடேச பிள்ளை

ஆசிரியர் கல்கி அவர்கள் ஸ்ரீ நடேச பிள்ளையைத் தமிழ் மக்களுக்கு அறிமுகப் படுத்தினார். "இலங்கையில் வாழும் தமிழர்கள் தமிழ் நாட்டைத் தாய் நாடென்றும் இலங்கையைச் சேய் நாடென்றும் கூறுகிறார்கள். சேய் நாட்டிலும் தாய் நாட்டில் உள்ளது போல் பல அரசியல் கட்சிப் பிரிவினைகள் இருக்கின்றன. ஆனால் எல்லாக் கட்சியாரும் தமிழ் மொழியைப் போற்றுவதில் ஒன்று பட்டதைச் சென்ற முறை யாழ்ப்பாணத்தில் நடந்த தமிழ் விழாவில் கண்டோம். ஸ்ரீ எஸ். நடேசன் அரசாங்கக் கட்சியைச் சேர்ந்தவர். ஆயினும் தமிழன்பர்கள் அனைவரும் ஒரு முகமாக யாழ்ப்பாணத் தமிழ் விழாவின் வரவேற்புக் கமிட்டித் தலைவராக ஸ்ரீ நடேச பிள்ளையைத் தேர்ந்தெடுத்தார்கள். இதிலிருந்து இலங்

கைத் தமிழர்களுக்கு ஸ்ரீ நடேச பிள்ளையிடம் இருக்கும் மதிப்பு ஒருவாறு தெரிகிறதல்லவா !'' என்று ஸ்ரீ நடேச பிள்ளைக்கு இலங்கையில் உள்ள செல்வாக்கை எடுத்துக் காட்டினார்.

"ஸ்ரீ நடேச பிள்ளை அவர்களை இலங்கை மந்திரி என்ற முறையில் நாங்கள் தமிழ் விழாவுக்கு அழைக்கவில்லை. அவரைத் தமிழர் என்ற முறையிலேயே, தமிழின் மீது பற்றுடையவர் என்ற முறையிலேயே வரவழைத்தோம். அவரை நாங்கள் தமிழ் விழாவுக்கு அழைக்கும்போது அவர் எந்தப் பதவியையும் வகிக்கவில்லை. அதன் பிறகு நடந்த தேர்தலில் அரசாங்கக் கட்சியின் சார்பில் நின்று வெற்றி பெற்றுக் கடைசியில் மந்திரியும் ஆனார்'' என்று கூறி நம் நாட்டில் தேர்தலில் தோற்றுப் போன சிலரை உற்சாக மூட்டினார். அப்போது சபையோர் அந்த ஹாஸ்யத்தை ரஸித்துக் கைதட்டிச் சிரித்து மகிழ்ந்தனர்.

"இன்று தமிழ் விழா மிகச் சிறப்பாக ஆரம்பமாயிற்று. தமிழ் நாட்டின் தவப் புதல்வரான ராஜாஜி ஆரம்பித்து வைத்த சிறப்பைக் காணாத கண் என்ன கண்ணே ! கேளாத செவியென்ன செவியே!'' என்று ஸ்ரீ நடேச பிள்ளை தம் தலைமை உரையைத் தொடங்கிய விதமே காவிய நயத்துடன் இருந்தது. தூய செந்தமிழ்ச் சொற்களால் இலக்கண வழுவில்லாமல் நின்று நிதானமாக ஆடாமல் அசையாமல் அவர் பேசியபோது ஒரு ஓவியமோ சிற்பமோ நம் முன் நின்று பேசுகிறதோ என்று எண்ணி வியக்கும்படி இருந்தது. பால்போன்ற தூயவெள்ளை ஆடை தரித்து, அழகிய தலைப்பாகை அணிந்து கழுத்தில் அணிவித்த ரோஜா மலர் மாலையைக் கழற்றாமல் அவர் பேசியதைப் பார்த்து ஓவியச் சிற்பப் பகுதிக்குச் சரியான தலைவர் இவர்தான் என்று எல்லாரும் ஒருமுகமாகச் சொன்னார்கள். மாலை அணிவித்ததின் மதிப்பை உணர்ந்து அதைக் கழற்றாமல் பேசிய கண்யத்தைச் சொல்லி வியந்தார்கள். சோழவளநாடு நம் காலத்தில் அளித்திருக்கும் சிறந்த பண்பாடுள்ள தமிழர்களில் ஒருவர் ஸ்ரீ நடேச பிள்ளை. அவர் சேய் நாடான இலங்கையில் தமிழர்களுக்கு வேண்டிய பணியை உயரிய முறையில் செய்து வருகிறார்.

"தமிழ் நாட்டிலிருந்து ஈழ நாட்டுக்குச் சென்ற சோழ மன்னன் அங்கு நாக கன்னிகையை மணந்து கொண்டான். சோழ மன்னனுக்கும் ஈழத்து மங்கைக்கும் பிறந்த ஆதொண்டன் என்னும் மன்னன்தான் தொண்டை நாட்டின் முதல் மன்னனாக இருந்து ஆட்சி புரிந்தான்'' என்று கூறி, தமிழ் விழா ஈழநாட்டில் நடந்த பிறகு தொண்டை நாட்டில் நடப்பதின் பெருமையைச் சரித்திர சம்பந்தமான நிகழ்ச்சியுடன் சம்பந்தப் படுத்திச் சுவையோடு சொன்னார்.

"தமிழ் நாட்டில் நாஸ்திகம் பரவினால் தமிழ்க் கலை இறந்தொழியும். தமிழ்க் கலைக்கு உயிர் தெய்வப் பற்றே ஆகும். அதை இழக்கக் கூடாது'' என்று எச்சரிக்கை விடுத்தார். உலகமெங்கும் பரவிக் கிடக்கும் தமிழர் நாகரிகத்தை நல்ல தமிழில் எடுத்து நயம்பட உரைத்தார். ஓவியத்தையும் சிற்பத்தையும் பற்றியே அறியாதவர்களும் தெரிந்து தெளியும்படியாக விளக்கமாகவும் நகைச்சுவையுடனும் பேசினார். "ஓயாது பேசித் தொல்லை கொடுத்து வந்த தம் மனைவியை ஐரோப்பியர் ஒருவர் நல்ல துணையுடன் உலகம் சுற்ற அனுப்பி வைத்தார். அப்போதாவது தம் மனைவியின் பேச்சு நிற்கிறதா ! என்று பார்க்க முனைந்தார். பல நாடுகளுக்கு அந்த ஐரோப்பிய அம்மணி சென்றார். கடைசியில் இந்தியாவுக்கு வந்தார். தாஜ்மகாலைப் பார்த்தார். அதுவரை தொண தொணவென்று பேசி வந்த அம்மையார் தாஜ்மகாலைப் பார்த்து வாயடைத்து நின்று விட்டார். அம்மையாருக்குத் துணையாக வந்தவர் அவர் கணவருக்கு உடனே ஒரு தந்தி கொடுத்தார். 'தங்கள் மனைவியின் தொண தொணப்பை அடக்கும் சக்தி இந்தியக் கலைகளுக்கே இருக்கிறது' என்று.'' இந்த ரீதியில் உதாரணம் கொடுத்துப் பேசி மனத்தை ஊடுருவி மாற்ற வல்லது நம் நாட்டுக் கலை ஒன்றுதான் என்பதைத் தெளிவுபடுத்திச் சபையினர் உணர்ந்து ரஸித்து மகிழும்படி செய்தார்.

பிறகு "இந்திய சிற்பக் கலை'' என்பது பற்றிப் பேசிய ஸ்ரீ டி. எம். தெய்வசிகாமணி ஆச்சாரியார் அவர்கள் 4,500 வருஷ காலத்துக்கு முந்தையிலிருந்து தமிழ் நாட்டில் இருந்து வரும் சிற்பக் கலையின் சிறப்பைப்பற்றிச் சிறந்த ஆராய்ச்சி நிறைந்த சொற்பொழிவு நிகழ்த்தினார்.

கலைக்கும், இலக்கணம், சங்கீதம், மொழி முதலியவைகள் உண்டு. ஒரு சிற்பத்தையோ ஓவியத்தையோ பார்த்தால் அது விளக்கும் நிலையை உணர்ந்து கொள்ளுவதுதான் "கலை பேசும் பேச்சாகும்'' என்றார் ஸ்ரீ கி. சந்திரசேகரன்.

ஸ்ரீ தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் "கோவில் ஏன்'' "ஸ்வாமி ஏன் !'' என்று கேட்கும் கலை மனமற்ற கூட்டத்தினருக்கு, "கோயிலும் கலையும்'' இருக்க வேண்டிய அவசியத்தை வற்புறுத்திக் காரண காரியங்களுடன் இலக்கிய சரித்திர ஆராய்ச்சியுடன் கூடிய அழகிய சொற்பொழிவு ஒன்றை நிகழ்த்தினார்.

தமிழ்த் திருவிழாவில் மிக முக்கியமான நிகழ்ச்சி, நூல்களுக்குப் பரிசு வழங்குவது தான் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் தலைவர் ஸ்ரீ டி. எஸ். அவினாசிலிங்கம் அந்தத் திருப்பணியை நிறைவேற்றினார். பரிசு கொடுக்கும் போது அவர் ஆற்றிய சொற்பொழிவு தமிழ் வளர்ச்சியிலும் தமிழ் நாட்டின் முன்னேற்றத்திலும் அவருக்கு உள்ள ஆர்வத்தை எடுத்துக் காட்டுவதாயிருந்தது. தமிழ் வளர்ச்



தமிழ் விழாவின் வெற்றிக்கு முக்கிய காரணஸ்தரான பொக்கிஷதார் ட்ரேஷரர் ஸ்ரீ அண்ணாமலைச் செட்டியார்.



தமிழ் விழாவில் 'சமுகம் தந்த' யாழ்ப்பாணத்து நண்பர்கள் சிலரும் தமிழ் விழா நிர்வாகிகளும்.
(பெண்மணிகள் : ஸ்ரீமதி சௌந்தரம் கைலாஸம், டாக்டர் திரிபுர சுந்தரி "லக்ஷ்மி")

சிக் கழகத்தின் ஆண்டு அறிக்கையை ஸ்ரீ பெரிய சாமித் தூரன் விடுவிடு வென்று படித்து முடித்தார். தமிழ்க் கலைக் களஞ்சியத்தின் நாலு பாகங்கள் டிஸம்பர் மாதத்துக்குள் அச்சுவாகன மேறி விடும் என்பதையும் அறிவித்தார். இந்த வருஷம் விழாவில் பரிசு பெற்ற அறிஞர்கள் பெயர்களையும், நூல்களையும் அடுத்த பக்கத்தில் காணலாம்.

"கருத்தும் கண்ணும் அமைந்ததுதான் ஓவியம். ஓவியம் என்னும் கின்ன மிருந்தால் போதாது, வண்ணமிருந்தால் போதாது, எண்ணம் வேண்டும்" என்று கூறி, கம்ப ராமாயணம் சிலப்பதிகாரம் தொல்காப்பியங்களிலிருந்து மேற்கோள் காட்டி, "இலக்கியத்தில் ஓவியம்" என்பதை எடுத்து விளக்கினார் ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன்.

ஸ்ரீ நடேச பிள்ளையின் அருமையான உரையுடன் இரண்டாம் நாள் திருவிழா முடிந்தது.

இரவு ஒன்பது மணிக்கு ஸ்ரீ ராமகிருஷ்ண கிருபா அமெச்சூர்ஸ் நாடக சபையாரின் "சிவகாமியின் சபதம்" நாடகம் நடந்தது

"கல்கி" ஆசிரியர் எழுதிய தமிழ் நாட்டுச் சரித்திரத்தின் மகோந்நத காலத்தைச் சித்திரிக்கும் சரித்திரக் கதையைத் தமிழ் விழாவில் நாடகமாக நடித்தது இந்த ஆண்டு தமிழ் விழாவுக்கே ஒரு சிறப்பு அளித்தது என்று கூறலாம். பல்லவ மன்னரின் சபையில் சிவகாமியின் நடன அரங்கேற்றத்திலிருந்து சிவகாமி தன்னையும் தன் கலையையும் சிவபெருமானின் தாளில் சேர்த்தது வரையில் நாலு மணி நேரமும் உணர்ச்சியும், வேகமும் குறையாமல் நடித்தார்கள். தமிழ் நாட்டின் பழைய நாகரிகம் தமிழர்களின் உயர்ந்த பண்பு. வீரம் எல்லாம் செறிந்த இந்தச் சரித்திரக் கதையைப் பார்ப்பதற்கு மக்கள் எட்டு மணிக்கே வந்து நிறைந்து விட்டனர். பூமியில் வேர் ஊன்றியவர்களைப் போல் இரவு இரண்டு மணி வரையில் உட்கார்ந்திருந்தனர். இப்படி அவர்களை மெய்மறக்கும்படி அற்புதமாக நடித்ததுடன் இல்லாமல் நாடகத்தின் பல சம்பவங்களும் மக்கள் மனத்தை விட்டும் அகலவில்லை என்பது மறுநாள் விழாவில் பேசிய ஒவ்வொருவரும் அந்த நாடகத்தில் இருந்து ஏதாவது ஒரு நிகழ்ச்சியை எடுத்துக் குறிப்பிட்டதிலிருந்து தெரிந்தது.

நடிகர்கள் அனைவரும் பண்பாடு பெற்ற அறிவாளிகள். கதைப் போக்கையும் பாத்திரங்களின் மனோதத்துவத்தையும் கதை நடந்த காலத்து இயல்பையும் நன்கு தெரிந்து நடித்தார்கள். பாட்டு, பேச்சு, காட்சி ஜோடனை, பின்னணிச் சங்கீதம் ஆகிய பல அம்சங்களுடன் "சிவகாமியின் சபதம்" நாடகம் சிறந்து விளங்கியது.

** ** **

திருவிழாவின் மூன்றாவது நாள். ஸ்ரீமதி எம். எல். வசந்தகுமாரியின் கடவுள் வணக்கப் பாடலுடன் விழா ஆரம்பமாயிற்று. இன்று வான சாஸ்திர மகாநாடும், இலக்கியத் துறை மகாநாடும் நடந்தேறின. வானசாஸ்திரத் துறைத் தலைவர் ஸ்ரீமதி ராஜேச்வரி அம்மையார் விஞ்ஞான விஷயங்களைத் தமிழ்ப்படுத்திச் சொல்லுவதில் அருமையான தொண்டாற்றி வருகிறார் என்பது எல்லோரும் அறிந்தது. பேச்சு வன்மையும் படைத்தவர். நல்ல தமிழ்ப் பயிற்சி பெற்றவர். பிறகு கேட்பானேன். அழகான உபயோகமான சொற்பொழிவு ஒன்று கிடைத்தது. விஞ்ஞான விஷயம் எவ்வளவு சிரமமானது என்பதை நான் எடுத்துச்



தமிழ்த் திருவிழாவில் வந்து கலந்துகொண்ட சைக்கிள்களில் ஒரு பகுதி

சொல்ல வேண்டியதில்லை. அதையும் ஸ்ரீமதி ராஜேஸ்வரி அம்மையார் கதா கலாக்ஷேபம் செய்வது போல் ரஞ்சகமாகச் செய்தார். அங்கு கூடியிருந்த மக்களைத் தம்முடைய வாக்கு வன்மையால் சூரிய மண்டலத்துக்கும் அதற்கு அப்பாலும் அழைத்துச் சென்று அங்குள்ள நிலைமைகளை நேரிலேயே பார்த்துத் தெரிந்து கொள்ளும்படி செய்தார். ஒவ்வொரு நட்சத்திர மண்டலத்தையும் வேறு பல மண்டலங்களையும் காட்டிக் கொண்டு வந்து கடைசியாகத் தமிழ் விழாவுக்கு மக்களை அழைத்து வந்தது சிறந்த நாடகப் பண்பு வாய்ந்த பேச்சாக இருந்தது.

"இலட்சியமும் முயற்சியும்" என்பதைப் பற்றி பெ. நா. அப்புசாமி பேசினார். வான சாஸ்திரத்தின் தொன்மையையும், அறிவுத் துறையிலும் கற்பனைத் துறையிலும் அது வளர்ந்து வந்திருப்பதையும் அவர் விளக்கினார்.

இந்தக் காலத்து வல்லுனர்களின் விஞ்ஞான ஆராய்ச்சி அறிவுக்கு நம் முன்னோர்கள் எந்த விதத்திலும் குறைந்தவர்கள் இல்லை என்று பெருமைப்பட்டார், "பண்டைய வான சாஸ்திரத்"தைப் பற்றிப் பேசிய ஸ்ரீ வி. சீனிவாசராகவன். இத்துடன் வான சாஸ்திரப் பகுதி முடிவுற்றது.

** ** **

இலக்கியப் பகுதிக்குத் தலைமை தாங்கிய டாக்டர் பி. சுப்பராயன் அவர்கள் இந்தப் பகுதிக்குத் தலைமை தாங்க வேண்டிய ஸ்ரீ பி. டி. ராஜனின் பிரசங்கத்தை வாசித்தார். ஸ்ரீ பி. டி. ராஜன் அவர்களுக்கு இருக்கும் தமிழ் நாட்டுப் பற்றும், தமிழனும் தமிழ் நாடும் உயர வேண்டும் என்ற ஆர்வமும் அந்தப் பிரசங்கத்தில் உள்ளங்கை நெல்லிக்கனி போல் தெரிந்தது.

இலக்கியப் பகுதி மகாநாட்டில் ஸ்ரீ பி. டி. ராஜனின் தலைமை உரையைப் படித்த பிறகு வெவ்வேறு விஷயங்களைப் பற்றிப் பல இனிய சொற்பொழிவுகள் நிகழ்ந்தன. பன்மொழிப் புலவர் ஸ்ரீ தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், "தமிழர் பண்பாடு" என்பது பற்றி அழகான சொற்பொழிவு நிகழ்த்தினார். "'யாதும் ஊரே யாவரும் கேளிர்.' என்று தமிழன் கூறினான். அவன் உடலில் உலக ரத்தம் ஓடியது. அவன் உலகையே ஒரு குடும்பமாகக் கண்டான்" என்று தமிழரின் உயர்ந்த பண்பாட்டை எடுத்துக் காண்பித்தார். "தமிழ் நாடகம்" பற்றிப் பேசிய பேராசிரியர் அ. சீனிவாச ராகவன் நாடகப் பண்போடு பேசினார். பழைய காலத்து நாடக முறைகளை விளக்கிக் கூறினார். இக் காலத்து நாடகத்தில் இருக்கும் குறைகளைக் கவலையுடன் எடுத்துக் கட்டிக் காட்டினார். வரம்புள்ள அரங்கில் நின்று வரம்பற்ற பொருளை நன்கு உணர்ந்து நாடகம் நடிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். ஸ்ரீ பி. ஸ்ரீ ஆச்சார்யா அவர்கள் பாரதி யுகம் என்பது பற்றிப் பேசினார். பாரதியின் பாடலை அங்கங்கே எடுத்துக் காட்டிப் பேசினார். பாரதி பழமையில் புகுத்தியுள்ள புரட்சிக் கருத்தைப் புரியும்படி எடுத்துக் கூறினார்.

இந்தச் சொற்பொழிவுகளின் போது ரசிக்க வேண்டிய இடத்தில் ரசித்தும் கைதட்ட வேண்டிய இடத்தில் கை தட்டியும் சபையில் கலகலப்பை உண்டாக்கித் திருவிழாவுக்கு உயிர் கொடுத்து வந்தார்கள் தமிழ்ப் பெரு மக்கள். அவர்களுடைய இந்த உற்சாகத்தை எவ்வளவு பாராட்டினாலும் தகும். இத்துடன் இலக்கியப் பகுதியின் காலை நிகழ்ச்சி முடிந்தது.

பிற்பகல் நில்லையாடி ஸ்ரீ பாண்டுரங்கனின் இரு அருட்பா பாடலுடன் விழா ஆரம்பமாயிற்று. விழா ஆரம்பத்திலேயே பந்தல் கொள்ளாமல் ஜனங்கள் நிறைந்து விட்டனர். இப்படிக் கூடியிருந்த ஜனத்திரளைப் பார்த்துச் சற்று நேரம் கழித்து வந்த இலங்கை மந்திரி ஸ்ரீ நடேச பிள்ளை அவர்கள் "சங்க இலக்கியம் பற்றிய பேச்சுக்கு எங்கே கூட்டம் வரப் போகிறது என்று நேரம் கழித்து வந்து விட்டேன். இப் பந்தல் கொள்ளாது கூடியிருந்த மக்களையும், அதிலும் இளைஞர்களையும் பார்க்கும்போது தமிழ் வளர்ச்சிக்கு இதுவே சிறந்த அளவுகோலாகும்" என்று பாராட்டிப் புகழ்ந்தார்கள் என்றால் அன்று கூடியிருந்த கூட்டத்தை நீங்களே நினைத்துப் பார்த்துத் தெரிந்துகொள்ள வேண்டியதுதான்.

முதலில் "சங்க இலக்கியம்" பற்றி டாக்டர் மு. வரதராசனார் பேசினார். சங்க காலத்தில் வாழ்ந்த தமிழ் மக்களின் உயர்ந்த வாழ்க்கையை எடுத்துக் காண்பித்தார். வீட்டு வாழ்க்கையையும் நாட்டு வாழ்க்கையையும் விளக்குவதுதான் அகநானூறும் புறநானூறும் என்று எடுத்துக் கூறினார். இலக்கியம் என்பது வாழ்க்கையோடு தொடர்பு பெற்றது. அப்படி வாழ்க்கைக்குப் பயன்படுத்தும் முறையில்தான் சங்க இலக்கியங்களைப் படித்து அனுபவிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

"மெய்ப்பாட்டியலும் உளநூலும்" என்பது பற்றி இலங்கைப் பேராசிரியர் ஸ்ரீ ச. அருள்நந்தி

| எண் | பகுதி | நூல் | எழுதியவர் | வெளியீட்டகம் |
|---|---|---|---|---|
| 1. | ஆராய்ச்சி | ஓவச் செய்தி | டாக்டர் மு. வரதராசனார் | பாரி நிலையம், சென்னை |
| 2. | சிறு கதை | நொண்டிக் கிளி | திரு தி. ஜ. ரங்கநாதன் | கலைமகள் காரியாலயம், சென்னை |
| 3. | கட்டுரை | மேடைத் தமிழ் | திரு தெய்வசிகாமணி ஆச்சாரியார் | சொந்த வெளியீடு |
| 4. | நாவல்—நாடகம் | பெண் மனம் | டாக்டர் திரிபுரசுந்தரி | சக்தி காரியாலயம், சென்னை |
| 5. | சரித்திரம், பொருளாதாரம் அரசியல், சமூக நூல் | பாஞ்சாலங்குறிச்சி வீர சரித்திரம் | கவிராஜ பண்டிதர் ஜெகவீர பாண்டியனார் | திருவள்ளுவர் நிலையம் மதுரை |
| 6. | விஞ்ஞானம் | சக்தி | திரு ஆர். கே. விசுவநாதன் | சொந்த வெளியீடு |

அவர்கள் யாழ்ப்பாணத் தமிழில் பேசினார். யாழ்ப்பாணத்துத் தமிழைப் புரிந்து அனுபவிக்க முடியாத சபையோர் சிறிது திண்டாடிப் போனார்கள். பண்பாட்டியல் அறிந்த அறிவாளிகள் பேராசிரியர் வெளியிட்ட அருமையான கருத்துக்களை உய்த்துணர்ந்து மகிழ்ந்தார்கள்.

பிறகு பேசிய திரு ரா. பி. சேதுப் பிள்ளை அவர்கள் "தொண்டை நாடு" என்பது பற்றி இனிய தமிழில் கேட்போர் செவி குளிரப் பேசினார். தொண்டை நாட்டைப் பற்றிய அவர்கள் சொற்பொழிவு ஆராய்ச்சி மிக்கதாக ரஸமுள்ளதாக இருந்தது. ஸ்ரீ சேதுப் பிள்ளை பேசும்போது சபையில் அடிக்கடி கை தட்டலும் கலகலப்பு மாகவே இருந்தது என்றால் அவர் சொற்பொழிவைச் சபையோர் எப்படி ரஸித்து அனுபவித்து மகிழ்ந்தார்கள் என்று சொல்லவும் வேண்டுமா!

தமிழ் ஞானம் படைத்த ஸ்ரீ சிவஞான கிராமணியார் "வாழ்வும் வரலாறும்" என்பது பற்றிப் பேசினார். தமக்கே உரிய தனிப் பாணியில், வெண்கலக் கடையில் யானை புகுந்ததுபோல் பேசினார். தமிழனின் வரலாற்றையும வாழ்வையும் எடுத்துக் காட்டி "இப்போது இருக்கும் இக் கெட்டான நிலைமையைச் செப்பனிடுவதற்குப் பாடுபட வேண்டும் என்றார். பண்டைய தமிழர்களைப் போல ஒழுக்கத்துக்கு மதிப்புக் கொடுத்து வரலாற்றை மனத்தில் இருத்தி வாழ்க்கையைச் செம்மையாக நடத்த வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். தமிழ்நாடு தனி மாகாணமானால் தமிழுக்கு அரியாசனம் ஏற்றித் தரத் தமிழ் வளர்ச்சிக் கழகம் உதவ வேண்டும் என்று வேண்டிக் கொண்டு தம் வீரச் சொற்பொழிவை முடித்தார்.

** ** **

இந்த இலக்கிய மகாநாட்டில் ஒவ்வொருவரும் நகைச் சுவையுடனும் ரஸமான சிலேடைகளுடனும் விரிவாகவே பேசினார்கள். ஸ்ரீ சேதுப் பிள்ளையைப் பற்றி ஸ்ரீ நடேச பிள்ளை கூறிய சிறப்புரையில் "ஸ்ரீ சேதுப் பிள்ளை பாண்டிய நாட்டைச் சேர்ந்தவர். பாண்டியநாடுதான் சிறந்தநாடு என்று பெருமையுடன் சொல்லி வருபவர். அவர் தொண்டை நாட்டைப்போற்றித் தமிழ் விழாவில் பேச ஒப்புக் கொண்டது எனக்கு வியப்பையே அளிக்கிறது. அவர் தொண்டை நாட்டைப் பற்றிப் பேசும்போது பாண்டிய நாட்டைப் பற்றித்தான் கூறுவார். ஆனால் நான் இந்த இரண்டு நாட்டையும் சேராத சுமநாட்டிலிருந்து வந்தவன். அவர் பேச்சுக்கு நடுவயமாக நின்று தீர்ப்புக் கூறுவேன்" என்று கூறியபோது சபையோர் ஆரவாரித்துச் சிரித்து மகிழ்ந்தனர்.

இத்துமாதிரியே ஒவ்வொரு பிரசங்கிகளுக்குப் பிறகும் ஸ்ரீ க. நடேச பிள்ளை அவர்கள் பிரசங்கிகளைப் பற்றியும் அவர் பிரசங்கத்தின் முக்கிய அம்சங்களைப் பற்றியும் பொருத்தமாகவும் இனிமையாகவும் பேசி அந்தப் பெரிய சபையில் மணிக்கணக்காக அமர்ந்திருந்தவர்களுக்குச் சலிப்பு ஏற்படாதவாறு செய்து வந்ததுடன் அடிக்கடி உற்சாகமூட்டி வந்ததையும் குறிப்பிட வேண்டும்.

முடிவுரையாகத் தலைவர் திரு வி. க. அவர்கள் பேசும்போது தமிழன் என்றவுடன் நாம் ஒரு இனத்தவனாக இருக்க வேண்டும் என்றும் அதற்காக நாம் ஒருவரையும் பழிக்கக் கூடாது என்றும் கேட்டுக் கொண்டு தமிழர்கள் மீண்டும் குருகுலக் கல்விக்கு உயிர் அளிக்க வேண்டும் என்ற தம் கொள்கையை வலியுறுத்தித் தமிழர்கள் தமிழ் வளர்ச்சிக் கழகத்தை முழு மனத்தோடு ஆதரிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். "தமிழ் நாடு வாழ்க!" என்று வாழ்த்துக் கூறி முடித்

னார். தமிழ்த் திருவிழாவின் முடிவில் நன்றி கூறும் படலம் தொடங்குவதற்கு முன்னால் அந்தப் பெரிய சபையில் உள்ள அத்தனை பேரும் எழுந்து நிற்க ஆரம்பித்து விட்டனர். கல்கி ஆசிரியர் "நன்றி கூறும் போது அதை நின்று கொண்டே கேட்பது தான் சிறந்தது" என்று சொல்லி எல்லாரையும் அந்த இடத்தில் அப்படியே நிற்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். ஏதோ மந்திரத் தால் கட்டுண்டவர்கள் போல அப்படியே நின்று நன்றி கூறும் படலத்தைக் கேட்ட தமிழ்ப்பெரு மக்களின் பண்பாட்டுக்கு நன்றி கூறத்தான் வேண்டும். தமிழ் விழாக் காரியதரிசி ஸ்ரீ ராமசாமி நாயுடு அவர்கள் விழாவில் தொண்டாற்றியவர் களின் பெயர்களை யெல்லாம் சேகரித்து எழுதி எடுத்துக் கொண்டு ஒவ்வொன்றாகப் படித்துச் சபையோரைக் கைதட்டும்படி செய்தார்.

இரவு ஒன்பது மணிக்குத் தமிழகமெல்லாம் புகழ்பெற்ற ஸ்ரீ டி. கே. எஸ். சகோதரர்களின் "ஔவையார்" நாடகம் நடந்தது. அப்போது விழாப் பந்தல் ஓரே ஜனசமுத்திரமாகக் காட்சி அளித்தது. இதையெல்லாம்விட நம் முதன் மந்திரி ராஜாஜி அவர்கள் நாடகத்துக்கு வந்து பார்த்து ரஸித்ததைக் குறிப்பிடவேண்டும். நாட கத்தைப் பற்றி என்ன சொல்லுவது! கலைப் பண்பும் தமிழ்ப் பண்பும் நிறைந்து விளங்கித் தமிழ் விழாவின் சிறப்பை மேலே உயர்த்துவதா யிருந்தது. இந்தக் குற்றமற்ற அருமையான நாடகத்தை நடத்திவரும் ஸ்ரீ டி. கே. எஸ். சகோ தரர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

** ** **

தமிழ் விழாவை நடத்திய நிர்வாகிகளில் ஸ்ரீ எம். பக்தவத்ஸலம், ட்ரேஜரர் ஸ்ரீ அண்ணாமலைச் செட்டியார், ஸ்ரீ ராமசாமி நாயுடு, ஸ்ரீ எஸ். கைலாசம், டாக்டர் திரிபுர சுந்தரி முதலியவர்கள் முக்கியமானவர்கள். தமிழ் விழாவுக்காக அல்லும் பகலுமாக உழைத்தார்கள். பணம் வசூலித் தார்கள். பாடுபட்டார்கள். கவலைப் பட்டார்கள். தமிழ் விழாவைச் சிறப்பாக நடத்தி முடித் தார்கள். தமிழ்த் தாயைப் போற்றித் தமிழின்பம் என்னும் நல்ல சிறந்த லாபத்தையும் பெற் றார்கள். அவர்கள் தமிழுக்கு மேலும் மேலும் சேவை செய்யத் தமிழ்த் தாய் அருள் புரியட்டும்.

தமிழ் விழாவில் தொண்டாற்றிய தொண்டர் களுக்கும் அத்தொண்டர் படைக்குத் தலைமை தாங்கி நடத்திய ஸ்ரீ சின்ன அண்ணாமலைக்கும் பல்லாண்டு கூறுகிறேன். பெண் தொண்டர் களுக்கும் சிறப்பாக அதில் தொண்டாற்றிய ஸ்ரீமதி குகப்பிரியை, ஸ்ரீமதி வசுமதி, ஸ்ரீமதி சௌந்தரம் கைலாசம் முதலியவர்களுக்கு விழாவில் கலந்து மகிழ்ந்த பல்லாயிரக் கணக்கான தமிழ் மக்களின் சார்பாக நன்றி கூறுகிறேன்.

வாழ்க தமிழ் மொழி!

## அட்டைப்பட விளக்கம்

"விண்ணும் மண்ணும் தனி ஆளும் வீரசக்தி" யைப் பாரதியார் வீரத் தமிழில் பாடித் துதித் தார். வீழ்ந்து கிடந்த தமிழகத்தை மகோந்நதமடையச் செய்வதற்காகப் பற்பல வரங்கள் கேட்டார்.

"தோளை வலியுடைய தாக்கி—உடற்
சோர்வும் பிணிபலவும் போக்கி—அறி
வாளைக் கொண்டு பிளந்தாலும்—கட்டு
மாறு உடலுறுதி தந்து"

அருள வேண்டுமென்று கோரினார். மகாகவி பாரதியின் பாடல்கள் தமிழகத்துக்குப் புத்துயிரும் புதிய சக்தியும் தந்தன. இன்றைக்கும் தந்து வருகின்றன.

பாரதியார் அமர நிலையை அடைந்த செப்டம்பர் 11உ புண்ணிய தினத்தைத் தமிழ் நாடெங் கும் கொண்டாடுவார்கள்.

பாரதி சங்கத்தார் இவ்வாண்டு சென்னையில் செப்டம்பர் 11உ 12உகளில் பாரதியாரின் அமர ஜயந்தியைச் சிறப்பாகக் கொண்டாட ஏற்பாடு செய்து வருகிறார்கள். சென்னைத் தேசிய வாலிபர் காங்கிரஸின் ஒத்துழைப்புடன் நடைபெறும் இந்த விழாவுக்கு நிதி மந்திரி ஸ்ரீ சி. சுப்பிரமணியம் இரண்டு தினங்களிலும் தலைமை வகிப்பார். பாரதியாரின் பக்தர்கள் பலர் சொற்பொழிவு ஆற்றுவார்கள்.

அரண்மனைக்காரன் தெரு கச்சாலீஸ்வரர் கோவில் முன்னாலுள்ள மைதானத்தில் அமைக்கப் படும் பந்தலில் பாரதி விழா நடைபெறும்.

சங்கீத ரத்னாகர ஸ்ரீ அரியக்குடி ராமானுஜஐய்யங்கார் அவர்கள் இவ்வாண்டு பாரதி விழாவில் கச்சேரி செய்ய இசைந்திருப்பது மிகவும் மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும்.

பாரதி விழாவை யொட்டிப் பாரதியார் பாடல் போட்டி ஒன்று நடைபெறும். பதினாறு வயதுக்கு மேற்பட்டவர்களுக்கென்று ஒரு தங்கப் பதக்கமும் வெள்ளிப் பதக்கமும் பதினாறு வயதுக் குட்பட்டவர்களுக்காக ஒரு வெள்ளிக் கோப்பையும் பாரதியார் புத்தகங்களும் பரிசு அளிக்கப்படும்.

9உ 10உ இரண்டு நாளும் மாலை 5-30க்கு இந்தப் போட்டி நடைபெறும். ஸ்ரீ கே. பாலசுப்பிர மணிய ஐயர் எம்.எல்.ஸி., சங்கீத கலாநிதி ஸ்ரீ மூசிரி சுப்பிரமணிய ஐயர், காயனபடு ஸ்ரீமதி ஸரஸ்வதி பாய் ஆகியவர்கள் நீதிபதிகளா யிருந்து பரிசுக்குரியவர்களைத் தேர்ந்தெடுப்பார்கள்.

போட்டியில் கலந்துகொள்ள விரும்புவோர் செப்டம்பர் 6உக்குள் ஸ்ரீ ஆக்கூர் அனந்தாச்சாரி யார், பாரதி விழாக் காரியாலயம், 31, தம்பு செட்டித் தெரு, சென்னை என்ற விலாசத்துக்குத் தங்கள் பெயர், விலாசம், வயது ஆகிய விவரங்களை அனுப்பி வைக்க வேண்டும்.

* * *

பாரதியாரின் அமர ஜயந்தியை முன்னிட்டு இந்தக் "கல்கி" இதழைப் பாரதி மணம் வீசும் இதழாகச் செய்ய முயன்றிருக்கிறோம். அட்டைப் படத்தில் அமர கவி பாரதியாரும் அவர் போற்றிப் பணிந்த பராசக்தியும் தரிசனம் அளிக்கிறார்கள்.




# வலியினின்றும்
# நிச்சய நிவாரணம்
# ஸாரிடன்

ஸ்விட்ஸர்லாந்து, பாஸல் நகரத்தைச் சேர்ந்த உலகப் பிரசித்திபெற்ற 'ரோஷ்' ரசாயனசாலைகளால் கண்டுபிடிக்கப்பட்ட ஸாரிடன், வலிகளினின்றும் உங்களுக்கு நிச்சயமான, துரிதமான நிவாரணம் தருகிறது.

தலைவலி, பல்வலி, முடக்கு வாதம், தசைப் பிடிப்பு, நரம்புவலி மற்றும் ஜுரம் உள்ள நிலைமைகளில் இது விரைவாக பயனளிப்பதில் புகழ் பெற்றது. ஆஸ்பிரினோ மயக்க மருந்துகளோ இதில் கிடையாது. ஸாரிடன் உட்கொள்வதனால் பிற்பாடு பாதக விளைவுகளும் ஏற்படுவதில்லை

**வலிக்கு**

ஸாரிடன் துரிதமாக வேலை செய்து, தலைவலி, பல்வலி, ஸ்திரீகளுக்கு மாதவிடாய் காலங்களில் ஏற்படும் வலிகள், தசை மற்றும் நரம்பு வலிகளை நீக்கிவிடுகிறது.

**ஜுரத்திற்கு**

ஸாரிடன் ஜுரத்தை மிதப்படுத்தும்; ஜுரத்தினால் ஏற்படும் சோர்வையும் வலிகளையும் நிவர்த்திக்கும். அது சௌமியமாக வேலைசெய்து, புத்துணர்ச்சியும் ஊட்டும். வியர்த்துக் கொட்டாது, ஜீரணமும் பாதகமடைவதில்லை.

**சௌமியமாக ஊக்கும் தன்மையுடையது**

ஸாரிடன் சௌமியமாக ஊக்கும் தன்மையுடையது, ஆகையால் தூக்கமின்மை, வலி அல்லது 'மனக்கவலை' இவற்றால் ஏற்படும் தேகச் சோர்வு, மனச் சோர்வுகளை போக்கிவிடும்.

# வட்ட மேஜை

வட ஆர்க்காடு ஜில்லாவில் குறிப்பாக வாலாஜா தாலூகாவில் சென்ற ஐந்து வருஷ காலமாகப் பருவமழை தவறியதின் காரணமாகப் பல கிராமங்களில் குடிப்பதற்கே தண்ணீர் கிடையாது. சர்க்கார் செய்து வரும் நிவாரண வேலை போதாது. சிலர் கத்தாழை, பிண்ணாக்கு வெல்லத்தைக் கரைத்துக் குடித்துக் கொண்டு காலம் கடத்தி வருவதை இன்னும் நேரில் காணலாம்.

சக்தியுள்ள சில விவசாயிகள் நகை முதலானவைகளை விற்றோ நிலங்களை அடமானம் வைத்தோ கடன் வாங்கித் தண்ணீர் பம்பு செட்டுகளை வாங்கி ஆசையுடன் அமர்த்தினார்கள். ஆனால் வருண பகவான் கிருபை யில்லாமையினால் சென்ற இரண்டு வருஷத்தில் ஊத்துகள் அடியோடு உலர்ந்து விட்டன. சொற்ப நிலமுடைய விவசாயிகள் தொடர்ந்து வருகின்ற பஞ்சத்தின் காரணமாய் நகரங்களில் வந்து பிச்சை எடுக்க ஆரம்பித்து விட்டார்கள். உயிர் போகும் தறுவாயிலிருக்கும் ஜில்லாவைக் காப்பாற்றுவது அவசியம். காலதாமதமின்றிச் சர்க்கார் ஆவன செய்வார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

ராணிப்பேட்டை
25—8—52 வி. பி. திருவேங்கட முதலியார்

★

வட ஆர்க்காடு ஜில்லா ராயல சீமையை விடக் கடும் பஞ்ச முள்ளது என்பது வடார்க்காடு ராமலசீமைப் பகுதிகளைச் சுற்றிப் பார்த்தவர்கள் கூறும் உண்மை. இவ்வருடமும் பருவ மழை தவறியதன் காரணமாக வடார்க்காடு ஜில்லாவில் மனிதனும் மற்றைய உயிர்களும் படும் துன்பத்தை நேரில் கண்டவர்கள்தான் அறிய முடியும்.

வடார்க்காடு ஜில்லாவின் வாழ்க்கையும் வளமும் வானை நோக்கியதாகவே உள்ளன. வாழ்வில் ஒளியுண்டாக வானம் துளியை வழங்காததால் எங்கள் கண்ணீர்த் துளியை மண்ணில் உதிர்த்துக் கொண்டிருக்கிறோம். இந்த ஜில்லாவின் இப்போதைய நிலையைக் கூர்ந்து கவனித்துப் பஞ்சத்தைப் போக்க முன் வரவில்லையென்றால் பட்டினிச் சாவுகள் ஏற்பட்டு இந்த ஜில்லா ஒரு தென்னாட்டு வங்கமாக மாறி விடலாம்.

வாணுபாடி
26—8—52 பி. கிருஷ்ணசாமி

★

ஆங்கிலேயர் நம் நாட்டில் காலெடுத்து வைப்பதற்கு முன்பே எங்கள் வட ஆர்க்காடு ஜில்லாவின் கிராமங்கள் அனைத்திற்கும் ஏரிகள் ஏற்பட்டு விட்டன. சுமார் பத்துப் பன்னிரண்டு அங்குல மழை பெய்தால் இவை அனைத்தும் நிரம்பிவிடும். பாலாற்றின் வெள்ளம் வருவது நின்றுவிட்ட போதிலும், அதன் கரையில் உள்ள கிராமங்களில் பத்து அடி ஆழமும் ஆறு அடி குறுக்களவுமுள்ள கிணறுகள் தோண்டினால் நாள் முழுவதும் பம்பு இறைத்துக் கொண்டிருந்தாலும் ஜலம் குறையாது. இத்தகைய ஜில்லாவின் இன்றைய நிலை......!

ஆறு ஆண்டுகளாகத் தொடர்ந்து மழை இல்லாமையால் ஏரிகள் காய்ந்து கிடக்கின்றன. கிணறுகள் வற்றிவிட்டன. பாலாற்றின் ஊற்று வளமும் அற்றுப்போய் வருகிறது. நிலம், பெரிய கிணறு, மின்சார பம்பு செட், தடையில்லாத மின்சார சக்தி இவை எல்லாம் இருந்தும், ஜலம் இல்லாமையால் சாகுபடி செய்ய முடியாமல் மிராசுதாரர்கள் தவிக்கின்றனர். சொற்ப நிலமும் சிறு கிணறும் உடைய விவசாயிகள் தங்கள் தொழிலையே மறந்துவிட்டனர். கூலி வேலையை நாடித் திரிகின்றனர். எல்லோருக்கும் போதிய அளவு கூலியும் கிடைக்கும் வேலை கிடைக்காத கஷ்டத்தால், கடலைப் பிண்ணாக்கைத் தின்று ஏழை மக்கள் உயிர் வைத்திருக்கின்றனர்.

வாலாஜா தாலுக்காவில் சர்க்கார் பதினைந்து கஞ்சித் தொட்டிகள் நடத்தி வருகின்றனர். சென்ற சில நாட்களுக்குள் இவற்றின் தொகையை இருபத்தைந்தாக உயர்த்தி யிருக்கின்றனர். ஆங்காங்கு ஏரிகள், குளங்கள் இவற்றை ஆழப் படுத்தும் வேலையையும் மேற்கொள்கின்றனர்.

சர்க்காரையே முற்றிலும் நம்பி இருக்காமல் ஸ்தாபனங்கள் எவ்வாறு உதவக் கூடும் என்பதை சாந்தி மிஷன் சொஸைடி திரு. கல்யாணராமனைக் கொண்டு ராணிப்பேட்டையில் வழிகாட்டுகிறது. கல்யாணராமனைப்போல் தாலுக்காவுக்கு ஒருவர் இருந்துவிட்டால், சட்டசபை அங்கத்தினர்களையும் மந்திரிகளையும் பற்றிக்கவலைப்பட மாட்டோம்.

சுமைதாங்கி
25—8—52 மார்க்க பந்து சர்மா

★

வட ஆர்க்காடு ஜில்லாவில் எங்கு பார்த்தாலும் குடி தண்ணீர்க் கஷ்டத்தைப் பற்றிக் கூக்குரல். சர்க்கார் எவ்வளவோ கிணறுகளை வெட்டினார்கள். ஆழப் படுத்தினார்கள். ஆயினும் பல கிணறுகளில் தண்ணீருக்குப் பதில் கற்பாறைகளையே காணலாம். ஊர் மக்களெல்லாம் ஒன்று கூடி ஒரு குடம் தண்ணீருக்கு ஏங்கிக் கிடக்கும் சோகக் காட்சியைக் காணச் சகிக்கவில்லை.

கூலி வேலைகளையே நம்பி வாழ்ந்த நிலமற்ற ஏழை மக்களுக்கு வேலையே கிடைக்கவில்லை. நிவாரண வேலைகள் ஒரு சிலபேருக்குச் சில நாட்களுக்கே கிடைக்கின்றன. அதோடு பெரும்பாலும் கண்ட்ராக்டர்களின் கஷ்ட நிவாரணமாக முடிகிறதே ஒழிய ஏழைகளின் கஷ்ட நிவாரணமாக இந்த வேலைகள் நடப்பதாகச் சொல்ல முடியாது. கண்ட்ராக்டர்களின் கடும் நிபந்தனைகளை ஏற்பவர்களுக்குத்தான் வேலை கிடைக்கிறது.

குழந்தைகள், உடல் உழைப்புக்கு லாயக்கற்றவர்கள், கர்ப்பிணிகள், கிழங்கள் போன்றவர்கள் மட்டுமே கஞ்சி வாங்க அனுமதிக்கப் படுகின்றனர். மேற்கண்டவர்கள் அந்தந்த ஊரிலேயே கஞ்சி கிடைத்தால் வாங்க முடியும். ஐந்து மைல், பத்து மைல் எப்படிப் போவது! ஒரு வேளை மட்டுமே கஞ்சி வார்ப்பதால் மற்ற வேளைகளுக்கு என்ன செய்வது! இது ஒரு பிரச்னை.

மேற்கண்ட பற்பல காரணங்களால் ஆங்காங்கு மக்கள் கண்டதைச் சாப்பிடுவதும் இதனால் வயிற்றுக் கோளாறுகள், வியாதிகள் உண்டாவதும், பின்னர் இறப்பதும் சகஜமாகி விட்டது. இவர்களுடைய குழந்தைகள் பசிக்கு உண்ண உணவின்றிக் கண் குழி விழுந்து, வயிறுஊப்பி, கால் வீங்கி, நடக்கவும் சக்தியற்று குக்கிராமங்களில் படும் அல்லல் கல் மனத்தையும் கரையச் செய்யும்.

சர்க்கார் உடனடியாக வட ஆர்க்காடு ஜில்லாவைப் பஞ்சப் பிரதேசமாகப் பிரகடனம் செய்து ஜில்லாவைக் காப்பாற்ற வேண்டும்.

ராணிப்பேட்டை
25—8—52 கே. ஆர். கல்யாணராமன்

# புதிய பரிசு

ஆர். ராஜகோபாலன்

"நீ பிடில் வாசிக்கிற லக்ஷணத்திற்குப் புதிசு வேணுமா!" என்று சிரித்துக் கொண்டே கேட்டான் சோமு தன் மனைவியைப் பார்த்து. கம்பியை அறுக்க முயற்சிப்பவனுக்கு எந்தக் கம்பியா யிருந்தாலென்ன என்ற எண்ணத்தோடு அவன் அந்தக் கேள்வியைக் கேட்கவில்லை. சும்மா மனைவியைக் கேலி செய்ய வேண்டும் என்ற நோக்கத்துடன் ஏதோ சொன்னான்.

"அந்த லக்ஷணத்தில்தானே மயங்கி நீங்கள் என்னைக் கல்யாணம் செய்து கொண்டீர்கள்!" என்று கேட்டாள் பதிலுக்குச் சரளா.

"ஓஹோ, சரிதான்! 'எப்போ வருவாரோ' என்று என்னைத்தான் எதிர் பார்ப்பதுபோல், நான் உன்னைப் பார்க்க வந்தபொழுது பாடினாய். அது தான் போகிறதென்றால் 'காணக்கண் கோடி வேண்டு' மென்று என் அழகை வியந்தாய்! இப்படிப் புகழ்ந்ததினால்தான், உன் எலி, பூனை சண்டை பிடில் வாசிப்பைக் கூட மறந்து உன்னை என் மனைவியாக்கிக் கொண்டேன்."

"அப்படியானால் என் சங்கீதம் உங்களுக்குப் பிடிக்கவில்லை என்று சொல்லுங்கள்!"

"அடடே! அப்படிச் சொல்லவில்லை. புதுப் பிடில் என்ன வேண்டி யிருக்கிறது. பழைய பிடிலின் அழகு இன்னும் இற்றுப்போகவில்லை, தந்திக் கம்பிகளை வேண்டு மென்றால் மாற்றிக் கொள்ளலாம் என்று சொன்னேன்."

"அதை இப்படித்தான் சொல்லுவார்களா!" என்று அழமாட்டாத குறையாகக் கூறிவிட்டு, "புதுப் பிடில், என் ஆசை......" என்றாள்.

"புதுப் பிடில் வாங்க வேண்டுமென்பது சரி தான். ஆனால் பணத்திற்கு என்ன செய்வது! சிறிய சாமானா, இரண்டு ரூபாய் செலவழித்தால் போதும் என்பதற்கு!"

"புதுப் பிடில் வாங்கித்தர முடியாது, அவ்வளவு தானே!" என்று கூறிவிட்டு அவள் உள்ளே போய் விட்டாள். கண்ணீர் வரலாமா வேண்டாமா என்று யோசித்துக் கொண்டே வெளி வந்தது. ஆம், புதுக் குடித்தனம் வைத்து ஒரு வருடமாகி விட்டது. அன்றுதான் அவள் கேட்டு அவன் 'இல்லை' யென்று சொல்லி யிருக்கிறான். இதற்கு முன்னெல்லாம் மனைவி எள் என்றால், சோமு எண்ணெயாக இருந்து வந்தான். இப்பொழுது தான் என்ன, ஏதோ பணமில்லாத தோஷம் மறுதளித்து விட்டான்......

சோமு பெரிய பணக்காரனும் அல்ல, வேலை செய்தால்தான் சாப்பாடு என்ற நிலையிலுமில்லை. சொத்து கொஞ்சம் உண்டு. அவன் தகப்பனாருக்குப் பிறகு அவனுக்குச் சொத்துரிமை பூராவும் வந்துவிடும். பெரிய படிப்புப் படித்துப் பெயரும் புகழுமாகப் பையன் விளங்க வேண்டு மென்று நினைத்தார் தகப்பனார். ஆனால் பிள்ளையோ 'மெட்ரிகுலேஷன்' தேறுவதே பகீரதப் பிரயத்தனமாகி விட்டது. எனவே தகப்பனார், தம் பிள்ளை உலகானுபவம் பெற்றுத் திரும்பி வரட்டு மென்று ஒரு உத்தியோகத்தில் உட்கார வைத்தார் அவனை. இருந்தாலும் உதவியாக மாதம் தவறாது ஒரு சிறு தொகையை அனுப்பி அதற்குள்தான் அவன் குடும்ப பாரம் நடத்தவேண்டு மென்று கட்டுப்பாடு செய்தார். இதனால்தான் புதுப் பிடில் விஷயம் ஒரு பிரச்னையாக உருவெடுத்தது.

முதல் தேதி—அன்றுதான் சம்பளம் பெறும் நாள். அவன் மனத்தில் எப்பொழுதுமில்லாத சஞ்சலம் இப்பொழுது இருந்தது. காரணம்—மனைவியின் பேச்சுக்கு மறுதளித்ததுதான். ஒரு பிடிலுக்காகவா அவளை அழ வைக்க வேண்டும்! அன்று கொடுக்கும் போனஸில் எப்படியாவது ஒரு பிடில் வாங்கிக் கொடுத்தால், அவள் எதிர்பாராத விதமாகப் பிடில் கிடைத்ததில் எவ்வளவோ ஆச்சரியமும் சந்தோஷமும் அடைவாள். இப்படி யெல்லாம் சோமுவின் மனம் எண்ணிக்கொண்டிருந்தது.

வழக்கம்போல்தான் அன்று மணி ஐந்து அடித்தது. ஆனால் சோமுவின் மனத்திலிருந்த பரபரப்பு அதை எட்டு மணியாகக் காட்டியது. ஆபீஸை விட்டு வெளியே வந்த சோமுவின் பை நிறைய பணம்—ஒரு மாத போனஸ், ஒரு மாத சம்பளம் இருந்தது. இன்னொரு தடவை எண்ணிப் பார்த்தான். சரியாக இரு நூறு ரூபாய். வீட்டுக்காரி, பால்காரி இப்படி கொடுக்க வேண்டியவர்களுக்குக் கணக்குப் போட்டுக் கொடுத்தால் நாற்பத்தைந்து ரூபாய் தீர்ந்து போகும். ஐம்பத்தி ஐந்து ரூபாயை வழக்கம்போல வீட்டுச் செலவுக்கு ஒதுக்கினான். 'அப்பா'விடமிருந்துதான் பதினைந்தாம் தேதி பணம் வருமே! ஆகவே தாராளமாகப் 'போனஸ்' பணத்திற்கு இப்பொழுது ஒரு பிடில் வாங்கிவிடலாம்' என்று தீர்மானித்தான்.

நடை பாதையில் ஆமை வேகத்தில் கால்களும், எக்ஸ்பிரஸ் வேகத்தில் மனமும் முன்னே செல்ல, சோமு பராக்குப் பார்த்துக்கொண்டே நடந்தான். "கர்ண கொடூரம் கம்பெனி — இசை வாத்ய வியாபாரிகள்" என்ற விளம்பரப் பலகை அவனை வா வா என்று கூப்பிட்டது. அதில் தம்புரா முதல் பிடில் வரை, ஜிப்ஸி நடனத் தம்பட்டம் முதல் கர்நாடக மிருதங்கம் வரை, வடநாட்டு சிதாரிலிருந்து வெளிநாட்டு புல்புல் தாரா வரை எல்லா வாத்தியங்களும் அழகாக வைக்கப்பட்டிருந்தன. 'ஐயோ பாவம், இவ்வளவு சவுகரியமாக, குஷாலாக, சுதந்திரமாக இருக்கும் இந்த வாத்தியங்கள் சுதந்திரத்தை இழந்து கதறப் போகின்றனவே! கலையின் சின்னங்கள் எனப் படும் இவை மூலம் யார் யார் கலையைக் கொலை செய்யப் போகிறார்களோ' என்று ஒரு கணம் அவன் மனம் அந்த வாத்தியங்களைக் கண்டு இரங்கியது. நல்ல வேளையாக அவன் மனைவி நன்றாகத் தானே பிடில் வாசிக்கிறாள்......!

பையில் பர்ஸ் இருக்கிறதா என்று தொட்டுப் பார்த்துக் கொண்டே உள்ளே நுழைந்தான் சோமு. அவனை எதிர்கொண் டழைத்தான் ஒரு பையன். "நல்ல பிடில் இருக்கிறதாப்பா!" என்று கேட்டான் சோமு.

"இங்கே இருப்பதெல்லாம் நல்ல பிடில்தான் ஸார். புதியது லண்டனிலிருந்து இப்பொழுது தான் வந்தவை......"

"லண்டனிலிருந்து வந்ததென்றால் அவை இங்கிலீஷ் பாட்டுத்தான் பாடுமோ!" என்றான் சோமு சிரித்துக்கொண்டே.

"என்ன ஸார்; கேலி செய்கிறீர்கள்...!"

"கலையைக் கொலை செய்ய இந்தியப் பிடிலானால் என்ன, இங்கிலாந்துப் பிடிலானாலென்ன! எல்லாம் ஒன்றுதான்! விலை என்ன!" என்று கேட்டான். இரு நூறு ரூபாய் என்று பதில் வந்தது.

"இரு நூறு ரூபாய்" அவன் சம்பளமும் போனஸும் தீர்ந்தது என்று நினைத்தான்! "இதென்



னப்பா பட்டப் பகல் கறுப்பு மார்க்கெட்டா யிருக்கிறதே" என்ற வார்த்தைகள் அவனை யறியாமலே வெளிவந்தன.

"என்ன ஸார், இப்படிச் சொல்கிறீர்கள்! கலை விருத்தியாகிறது. அதனால் தானே அத்தனை பிடில்கள் விலை போகின்றன......!"

"கலையாவது, விருத்தியாவதாவது, நமக்கும் சங்கீதம் தெரியும் என்று மேல்பூச்சாகச் சொல்லிக் கொள்ள ஆசைப்படுபவர்களின் பெண்களுக்குக் கல்யாண சர்டிபிகேட் ஐயா, சங்கீதம். கல்யாணம் முடிந்தவுடனே அந்தச் சங்கீதம் மூட்டை கட்டி வைக்கப்படும். இதுதானா கலை மோகம்...!"

"ஸார்! இது கடை, பேச்சு மேடை அல்ல. தவிர உங்களுக்கு வேண்டுமானால் வாங்கிக் கொள்ளுங்கள். இல்லாவிட்டால்..."

கடைப் பையன் முடிக்கவில்லை. ஆனால் அதற்குள் சோமு கடையை விட்டு வெளியே இறங்கி நடையைக் கட்டினான்.

சிறிது தூரத்தில் ஏலக் கடை யொன்று தென்பட்டது. "மூச்சந்தி முனுசாமி கம்பெனியில் நிக்கற்ற நிகம்பரசாமி என்பவர் சில நாட்களுக்கு முன் உதவாக்கரை என்ற பத்தாயிரம் ரூபாய் விலையுள்ள பொருளைப் பதினைந்து ரூபாய்க்கு ஏலம் எடுத்தார்" என்று யாரோ ஒருவர் சொல்லிக் கொண்டிருந்தார். நிக்கற்ற நிகம்பரசாமியார் போலத் தானும் ஒரு நல்ல பிடிலை வாங்கினால் என்ன என்று யோசனை செய்தான். அவன் மறுகணம் ஏலக் கடையில் புகுந்து ஏதாவது பிடில் அன்றைய ஏலத்திற்கு வருகிறதா என்று கேட்டான். கடைக்காரன் ஒரே ஒரு பிடிலை எடுத்துக் காண்பித்து அதுதான் முதன் முதலில் ஏலம் விடப்படும் என்று சொன்னான். புத்தம் புதிது, அந்தப் பிடில் மேல் அவன் முகம் தெரிந்தது. அதைக் கையிலெடுத்துக் காதருகே 'டொய்' என்ற சத்த முண்டாக்கிப் பார்த்தான். அவனுக்குப் பிடில் பிடித்துப் போயிற்று.

சிறிது நாழிகையில் ஏலம் ஆரம்பித்தது. "நல்ல பிடில். புதிது, அழுவதுபோல் பிடில் வாசிப்பவர்கள்கூட ஐந்தே மாதங்களில் பெரிய பெரிய கச்சேரி செய்யலாம். ஏதாவது ஆரம்பியுங்கள் சார்...சரி. சர்க்கார் மதிப்பு ஐந்து ரூபாய்......" என்று ஏலம் விடுபவன் ஏலத்தைத் துவக்கி வைத்தான். ஐந்து ரூபாய் சில நிமிஷங்களுக்குப் பிறகு ஐம்பது ரூபாய் ஆயிற்று. இன்னொருவர் கடைசி முறையாக அறுபது ரூபாய் என்றார். "டாம் சீப்" என்று நினைத்துக் கொண்டே சோமு அறுபத்தி ஐந்து என்று கத்தினான். ஏலம் விடுபவனோ பத்து நிமிஷம் வரை அந்தப் பிடிலைப் புகழ்ந்து கொண்டே யிருந்தான், பலனில்லை. எனவே சோமு ஜயித்தான். பணத்தை எண்ணிக் கொடுத்துவிட்டுப் பிடில் பெட்டியை எடுத்துக் கொண்டு வீட்டைப் பார்க்கக் கிளம்பினான்.

"என்ன ஸார், பிடிலா!" என்று இழுத்தவாறே கேட்டுக் கொண்டு வந்தார் அவனுடைய நண்பரொருவர், சோமுதான் ஒருவேளை பிடில் கற்றுக் கொள்கிறானோ என்ற எண்ணத்தில். உடனே சோமு "என் மனைவி பிடில் வேண்டுமென்று நச்சரித்துக் கொண்டிருந்தாள். அபஸ்வரம் கம்பெனியில் ஆர்டர் கொடுத்திருந்தேன். இப்பொழுது தான் வாங்கிச் செல்கிறேன்" என்று பெருமை

புடன் சொல்லிக் கொண்டான். பின் என்ன, ஏலக் கடையில் எடுத்தேன் என்று உண்மையை எந்த நாகரிகம் உள்ளவன் சொல்லுவான்!

பிறகு வீட்டை யடைந்த சோமு, "சரசு, உனக்காகப் பிடில் வாங்கிக்கொண்டு வந்திருக்கிறேன். பார் விலையும் சல்லிசு......" என்றான்.

"என்ன விலை! எங்கே வாங்கினீர்கள்!" என்று சந்தோஷம் பொங்க அவள் கேட்டாள்.

"இன்று ஒரு கடையில் விற்றுக் கொண்டிருந்தார்கள்......வாங்கி வந்தேன்."

"கடையையாவது விற்கவாவது. என்ன உளறுகிறீர்கள்..."

"ஆமாம்; கடை ஒன்று திவால் ஆகிவிட்டது. அந்தச் சாமான்களைக் குறைந்த விலையில் விற்றுக் கொண்டிருந்தார்கள் வாங்கிக் கொண்டுவந்தேன்."

"சரிதான்: இது வாங்கப் பணம்......"

அவன் வேறு வழியில் பேச்சைத் திருப்பினான். போனஸ் வந்தது என்று சொல்லலாம், ஆனால் உண்மை விலை அவளுக்குத் தெரியலாமா! அவள் பெட்டியை வாங்கிப் பிடிலை வெளியி லெடுத்தது தான் தாமதம், இடி இடியென்று சிரிக்க ஆரம்பித்தாள்.

"சின்ன விஷயத்திற்காக ஏன் இப்படிப் பொய் சொல்லுகிறீர்கள்!"

"ஹும்...பொய்யா...எதற்காக...!"

"மூச்சந்தி முனிசாமி ஏலக்கடையில் அல்லவா இதை வாங்கி யிருக்கிறீர்கள்...!"

இந்தக் கேள்வி அவனைத் தூக்கி வாரிப் போட்டது. இல்லையென்று சொல்லி விடலாமா என்று யோசனை செய்தான். ஆம், ஒரு பொய்யை முழுதாக ஒப்புக்கொள்ள முடியுமா! இந்த முதல் தோல்வி வாழ்க்கை முழுவதும் பிரதிபலித் தால்......! திடீரென்று ஏலக்கடைக்காரரே அங்கு பிரசன்னமானார். சோமு கொடுத்த அறுபத்தி ஐந்தில் அறுபது ரூபாயை அவளிடம் கொடுத்து விட்டு, சோமுவைப் பார்த்து அவளும் இடி இடியென்று சிரித்தாள். "என்ன ஸார்! உங்கள் மனைவி விற்கச் சொன்ன பிடிலை, நீங்கள் வாங்கி வந்து, அந்த அம்மாவுக்கே பரிசளிக்கிறீர்களே!" என்றான் அவன். சோமுவுக்கு அவமானம் தாங்க முடியவில்லை. என்ன பேசுவது என்று தெரியாமல் தவித்தான்.

"இன்றுதான் இந்த அம்மா பிறந்த வீட்டிலிருந்து வந்தேன். அவர்களுடைய தகப்பனார் இருநூறு ரூபாய் கொடுத்தனுப்பினார் என்னிடம். இந்த அம்மா அதற்குப் பிடில் புதிதாக வாங்கி வர வேண்டு மென்றும், பழைய பிடிலை ஏலம் விட்டு விட வேண்டு மென்றும் என்னிடம் சொன்னார்கள். அதை நீங்களே வாங்கி விட்டீர்கள். சரி, கமிஷன் கூட இல்லை இந்த வியாபாரத்தில்........." என்று சொல்லிச் சிரித்துக் கொண்டே பாக்கி யிருந்த ஐந்து ரூபாயையும் சோமுவிடம் கொடுத்தான் அந்த ஏலக் கடைக்காரன்.

"என்ன சரஸா! இந்த ஏலக் கடைக்காரர் உனக்கு ஏற்கெனவே தெரியுமா, என்ன!" என்று கேட்டான்.

"ஆமாம். அவர் எங்கள் ஊர்க்காரர். எங்கள் குடும்பத்துக்கு வெகு காலமாக நன்கு அறிமுகமானவர்" என்றாள்.

"இப்படி உங்கள் ஊர்க்காரர் வந்து என் மானத்தை வாங்க வேண்டாம்!" என்றான் சிரித்துக் கொண்டே.

அதைக் கேட்டு அவளும் பொருள் பொருந்திய புன்னகை புரிந்தாள்.




## 9. உலகம் சிரிக்கட்டும்!

ஒரு விஷயத்தைப் பற்றி நமக்கு ஏதோ நம்பிக்கை இருக்கிறது. விஷயம் நமக்கு உவந்த விஷயம், ஆனாலும் நம்பிக்கைக் குள்ளேயே சில சில வேளைகளில்ச் சந்தேகம் வந்து ஊடாடிப் போகும்.

இந்த நிலையில் யாராவது மறுத்துச் சொன்னால் நமக்கு வருத்தம் வரும்; கோபமும் வரும்.

ஆனால் உறுதியாய் அறிந்து அனுபவித்த விஷயம் பற்றி யாராவது மறுத்துச் சொன்னாலோ, அது நம்மைப் பாதிக்காது. உலகத்தார் எல்லாருமே வேறு விதமான அபிப்பிராயம் கொண்டிருந்த போதும் நமக்கு அது பொருட்டல்ல.

***

உலகத்தில் சிருஷ்டி தத்துவம் என்றும், அவைகளைப் பாதுகாக்கும் தத்துவம் என்றும் உயிர் வர்க்கத்திலப் பலவித தத்துவங்களைப் பார்க்கிறோம். அந்தத் தத்துவங்களை தேவர்கள் என்று உபசரிக்கிறோம்.

தத்துவங்கள் எல்லாவற்றையும் அறிந்து விட்டோம். ஆனாலும் எல்லாவற்றிற்கும் அடிப்படையில் நின்று தொழில் செய்யும் கடவுள் தத்துவத்தை அறிதல் அருமையிலும் அருமை. சமய வாதிகள் எல்லாரும் ஒப்புக் கொண்ட விஷயம் இது.

ஆனாலும் நம்முடைய உடல், உயிர், உணர்ச்சி மூன்றுக்கும் நாம் உரியவர்கள் அல்ல. எங்கும் நிறைந்ததாய் உள்ள இறைவனே உரியவன் என்று உணர்ந்து விட்டால் இறைவனது ஆனந்த மயத்துக்கு உரியவர்கள் ஆகிவிடுவோம் நாம். அவனோடு ஒன்றி விடுவோம்.

மாணிக்க வாசகர் இத்தகைய அனுபவத்தை வெளியிடுகிறார்:

அரிக்கும் பிரமற்கும்
  அல்லாத தேவர்கட்கும்
தெரிக்கும் படித்தன்றி
  நின்றசிவம்! வந்து நம்மை
உருக்கும் பணிகொள்ளும்
  என்பதுகேட்(டு) உலகமெலாம்
சிரிக்கும் திறம்பாடித்
  தெள்ளேணம் கொட்டாமோ.

[அரி: உயிரை எல்லாம் காக்கின்ற சுயதி;— அப்படியே பிரமன் உண்டாக்குகிற சுயதி— அல்லாத தேவர்: இன்னும் எத்தனையோ சுயதி

தத்துவங்கள்; தெரிக்கும் படித்தன்றி: தெரிய முடியாதபடி; நின்ற சிவம்: எங்குமாய் ஒரு படித்தாய் நிலைத்து நிற்கும் கடவுள் தத்துவமானது; வந்து நம்மை: எங்குமாய் இருப்பது போய் ஏதோ நம்மிடம் வந்த மாதிரி ஞானத்தைப் புகட்டி; உருக்கும்: ஆனந்தத்தில் நம்மைக் கரையச் செய்யும்; பணி கொள்ளும்: நம்மை உரிமை பாராட்டி இது செய் அது செய் என்று ஏவும்- செயல் எல்லாம் அவன் செயல்த் தானே!]

குறிப்பு:—உலகம் தன்னைப் பைத்தியக்காரன் என்று எண்ணிச் சிரிக்கலாம். அப்படிச் சிரிப்பது உலகத்தாரின் அறியாமையைத்தான் காட்டுகிறது.

ஏனனமும் எக்களிப்பும் தமிழ்ச் செய்யுளின் அங்கங்களோடு கலந்து ஒரே கும்மாளி போடுகின்றன. ஏற்பட்ட ஓசை இயல்களோடு பாடப் பாட பாவம் தெளிவாக வந்து முன் நிற்கும்.

## மழையே பெய்வாயாக!

தமிழ் நாட்டில் ஒரு வட்டத்தில் மழை பெய்யவில்லை. பொறியார்! உள்ள பயிர் எல்லாம் பட்டுப் போய் விடும்.

○★○★○★○★○★○★○★○★○★○★○★○

<u>பாரதி காட்டிய பாதை</u>

"விழித்த கண் வேல் கொண்டெறிய அழித்து
இமைப்பின் ஓட்டன்றே வன்க ணவர்க்கு"

என்று வள்ளுவர் குறிப்பிடுகிறார். பகைவர் எறிந்த வேல் தன்னை நோக்கி வரும்போது கண்ணிமைத்தல் தோல்வியாகும். தமிழ் நாட்டுச் சிறுவர்கள் ஆடும் விளையாட்டில் இக்கருத்தை இன்றும் காணலாம். "எனக்குப் பயப்படுவாயா; மாட்டாயா" என்று ஒருவன் கேட்பான். "பயப்பட மாட்டேன்" என்று மற்றவன் சொல்வான். "அப்படியானால் கண்ணை விழித்துக் கொண்டு என் முன் நில்" என்பான். அப்படி மற்றவன் நின்றவுடன் இவன் தன் இரு கைகளையும் ஓங்கித் தட்டுவான். அப்போது அவன் கண்ணை மூடி விழித்தால் தோல்வி; கண்ணிமையாமல் நின்றால் வெற்றி. இத்தகைய தமிழ் நாட்டில்தான் இன்று எதற்கும் அஞ்சும் மனப்பான்மை பரவி விட்டது. காலச் சுழற்சியை என்னென்பது. ஆகவேதான் தமிழ்நாட்டு மக்களுக்கு வாழும் வழி வகுத்த பாரதியார், "வயிரமுடைய நெஞ்சு வேண்டும்—இது வாழும் முறைமையடி பாப்பா" என்றார்.

வயிரமுடைய நெஞ்சை வளர்க்க வகை செய்யும் முறையிலே நமது பாடத் திட்டம் அமைதல் வேண்டும். நம் இளங் காளைகள் வயிரமுடைய நெஞ்சுள்ள வீரர்களாக விளங்க வேண்டும். அப்பொழுதுதான் நாடு முன்னேற முடியும்.

சேலம். எம். இராசமாணிக்கம்

○★○★○★○★○★○★○★○★○★○★○★○

ஆடு மாடுகளுக்குக் குடி தண்ணீர் இல்லாமல்ப் போய்விடப் பார்க்கிறது. மனிதர்கள் பாடு என்ன ஆகும். எல்லாருக்கும் ஒரே கவலை. ரயில் முதலிய வசதிகள் இல்லாத காலத்தில் அயலிடமிருந்து தான்யம் லகுவில் வந்துவிடவா செய்யும்?

இந்தப் பரிதாப நிலையைப் பார்த்து ஒரு சிவ பக்தர் ஏக்கம் அடைகிறார்.

சைவப் பண்பாட்டில் அபாரமாய்த் திளைத்தவர் அவர். கோயில் வழிபாடு உத்ஸவம், மகேசுவர பூஜை, தேவாரப் பாடல், திருவாசகப் பாடல் இவைகள் எல்லாவற்றையும் உள்ளூற அனுபவித்தவர்.

சைவத்தில் அவருக்கு உறுதி யில்லாமல் வேறு யாருக்கு இருக்கக்கூடும்?

அவருடைய உள்ளத்தில் உண்டான பரிவும் ஏக்கமும் உறுதியும் செய்யுளாக உரு எடுக்கின்றன.

சைவ சமயம்
 சமயம்எனில், அச்சமயத்
தெய்வம் பிறைசூடும்
 தெய்வம்எனில்—ஐவரைவென்(று)
ஆனந்தா காரத்(து)
 அழுந்துவதே முக்திஎனில்.
வானங்காள் பெய்க
 மழை!

[ஐவரை வென்று: கண், காது, முதலான ஐம் பொறிகளையும் தொழிற் படாமல்ச் செய்து; ஆனந்தா காரத்து அழுந்துவதே: எங்குமாய் நம் உள்ளத்தின் உள்ளுமாய் ஒரே ஆனந்த மயமாய் நிறைந்திருக்கும் பரம் பொருளில் நம்முடைய ஆணவ உணர்ச்சியைக் கரைத்துவிடச் செய்வதே; முக்தி எனில்: சிவத்தோடு ஐக்கியமாகும் முக்தி நிலை என்பதும் உண்மையானால்; வானங்காள்: வானத்தில் சஞ்சரிக்கும் மேகங்களே]

பாடலைப் பாடினார். மழையும் 'சோ' என்று பெய்தது. பக்தரது ஆத்திரமும் மழையும் ஒன்றாய்க் கலக்க நேர்ந்தது. இப்படிக் கலக்க நேருவதைப் பல தடவை நாமும் பார்த்திருக்கிறோம். சமயத்துக்கு அதனால் தனியான ஒரு உறுதி ஏற்படுவதையும் பார்க்கிறோம். மகிழ்கிறோம்.

கவியின் ஓசை தாளங்களில் சைவத்தின் . பக்தி சாயல் அற்புதமாய்த் துலங்குகிறது.

# திரும்பிப் போனவன்

சம்பந்தம்

நீலக்கடலும் விரிந்த வானமும் தொட்டு முத்தமிடும் எட்டாத இடத்தை உற்று நோக்கிக் கொண்டே தன் மெல்லிய விரல்களால் நுணுக்கமான நூல் பின்னல் வேலை செய்து கொண்டிருந்தாள், லூசி யொங். அந்த அடிவானத்திற்கப்பால் தானிருந்தது அவளுடைய தாய் நாடு—சீனதேசம். "உம்......நம் மக்கள், மனிதர் என்று ஒருவருமே இல்லாத ஒரு தாய் நாடு" என்று கூறி அவள் நீண்ட பெருமூச்சு விட்டாள்.

அவளுக்கு வெகு சமீபத்தில் அந்தச் சிறு பாறையின்மீது அமர்ந்திருந்த அந்தப் பெரியவர் லூசி யொங்கின் தகப்பனர்.

அந்தக் கருங்கடலில் தூண்டிலை எறிந்திருந்த அவர் கயிற்றைப் பலமாய்ப் பிடித்துக் கொண்டு, மிதப்புக் கட்டையின் மேல்தான் கவனமாயிருந்தார். ஆனல் அதற்குள் தூரத்தில் தெரிந்த அந்த யுத்தக் கப்பல் அவர் பார்வையை யிழுத்தது. நீண்ட பெருமூச்சுடன் நன்றாய் நிமிர்ந்து உட்கார்ந்தார். அந்தப் போர்க்கப்பல், தன் பாதையைத் திருப்பிக் கொண்டு பர்மோசா தீவின் பக்கமாகச் சென்று கொண்டிருந்தது.

உடனே அந்தப் பெரியவர் தம் வழுக்கைத் தலையைத் தடவிக் கொண்டார். 'ஆகா! கப்பற்படையிலிருந்த நம் மகன் மாத்திரம் உயிரோடிருந்தால், நமக்கு இந்த நாளில் இந்தக் கதி கூட ஏற்பட்டிருக்குமா! அவனாவது தேச தற்காப்புச் சேவையில் ஈடுபட்டு இறந்தான். ஆனல் நம் மனைவி! விமானங்கள் பொழிந்த குண்டுகளுக்கல்லவா இரையானள்' என்று நினைத்தபோது அவர் கண்களில் இலேசாகக் கண்ணீர் துளித்தது. உடனே தம் மெல்லிய கீற்றுக் கண்களைச் 'சிப்பு'க் கொட்டிக் கொண்டார்.

அதற்குள் தூண்டிலில் ஒரு பெரிய மீன் மாட்டிக் கொண்டு அவர் கையிலிருந்த கயிற்றையே பிடித்திழுத்தது. உடனே தம் மகளை உதவிக் கழைத்தார். இருவரும் சேர்ந்து இழுத்தார்கள்; முடியவே யில்லை. அப்பொழுது சற்றுத் தூரத்தில் வந்து கொண்டிருந்த சுங் ருங், இவ்விருவரும் ஏதோ சிரமப்படுவதை யறிந்து இரண்டே தாண்டில் ஓடி வந்தான் அங்கே. மூவரும் சேர்ந்து முக்கி முனகிக் கொண்டு, அந்த மீனை யிழுத்துக் கரையிலே போட்டார்கள்.

"சரியான சமயத்தில் உதவிக்கு வந்தாய், சுங்ருங்" என்றார் பெரியவர்.

"ஆமாம்; என் அண்ணனைப் போல் எத்தனையோ உதவியா யிருக்கிறாய் எங்களுக்கு" என்றாள் அந்த அழகி லூசி யொங்.

"என்ன! உன் அண்ணனைப் போலவா!" என்றான் சுங்ருங். வார்த்தைகள் தடுமாறின அவனுக்கு.

"ஆம். சிறு வயதிலேயே அண்ணனை இழந்த எனக்கு நீதானே அண்ணன்!" என்றாள்.

"உம்......" என்றான். அவன் முகம் எப்படியோ மாறிற்று.

சீன தேசத்து உள் நாட்டுச் சண்டையில், தம் சொத்து சுற்றம் அனைத்தையும் இழந்து விட்டுத் தம் ஒரே மகளுடன் பர்மோசா தீவிற்கு வந்து குடியேறினர் அப்பெரியவர். கையிலிருந்த அந்தக் கொஞ்சம் பணமும் செலவழிந்து போய், அடுத்த வேளை உணவுக்கு என்ன செய்வது என்று அறியாத நிலை ஏற்பட்டது. லூசி யொங் நல்ல கைத் திறமையுடையவள் தான். இருந்தும் அந்தத் தீவில் பிழைப்பிற்கு வழியே யில்லாம லிருந்தது.

தக்க சமயத்தில், ஷாங்கேயிலிருந்து வெளியேறின பிரபு ஒருவர் தம் செல்வ மனைத்தையும் திரட்டி, அந்தப் பர்மோசா தீவிற்கு அப்பாலிருந்த ஒரு சிறு தீவையே விலைக்கு வாங்கி, அதில் பெரிய பண்ணை ஏற்படுத்தினர். அதில் அநேக சீன அகதிகளுக்குப் பிழைப்புக் கிடைத்தது. அங்கு ஒரு பக்கம் பட்டு நெசவும், பீங்கான் கோப்பை பாக்டரியும் மறு பக்கம் அந்தச் செழிப்பான பூமியில் நெல் சாகுபடியும், சோயாபீன்ஸ் சாகுபடியும் நடந்தன. தன் பண்ணையில் உற்பத்தியாகும் பொருள்களை வெளி நாட்டுக்கு அனுப்பி வைக்க, அந்தப் பிரபுவுக்குச் சொந்தத்திலேயே இரண்டு கப்பல்கள் கூட இருந்தன.

லூசி யொங்குக்கு, அவளுக்குப் பிடித்தமான பீங்கான் பாத்திரங்களின் மேல் அழகிய வர்ணக் குழைவால், சித்திர விசித்திர வேலைப்பாடுகள் செய்யும் வேலை கிடைத்தது. அவள் வெகு திறமையாகத் தன் வேலையைச் செய்தாள். ஏதோ வாய்க்கும் கைக்கும் கிடைத்த ஊதியத்தைப் பெற்றுக் கடற்கரையோரமாக ஒரு சிறு குடிலமைத்து அப்பாவும் மகளும் வாழ்ந்து வந்தார்கள். பெரியவரும் சும்மா யிருப்பதில்லை. கையில் தூண்டிற் கயிற்றை யெடுத்துக் கொண்டு கடற்கரை ஓரமாகத் திரிந்து வருவார். ஏதோ ஏழ்மை நிலையில் இன்பமாக அவர்கள் வாழ்க்கை நடந்தது.

அது பிற்பகல் நேரம். வெய்யி லில்லாமல், மப்பும் மந்தாரமுமா யிருந்தது. அந்தப் பெரியவர் தம் வீட்டு வாசலில் உட்கார்ந்து கொண்டு தூண்டி லுக்காகக் கயிறு முறுக்கிக் கொண்டிருந்தார். ஒருவரே முறுக்குவதென்பது அத்தனை சுலபமான காரியமில்லையல்லவா! அப்போது அப்பக்கம் வழியோடு போய்க்கொண்டிருந்த சுங்ருங், பெரியவர் சிரமப்படுவதைக் கண்டு அருகில் வந்தான். "இதோ நான் ஒரு முனையைப் பிடித்துக் கொள்கிறேன். நன்றாய் முறுக்கேற்றுங்கள்" என்றான். "ஆகா! சமயத்தில் உதவிக்கு வந்தாயே குழந்தாய். ரொம்ப சந்தோஷம்" என்று அவனை அன்புடன் வரவேற்றார். இருவரும் சேர்ந்து கொண்டு கயிற்றுக்கு நன்றாய் முறுக்கேற்றினார்கள். கயிற்றை முறுக்கிக் கொண்டே சுங்ருங்கைப் பிரியமாய் விசாரித்தார் பெரியவர்.

"மிலிடரியில் சேர்ந்திருந்த என் அப்பா, மஞ்சூரியா நாட்டு யுத்தத்திற்கு வந்திருந்தார். அங்கு தான் என் அம்மாவை மணந்து கொண்டார். நானும் என் தங்கையும் இரட்டைக் குழந்தைகள். யுத்தத்திற்கு அப்புறம் தன் ஊர் பெகிங்குக்குத் திரும்பினவர் வேறொரு கலியாணம் செய்து கொண்டு அங்கேயே தங்கிவிட்டார். எங்களுக்கு மாதா மாதம் பண உதவி மாத்திரம் கிடைத்துக் கொண்டு வந்தது. கடைசியில் அநேக வருஷங்களுக்கப்புறம் என் அம்மா இறந்து போகவே, அப்பா வந்து எங்க ளிருவரையும் பெகிங்கிற்கு அழைத்து வந்துவிட்டார்.

என் சித்திக்குக் குழந்தைகளே இல்லாமலிருந்தும்கூட என் தங்கை மீதிருந்த பிரியம் என்

மேல் கிடையாது. என் தங்கை ரொம்பவும் அழகாயிருப்பாள். அதனாலோ என்னவோ! ஆனால் என்னை மாத்திரம் படாத பாடு படுத்தினான். இதனால் என் அப்பாவுக்கும் அவனுக்கும் அடிக்கடி சண்டை கூட ஏற்படுவதுண்டு. கடைசியில் என் அப்பாவின் இருதயம் ஒருநாள் திடீரென்று நின்று விட்டது. பிறகு கேட்பானேன்! சித்தியின் ஆக்ரோஷம் அதிகமாகி, அந்த வீடே எனக்கொரு முள் படுக்கையாயிற்று. கடைசியில் மனத்தை மாற்றிக் கொண்டு வீட்டில் சொல்லிக் கொள்ளாமல் ஒரு நாள் வெளியேறி விட்டேன். எனக்குப் பட்டு நெசவு வேலை தெரியும். அதனால் தான் இப்பொழுது இந்தப் பண்ணையில் வந்து வேலையில் அமர்ந்திருக்கிறேன். சீனாவில் என் தங்கை என்ன ஆனாளோ!" என்று சோகப் பெருமூச்சுடன் தன் கதையைச் சொல்லி முடித்தான் சங்குங். பெரியவரையும் அவனுடைய சோகக் கதை ரொம்பவும் அசைத்து விட்டிருந்தது. அவர் முகச் சாயலிலிருந்தே அது ஒருவாறு விளங்கிற்று.

அப்பொழுதுதான் சற்று தூரத்தில் லூசி யொங் கும் தன் பீங்கான் பாக்டரியிலிருந்து திரும்பிக் கொண்டிருந்தாள்.

தன் சின்னஞ் சிறு குடையை அழகுறத் தாங்கிக் கொண்டு ஒய்யாரமாய் அவள் அங்கு வந்து கொண்டிருந்ததைக் கண்டு சங்குங் பிரமித்தே போனான். அவளுடைய நீண்ட இற்றுக் கண்களின் இரப்பைகளின் அசைவு, ஏதோ வண்ணப் பட்டுப் பூச்சிகள் ஒரே இடத்தில் பறந்து கிடப்பது போலிருந்தது அவனுக்கு. மஞ்சள் நிற மேனிக்கு எடுப்பான சிவந்த உதடுகள். மூக்கோ நட்டையாயமைந்து வெகு அழகாயிருந்தது. அவள் தன் கருத்த நீல மயிரை அழகுறக் கழுத்து வரையிலும் வெட்டி விட்டுக் கொண்டிருந்தாள். காதுகளிலோ மெல்லிய பொன் வளையங்கள் ஊசலாடின. தன் சின்னஞ் சிறு பாதங்களால் வாத்து நடை நடந்து வந்து வீட்டடைந்தாள் லூசி யொங்.

வெகு நாட்களாக நாடோடியாயிருந்து வரும் சங்குங், லூசி யொங் போன்ற நல்ல குணப் பெண்களை எங்கு சந்திக்கப் போகிறான்! அடிக்கடி அவளையே பார்த்துக் கொண்டிருந்தான்.

அப்பொழுதே சங்குங்கைத் தம் மகளுக்கு அறிமுகப்படுத்தி வைத்து, விஷயத்தையும் சொன்னார் பெரியவர். லூசி யொங் சற்று யோசித்



தாள். "அதற்கென்ன, ஒருவருமே உதவிக்கில்லை யென்றால் இங்குதான் இருந்து விட்டுப் போகட்டுமே. ஏதோ நம்மாலான உதவி!" என்றாள்.

அன்றிரவிலிருந்தே சங்குங் அவர்கள் வீட்டில் இருந்து வரலானான்.

தினம் அவளுடன் நெருங்கிப் பழக பழக, சங்குங்கின் மனம் இலேசாய்க் கிறுகிறுக்க ஆரம்பித்தது. அவளைப் பிரிந்து பாக்டரியிலிருந்த பொழுதுகூட, லூசி யொங்கின் ஞாபகமாகவே தான் பட்டு நெய்வான். சமயத்தில் தனக்குத் தானே, லூசி யொங்கை மணம் புரிந்து இன்ப வாழ்க்கை நடத்துவதுபோல் கற்பனை பண்ணிக் கொண்டு மகிழ்வான் சங்குங். ஆனால் லூசி யொங்கின் மனத்தின் ஆழத்தில் தன்னைப் பற்றி என்ன நினைக்கிறாள் என்பதை அவனால் அறிந்து கொள்ளவே முடியவில்லை. அவள்தான் எப்பொழுதுமே அவனுடன் சர்வ சாதாரணமாகப் பழகிக் கொண்டு வந்தாளே!

வெகு நாள் வரையில் மூடு மந்திரமாயிருந்து வந்த அவனுடைய அந்தரங்கம், இன்று கடற்கரையில் நன்றாய் வெளிப்பட்டு விடவே, தூக்கமே வரவில்லை சங்குங்குக்கு. ஆயிரங் கோடி எண்ணங்கள் அவன் மனத்தில் கொந்தளித் தெழுந்து ஆர்ப்பரித்தன; படுக்கையில் புரண்டுகொண்டே கிடந்தான். "நீதான் என் அண்ணா" என்று லூசி யொங் வெளிப்படையாய்ச் சொன்ன வார்த்தைகள், அவனைச் சுற்றிச் சுற்றி வந்தன. நீண்ட சிந்தனையின் முடிவில் ஒரு தேக்கம் — சமாதானம் ஏற்பட்டது. அவளுடைய பேரழகுக்கு நாம் அருகதை யுள்ளவனா! என்றெல்லாம் கேள்விகள் பிறந்தன அவன் மனசில். 'அவள் சொன்னது சரிதான். இனிமேல் லூசி யொங் நம் தங்கையே தான் என்ற முடிவுக்கே வந்தான். பிறகுதான் தூக்கமும் வந்தது.

மறுநாளிலிருந்தே எவ்வித விகற்பமுமில்லாமல் லூசி யொங்குடன் பழகிக் கொண்டு வந்தான். அவன்பால் அளவுக்கு மிஞ்சின சகோதர வாஞ்சையைச் சொரியத் தவறவே யில்லை. லூசி யொங்கும் "அண்ணா! அண்ணா!" என்று உயிரை விட்டாள்.

ஒரு நாள் பிற்பகல் சாப்பிட வந்த பொழுது, ஒரு சந்தோஷ செய்தியைக் கொண்டு வந்திருந்தான் சங்குங். பெரியவரைத் தனிமையில் அழைத்துத் தாழ்ந்த குரலில் பேசினான்.

"எங்கள் பட்டு நெசவுப் பகுதிக்கு பீங் சுவாங் என்ற ஒரு புது இளம் மானேஜர் வந்திருக்கிறார். அவர், நானும் லூசியும் அடிக்கடி ஒன்று சேர்ந்து பாக்டரிக்குச் செல்வதைப் பார்த்திருப்பார் போலிருக்கிறது. நேற்று மாலை என்னைக் கூப்பிட்டனுப்பி லூசி யொங்கைப் பற்றி ரொம்பவும் விசாரித்தார். நானும் சொல்லி யிருக்கிறேன். ஆள் அழகன். இந்த இடம் நிச்சயமானால் லூசி யொங் அதிருஷ்டக்காரிதான்" என்றான். அதற்குள் அவள், "என்ன இரகசியம்!" என்று அங்கு வந்தாள். "இப்பொழுது இரகசியமாகத்தானிருக்கும். பிறகுதான் வெளிச்சத்திற்கு வரும்" என்று வேடிக்கையாய்ச் சொல்லிச் சாப்பிட்டுச் சென்றான் சங்குங்.

அவன் சொல்லிப் போனதற்கேற்ப, அன்று மாலையே, லூசி யொங் திரும்புவதற்கு முன், அந்தப் புது மானேஜர் பீங் சுவாங்கே வீடு தேடி வந்து பெரியவரைத் தனிமையில் சந்தித்துப் பேசினான். தன்னைப்பற்றி ரொம்ப தூரம் சொல்லி, எப்படியும் லூசி யொங்கைத் தனக்குக் கொடுக்கும்படி கேட்டான்.

"அவன் வரட்டும். அவனுடன் கலந்து யோசித்துச் சொல்லுகிறேன்" என்று பெரியவர் அனுப்பி வைத்தார் அவனை.

அன்றிரவு சாப்பாடு வேளையில் மூவருக்குள் இது பற்றி பலத்த ஆலோசனை நடந்தது. பெரியவர் மனம் சற்று சலன மடைவதைக் கண்டு, "அவர் நம்மை நாடி வந்தது பெரிது. ஜூலி சியாங்கின் அழகே அவரை அப்படி வசீகரித்திருக்கிறது. ஒன்றுமே யோசிக்க வேண்டாம். இதோ நானே போய் சம்மதம் தெரிவித்து வந்து விடுகிறேன்" என்று அடித்துப் பேசி எழுந்தான் சங்கர். நேரே அப்பொழுதே சென்று மிங் சுவாங்கிடம் சம்மதத்தைத் தெரிவித்து விட்டும் வந்து விட்டான். அந்தக் கல்யாணம் முடிவதில் அவனுக்கு அத்தனை துடி துடிப்பு இருந்தது.

அந்த வாரக் கடைசியிலேயே, ஜூலி சியாங்கிற்கும் மானேஜர் மிங் சுவாங்கிற்கும் வெகு விமரிசையாய்க் கல்யாணம் நடந்தது. பண்ணையில் வேலை செய்தோ ரனைவரும் அதை வெகுவாகக் கொண்டாடிக் களிப்புற்றார்கள்.

கல்யாணமாகிச் சதிபதிகள் இன்பத்தில் மூழ்கித் திளைத்துக் கொண்டிருந்தனர். ஆனால் சங்கருக்கு மட்டும் தன் தியாகத்தின் பலனை அனுபவிக்கும் நெஞ்சுறுதி ஒரு சிறிதும் இருக்கவில்லை.

---

பாரதி காட்டிய பாதை

# உரிமை யில்லை

உடலை வருத்தி உழைப்பதிலும் கூட இந்த வேலை உயர்ந்தது, இது தாழ்ந்தது என்ற பாகுபாடு நம்மவரிடை அதிகம். ஆண்களிலாவது அநேகமாக அனைவரும் ஒரு தொழிலில் இல்லா விட்டால் மற்றொரு தொழிலில் ஈடு பட்டுள்ளனர். சோம்பித் திரிபவர் அதிகமில்லை எனலாம். பெண்கள் (உத்தியோகங்களுக்குப் போகாதவர்கள்) வருஷத்தில் பாதி நாள் வேலையில்லாது காலம் கழிக்கும் விவசாயிகளைப் போன்று, வீட்டு வேலை முழுநேர வேலையாக இல்லாததால் நல்ல முறையில், பயனுள்ள முறையில் பொழுதைக் கழிக்க முடியாமல் திண்டாடுகின்றனர். வீட்டிலிருந்தபடியே ஒரு வேலையை அவர்கள் ஏன் ஏற்கக் கூடாது! நம்மைச் சுற்றிலும் எழுத்து வாசனையில்லாத பலர் இருக்கிறார்களே. மத்தியான வேளைகளில் அவர்களுக்குக் கல்வி கற்பிக்கும் வேலையை வீட்டிலிருக்கும் படித்த பெண்கள் ஏற்கலாம். ஏழை ஒருவனுக்கு எழுத்தறிவித்தால் எத்தனையோ நன்மை உண்டு. ஒவ்வொருவரும் ஒவ்வொரு துறையில் முழு மனதுடன் உழைக்க வேண்டும்.

"சுற்றி நில்லாதே (சோம்பல்) பகையே
துள்ளி வருகுது (உழைப்பெனும்) வேல்"

என்பது நம் தாரக மந்திரமாக இருக்க வேண்டும். உழைப்பில்லாத சமூகம் உயிரோடு இருக்க முடியாது.

வாழ்விற்கு ஒரு லட்சியம் இருந்தால் தான் உழைக்க உற்சாக முண்டாகும். லட்சியம் சுலபத்தில் அடைய முடியாதபடி உயர்ந்ததாக உள்ளவரை நம் உழைப்பும் அதிகமாகும். ஏனெனில் எந்த உயர்ந்த பொருளும் கிடைக்கும் வரைதான் சுறுசுறுப்பும் ஆதங்கமும் இருக்கும். காரியம் கை கூடினால் உற்சாகமும் உழைப்பும் குறைந்து சப்பிட்டு விடும். நாட்டின் சுதந்திரம் லட்சியமாக இருந்த காலத்தில் இருந்த உற்சாகமும் உழைப்புக்கு அஞ்சாத் தன்மையும் சுதந்திரம் கிடைத்த பின் இல்லை என்றால் அது நம் முன் ஒரு சிறந்த லட்சியம் இல்லாத குறைதான். சுதந்திரம் கிடைத்த மகிழ்ச்சியில், அண்ணன் வாலி இறந்து அரச போகம் அடைந்த சுக்ரீவன் நிலையில் இருந்து விட்டோம். நம் கடமையை—அதாவது உழைக்க வேண்டுமென்பதை—மறந்து விட்டோம். சுக்ரீவனுக்குப் புத்தி புகட்ட ஒருவர் வர வேண்டியிருந்தது போல் இன்று நமக்கும் யாராவது உழைப்பை வற்புறுத்த வேண்டியிருக்கிறது.

சோம்பித்திரிய ஆண், பெண், மாணவர் யாருக்கும் உரிமையில்லை.

ஆதி காலத்திலிருந்து நம்மவர் உழைப்பைப் போற்றி வந்திருக்கின்றனர் என்பதற்கு ஆயுத பூஜை ஒரு சான்று. உழைப்பில்லாது மானசிக ஸ்வர்க்க பூமியாக இந்தியாவை எந்த மகா புருஷரும் கனவு காணவில்லை. விவேகானந்தர், பாரதியார், மகாத்மா காந்தி அனைவரும் காண விரும்பிய இந்தியா உழைப்பால் உயர்ந்த இந்தியா தான்.

"சோதி அறிவில் விளங்கவும்—உயர்
சூழ்ச்சி மதியில் விளங்கவும்—அற
நீதி முறைகள் வழுவாமலே—
எந்த நேரமும்
பூமித் தொழில் செய்"

என்று பாரதியாரின் சற்குரு கண்ணன் உபதேசிப்பதை நாம் ஏற்றுக் கொள்ள வேண்டும். பாரதி பாரத நாட்டுக்கு முற்றும் புதிய ஒரு பாதையை நமக்குக் காட்டித் திணற அடித்து விடவில்லை. ரிஷிகள் காலத்திலிருந்து இன்றைய தலைவர்கள் வரை பிரசங்கங்களாகச் சொல்லுவதைத்தான் பாப்பாவும் புரிந்து கொள்ளும்படி சோம்பலின் கெடுதியை வற்புறுத்திச் சொல்லி, வாழும் முறையை உழைப்பின் பெருமையைக் கூறியுள்ளார். அமெரிக்காவையும், ரஷியாவையும் நாம் லட்சிய பூமியாகக் கொள்ள வேண்டாம். அமெரிக்கர்கள் நமக்கு லட்சிய புருஷர்கள் அல்ல. நம் நாட்டு மகான்கள் வேதகால புருஷர்களிலிருந்து பாரதியார், காந்திஜி வரை உள்ள லட்சிய புருஷர்கள் காட்டிய உழைப்புப் பாதையில் செல்வோம்.

ஞானம்பாள் (புகளூர்)

○ ● ○ ● ○ ● ○ ● ○ ● ○ ● ○

**பாரதி காட்டிய பாதை**

மனிதன் உயர்வதற்குச் சிறந்த சாதனம் ஆண்மைத்தன்மை என்னும் குணமாகும். எந்த வகைச் செயலையும் தலைமை தாங்கிச் செய்து முடிக்கும் இயல்பு ஆண்மைத் தன்மையாகும். வாழ்க்கைப் பாதையில் எதிர்ப்படும் தோல்விகளையும் வெற்றிகளாக மதித்து முன் செல்பவனே வெற்றியடைபவன். எக்கிலையிலும் ஒருவன் மனச்சோர்வு கொள்ளுதல் தகாது. கோழையாகிய இயல்பை மனத்தினின்று அடியோடு அகற்ற வேண்டும். ஆண்மைத் தனத்துடன் தளரா மன உறுதியும் கொள்ள வேண்டும். எந்தச் செயலைச் செய்ய ஆரம்பித்தாலும் அதை வெற்றிகரமாக முடிக்கும் வரையில் அக்காரியத்தின் மத்தியில் எதிர்ப்படும் தோல்விகளைப் பொருட் படுத்துதல் கூடாது. மனத்தில் தைரியம் குடி கொள்ள வேண்டும். உலகில் சேரும் பலவித இடையூறுகளையும் தடுத்து நின்று உலகில் அமைதி நிலைப் பாடு படும் உணர்வு மிக்க உள்ளத் திண்மையே "உரம்" எனப்படும்.

இதை வலியுறுத்துவதற்காகவே, "வயிரமுடைய நெஞ்சு வேண்டும்" என்றார் பாரதியார். வயிரமுடைய நெஞ்சு என்பது தளரா ஊக்கத்தையும் விடா முயற்சியையும் மன உறுதியையும் இயல்பாகக் கொண்ட ஒருவன் மனத்துக்குக் குறிப்பிடப் பட்டதாகும். இத்தகைய பண்புகளை இயல்பாகக் கொண்டு வாழ்ந்து வந்ததால்தான் சிறந்த வீரர்களெனப் போற்றப்படும் சிவாஜி, சமுத்திர குப்தர், அசோகர் முதலியோர் உயரிய நிலையை யடைந்தனர்.

திருவல்லிக்கேணி சி. ஆர். ராமசாமி

○ ● ○ ● ○ ● ○ ● ○ ● ○ ● ○

அந்த அனாமதேயத் தீவின் பண்ணை வாழ்க்கை இப்பொழுது அவனுடைய ஏக்கத்தையும் ஏகாந்தத்தையும் பயங்கரமாக்கியது.

எத்தனையோ வருஷங்களுக்கு முன் சீனாவில் தனியே விட்டு வந்த தன் கூடப் பிறந்த பிரிய தங்கையின் ஞாபகம் அடிக்கடி மேலெழுந்து அவனைத் துன்புறுத்தியது. சிறிது பணம் சேர்த்துக் கொண்டு ஒரு நாள் சீனாவுக்குப் புறப்பட்டு விட்டான், கங் சூன். வழியில் பெரும் புயல்காற்று ஏற்பட்டு, அவன் பிரயாணம் செய்த கப்பலுக்குப் பலத்த ஆபத்து ஏற்பட்டது. உயிரோடு ஊர் போய்ச் சேருவோமா என்றாகி விட்டது கங் சூனுக்கு. கடைசியில் வெகு நாட்களுக்குப் பிறகு சீனதேசத்தை யடைந்தான். கையில் பெட்டியுடன் நடந்து சென்று பெகிங் நகரத்தினுள் நுழைந்தான். அம் மாநகரம் எப்படியோ மாறிப் போயிருந்தது. ஜேஜே என்று ஜனங்கள் அப்படியும் இப்படியும் போய்க் கொண்டிருந்தார்கள். ஆனால் ஒருவரேனும் கங் சூனை அடையாளம் கண்டு கொள்ளவே யில்லை.

சற்று தூரம் சென்றதும், கால்வரை நீண்டிருந்த கந்தல் சட்டையை மாட்டிக் கொண்டிருந்த ஒரு ஏழைச் சிறுவன், ஓடி வந்து "ஐயா இந்தப் பெட்டியை நான் சுமந்து வருகிறேனே! ஏதாவது சில்லறை கொடுங்களேன்" என்றான்.

பெட்டியைச் சிறுவன் தலையில் வைத்து விட்டு நாலு கடை கடந்தான் கங் சூன். வெகு சிரமப்பட்டு வீட்டைக் கண்டு பிடித்து உள்ளே நுழைந்தான். அவனை வரவேற்க ஒருவரும் காணோம். பெட்டியைச் சுமந்து வந்த அச்சிறுவன் ஆச்சரியமடைந்து 'மா' என்றழைத்துக்கொண்டே நெடுகச் சென்றான். "யாரோ ஒருவர் வந்திருக்கிறார்" என்று சொல்லித் திரும்பினான்.

"யாரது!" என்று ஈனக்குரலில் கேட்டுக் கொண்டே எலும்பும் தோலுமான பெண் உருவம் ஒன்று வந்தது. அருகில் வந்ததும்—கூடப் பிறந்த பிறப்பாயிற்றே அடையாளம் தெரியாமலா யிருக்கும்! "ஆ! அண்ணா!" என்று கதறினாள். "ஆ! என் தங்கைதானா நீ! இவன் உன் பையனா!" என்று கங் சூனும் கதறினான். உடனே பையனை வாரியணைத்துக் கொண்டான் கங் சூன். அண்ணன் தங்கை இருவர் கண்களிலும் நீர் வழிந்தது. "சென்ற மாதந்தான் அம்மா கூட இறந்து போனாள். கடைசிக் காலத்தில் அம்மாவுக்கு உன் ஞாபகம் கூட அடிக்கடி வந்தது. கையிலிருந்த பணத்தை யெல்லாம் செலவழித்து என்னையும் நல்ல பணக்கார மாப்பிள்ளையாய்த் தான் பார்த்துக் கொடுத்தாள்" என்று பெருமூச்செறிந்தாள். "பிரயாணக் களைப்பு இருக்கும். சாப்பிட்டுக் கொண்டே பேசலாம் வா" என்று உள்ளே சென்று பீங்கான் கோப்பையில் சுடச் சுடச் சோறு பரிமாறிக் கொண்டு வந்தாள்.

அதற்குள் கங் சூன் தன் உடுப்பைக் களைந்து கொண்டே "அப்புறம்! உன் கதி ஏன் இப்படி ஆகணும்!" என்றான். "என்னத்தைச் சொல்வது நான். இந்தப் பையனைப் பெறுகிறவரை சீரும் சிறப்புடன் தான் இருந்து வந்தேன். பிரசவம் ஆன கையோடு உடம்புக்கு வந்து இரண்டு மூன்று மாதம் படுக்கையிலேயே கிடந்தேன். அப்பொழுது கொண்டுவந்து விட்டுப் போனவன் தான் பிறகு எட்டிக்கூடப் பார்க்கவில்லை. என் அழகு போய் விட்டதாம். என்னைச் சேர்த்துக் கொண்டு வாழ முடியாது என்று கட்டாந்தில் விட்டுப் போய்விட்டான், பாவி!" அவள் குரல் கரகரத்தது. கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

"யாரது அந்தத் துரோகன்!" என்றான் கங் சூன். அவனுடைய குரல் கடுகடுத்தது. "காண்டன் நகரத்தில் மிங் சுவாங் என்றால் தெரியாதவர்கள் ஒருவருமே இருக்க மாட்டார்கள். இப்பொழுது அவன்கூட போர்மோசா தீவில் குடியேறி விட்டதாகக் கேள்வி. அங்கு யார் குடியைக் கெடுக்கப் போகிறானோ!" என்றாள்.

"யாரது! மிங் சுவாங்கா!"

"ஆமாம். அவனேதான்!"

அதைக் கேட்ட கங் சூன் அப்படியே உட்கார்ந்து விட்டான். அவன் மண்டையை யாரோ பலத்த ஆயுதத்தால் தாக்கியது போலிருந்தது. கண்களில் பொறி பறந்தன. சுற்றிலு மிருந்த பொருள்களெல்லாம் நாலுமாகச் சுற்றி வந்தன.

"எழுந்திரு, அண்ணா. சாப்பிட்டு விட்டு கொஞ்சம் தூங்கு, அலுப்புத் தீரும்!" என்றாள் தங்கை.

உடனே அவசர அவசரமாய்த் தன் பணப் பையை யெடுத்துச் சிறுவன் கையில் கொடுத்து "இதோ வந்தேன்" என்று வெளியே சென்றான்.

கோப்பையிலிருந்த சுடு சோறு ஆறி அவலாய்ப் போய்க் கொண்டிருந்தது. கங் சூனைக் காணவே காணோம்.

அவன் தான் இந்த உலகத்தையும் உலக மக்களையும் அறவே வெறுத்து, தெருத் தெருவாய் புத்தர் பிரான் புகழைப் பாடிக் கொண்டு திபெத் தேசத்திலிருக்கும் பௌத்த மடத்திற்கு யாத்திரையாகப் போகும் பௌத்த பிக்ஷுக்களுடன், திரும்பிக் கூடப் பாராமல் போய்க் கொண்டிருந்தானே!



# அழகிற்கான அரிய சாதனம் ‘ஓடின்’

***Every year greater numbers of discriminating ladies turn to the regular use of OATINE beauty creams.***

**“Cream at night, snow by day,
gives loveliness the Oatine way.”**




Make sure seal is unbroken

# ஆஸ்துமா சளி ஒரே நாளில் முற்றிலும் அகற்றப்பட்டது

மெண்டாகோ (Mendaco) கண்டு பிடித்தது முதல்மூச்சுத் திணறல், சுவாஸ இழுப்பு, ஆஸ்துமா வினால்யாரும் அவதியுறவேண்டாம். மெண்டாகோ (Mendaco) உபயோகித்தால் இன்ஜக்ஷனும் புகையும் வேண்டாம். ருசியற்ற இரு மெண்டாகோ (Mendaco) மாத்திரைகளை ஆகாரத்துடன் சாப்பிட்ட 10 நிமிஷத்தில் உடலிலுள்ள சளி கரையும். சுலபமாக மூச்சுவிடலாம். நரம்புகளுக்கு விச்ராந்தி, சுவாசப் பைக்கு நன்மை, விருவிருப்பு ஏற்படும்.

### சிசுவைப் போல் அயர்ந்த நித்திரை

ஆஸ்துமாவினால் அவதியுற்ற ஆயிரக்கணக்கானவர்கள் மெண்டாகோ (Mendaco) உட்கொண்டு முதல் நாள் இரவே ஆழ்ந்த நித்திரை செய்து சுகமடைந்து 5 முதல் 10 வருஷம் இளமை படைத்ததாகவும் உணர்ந்தனர். ஆஸ்துமாவின் இடையூறுகளை மெண்டாகோ (Mendaco) இயற்கையில் தவிர்க்கிறது. (1) சளி, கோழையை இளக்குகிறது. (2) சுவாச மார்க்க சிறுதசைகளுக்குப் பலம் அளிக்கிறது. (4) தேகத்திற்கு விருவிருப்புடன் ரத்த புஷ்டியையும் அளிக்கிறது.

### ஐந்து வருஷமாக ஆஸ்துமா இல்லை

சுலபமாக சுவாஸித்து நல்ல நித்திரையை அளிக்கிறது. மீண்டும் ஆஸ்துமா அண்டாது பண்படுத்துகிறது. மிஸ்டர் ஜே. ஆர். எழுதுகிறார்: "ஆஸ்துமாவினால் என் உயிரே போய் எடையில் 40 பவுண்டும் குறைந்தது. இழுப்பு, இருமல், மாரடைப்பினால் தூக்கமில்லை. சாவைத்தான் எதிர்பார்த்தேன். மெண்டாகோ (Mendaco) முதல் இரவே எனது பிடிப்பை விடுவித்தது. கடந்த இரண்டு வருஷங்களாக ஆஸ்துமாவே இல்லை." மிஸஸ். ஏ. டபிள்யூ எழுதுகிறார்: "கடந்த 25 வருஷமாக எனக்கு ஆஸ்துமா உண்டு. மெண்டாகோ (Mendaco) உபயோகித்ததிலிருந்து இரவில் நல்ல தூக்கம். மீண்டும்ஆஸ்துமாவே இல்லை." மிஸஸ். ஜி.ஈ.ஸி எழுதுகிறார்: "மெண்டாகோ (Mendaco) பற்றி கேள்விப்பட்ட நன்னாளை வாழ்த்துகிறேன். கடந்த 35 வருஷமாக இராத் தூக்கமறியாத என்போன்ற ஏழை ஸ்திரீக்கு ஆண்டவன் அளித்த அமிர்தம் மெண்டாகோ (Mendaco). தூக்கமின்றி ஆஸ்துமாவால் உருகியே போனேன். இப்போது அதை மறந்துவிட வேண்டும் என உணருகிறேன்."

### கைமேல் காணும் பலன்

மெண்டாகோ (Mendaco) சாப்பிட்டதுமே ரத்தத்துடன் கலந்து ஆஸ்துமாவை ஒழிக்கிறது. மெண்டாகோ (Mendaco) யௌவன உணர்ச்சி, பலம் இவற்றை அளிக்கிறது. வாபஸ் உத்திரவாதத்தில் மெண்டாகோ (Mendaco) உபயோகித்து தீர்ப்பளியுங்கள். பூரண குணம் பெற்று திருப்தி யளிக்காவிடில் காலிபெட்டியை அனுப்பினால் முழு தொகை வாபஸ் செய்யப்படும். மெண்டாகோ (Mendaco) வாங்குங்கள். இன்றிரவு எப்படித் தூங்குகிறீர்கள். மறு நாள் காலை எவ்விதத் தெம்புணர்ச்சி ஏற்படுகிறதெனப் பாருங்கள். உத்தரவாதம் உங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கிறது.

**Mendaco**

**மெண்டாகோ**

★ ஆஸ்துமா ★ மார்ச்சளி நோய் ★ ஹே ஜுரம் இவற்றை அறவே அகற்றுகின்றது

---

உங்கள் காலில் உள்ள

**Zam-Buk**

தொந்தரவுகளை ஜாம்-பக்



எவ்வளவு விரைவில் குணப்படுத்துகிறது என்று பாருங்கள்!



ஜாம்-பக் நோயுற்ற காலில் உள்ள புண்களை மாயமாய் மறையச் செய்கிறது.

உங்கள் கால்களில் ஜாம்-பக்கைப் போட்டுத் தேய்த்து விடுங்கள். வலி, அயர்ச்சி, நோய் எல்லாம் விரைவில் ஓடிப்போகும். ஹிதம் தந்து குணப்படுத்தும் சிறந்த ஔஷதத் தைலங்கள் ஜாம்-பக்கில் இருக்கின்றன. ஜாம்-பக் எரிச்சலையும், வீக்கத்தையும் போக்கடிக்கிறது. ஜாம்-பக் கொப்புளங்களை குணப்படுத்துகிறது. ஜாம்-பக் கால் ஆணியை அகற்ற உதவும். ஜாம்-பக் உங்கள் கால்வலிகளைக் குணப்படுத்துகிறது. மற்றும் கமைச்சல், இதர சரும நோய்கள், வெட்டுப் புண்கள், காயங்கள், புண்கள், ரணங்கள், செருப்புக் காயங்கள், மண்டைச் சொறி, பூச்சிக்கடி மூலம் முதலியவற்றிற்கு ஜாம்-பக் உபயோகிக்கலாம்.



ஜாம்-பக் உலகத்தின் சிறந்த சரும ஆயின்ட்மெண்ட் மிருகக் கொழுப்பு கலப்பற்றது என்ற உத்தரவாதம்

FZY 3 மதராஸிற்கு ஸோல் ஏஜண்டுகள்: நாதா & கம்பெனி, பார்க் டவுன்




## 2. உள்ளமும் உடலும்

வள்ளி உட்கார்ந்திருந்த இடத்தைவிட்டு எழுந்திருக்கவில்லை. பெத்தண்ணன் அவளைப் போத்தியம்மாவின் கையில் ஒப்படைத்து விட்டுப் போகிறேன் என்று சொல்லியது அவளுக்கு வெறுப்பையும் கலக்கத்தையும் உண்டாக்கியது. ஆனால் அந்த நாடோடிகளின் ஆக்ஞையை மீற அவளால் முடியுமா! நாளையதினம் இந்தக் குடிசைகளெல்லாம் பிரிக்கப்பட்டு ஆண் பெண் குழந்தைகள் அத்தனை பேரும் போய்விடுவார்கள். அவளும் அவளுக்கு வைரியாக விளங்கும் சூன்யக்காரக் கிழவி போத்தியம்மாவும்தான் அங்கே தனித்து இருக்க வேண்டும்.

நெடுநேரம் வரையில் வள்ளி இதை நினைந்து நினைந்து மனம் புழுங்கினாள். அவள் மனத்தில் அலுப்பும் வெறுப்பும் ஏற்பட்டன. அவள் உடல் சோர்ந்தது. அங்கேயே அந்த இடத்திலேயே அவளை யறியாமல் படுத்து உறங்கி விட்டாள்.

பெத்தண்ணன் தன் அதிகாரத் தொனியில் எல்லோரையும் பிரயாணத்திற்குத் துரிதப் படுத்திக் கொண்டிருந்தபோதுதான் வள்ளி நித்திரை கலைந்து எழுந்தாள். பொழுது விடிந்து விட்டது. குடிசைகளெல்லாம் துரிசாகப் பிரிக்கப்பட்டன. வயதானவர், வாலிபர், குழந்தைகள் என்ற வித்தியாசம் இல்லாமல் எல்லோரையும் பெத்தண்ணன் தன் அதிகாரத் தொனியோடு விரட்டிக் கொண்டிருந்தான். எல்லோரும் சுறு சுறுப்பாகப் பிரயாணத்துக்கு வேண்டிய காரியங்களைச் செய்து கொண்டிருந்தனர். சில விநாடிகளில் அவர்கள் புறப்படுவதற்கும் சித்தமாகி விட்டனர்.

வள்ளி மெதுவாக எழுந்து போத்தியம்மாவின் குடிசைக்குச் சமீபமாகப் போய் நின்றாள். அவளை அந்த அரக்கியின் கையில் ஒப்படைத்து விட்டு அவர்கள் குதூகலமாகப் பிரயாணப் பட்டது அவளுக்கு மிகுந்த துக்கத்தையும் பயத்தையும் கொடுத்தது. ஆகவே, எவ்விதக் கஷ்டத்திற்கு உள்ளாக நேர்ந்தாலும் சரி, போத்தியம்மாவின் கையிலிருந்து தப்பி அவர்களோடு நடந்து செல்வதுதான் நல்லதென்று அவளுக்குப் பட்டது. ஆனால் அவர்கள் அவள் தங்களோடு வருவதை ஒப்புக் கொள்ள வேண்டாமா!

மூங்கில், பாய், மூட்டை முடிச்சு முதலியவைகளைச் சுமந்த வண்ணம் அந்த நாடோடிகள் ஒற்றையடிப்பாதை வழியாக ஒருவருக்குப் பின் ஒருவராக ரஸ்தாவை நோக்கி நடந்தனர். கழுதைகளும், காளை மாடுகளும் தாங்கமாட்டாத சுமைகளைத் தாங்கிக்கொண்டு தள்ளாடி நடந்தன. நாய்கள் அவர்களுக்கு முன்னும்பின்னுமாக ஓடின.

போத்தியம்மா அவர்களை வழி அனுப்புவதற்காக ரஸ்தா வரையில் அவர்களைப் பின் தொடர்ந்தாள். வள்ளி குடிசை வாசலில் நின்று அவர்களைப் பார்த்து ஒரு பெருமூச்சு விட்டாள்.

சிறிது நேரத்திற்கு முன்னால் பத்துப் பன்னிரண்டு குடிசைகளும் ஜனச் சந்தடியும் நிறைந்திருந்த அந்த இடத்தில் இப்பொழுது போத்தியம்மாவின் சிறு குடிசை மட்டும் தான் இருந்தது. அந்தக் குடிசைக்குச் சமீபமாக இருந்த மரத்தடியில் பொதி சுமக்கும் கிழட்டுக் காளை மாடு ஒன்று கட்டப்பட்டிருந்தது. போத்தியம்மாவிற்கு இருந்த ஒரே ஒரு சொத்து அந்தக் கிழட்டுக் காளைமாடுதான். போத்தியம்மாவிற்கு எவ்வளவு வயதோ அவ்வளவு வயது அந்தக் காளை மாட்டிற்கும் ஆனாலும் ஆகியிருக்கலாம். அவளைப் போல் அதுவும் வயதானாலும் தளர்ச்சியடையாமல் அவளுக்காகக் கூடுமான வரையில் உடலால் உழைத்து வந்தது.

போத்தியம்மா தன் வயதான காலத்தில் அதிகமாகத் தன் கூட்டத்தாரோடு சேர்ந்து பிரயாண சிரமத்தை ஏற்படுத்திக் கொள்வதில்லை. ஆனால் எல்லோரோடும் ஊர் ஊராகச் சுற்ற வேண்டும் என்று ஆசை மாத்திரம் இன்னும் அவளுக்கு இருந்தது. போத்தியம்மா ரஸ்தா வரையில் அவர்களைப் பின்தொடர்ந்து சென்று வழியனுப்பினாள். அவர்களோடு நீண்ட வழிப் பிரயாணத்தை மேற்கொள்ளா விட்டாலும் ரஸ்தா வரையில் அவர்களோடு சேர்ந்து சென்று வழி அனுப்பியதாவது அவள் மனத்திற்குச் சிறிது ஆறுதலை அளிக்காதா! அந்தக் கூட்டத்தினர் கண் மறையும் வரையில் ரஸ்தாவிலேயே நின்று ஆற்றாமையோடு பார்த்துக் கொண்டிருந்தாள்.

அந்த நாடோடிகளுக்கு வெகு நாட்களாகவே போத்தியம்மாவின் முரட்டுக் குணங்களெல்லாம் நன்கு தெரியும். இருப்பினும் அவளால் ஆகக் கூடிய சில காரியங்களுக்காகவும், அவளுக்கு வயதாகி விட்ட தோஷத்திற்காகவும் மிகவும் சகிப்புத்தன்மை காட்டி வந்தனர்.

வள்ளி குடிசை வாசலில் நின்ற வண்ணம் அவர்கள் செல்லும்போது ரஸ்தாவில் ஏற்பட்ட புழுதிப் படலத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவர்களில் கடைசியில் செல்லும் மனிதனாவது திரும்பிப் பார்த்து அவளுக்காகச் சிறிது இரக்கப்பட்டு 'நீயும் எங்களுடன் வா' என்று

கூப்பிடமாட்டாளு என்பது அவளுடைய எண்ணம். ஆனால் அவர்கள் எல்லோருமே இரக்கமற்றவர்களாக திரும்பிப் பாராமலேயே போய் விட்டார்கள். இல்லாவிட்டால் பூரண கர்ப்பிணியாகிய அவளைப் போத்தியம்மா என்னும் பேயின் கையில் ஒப்படைத்து விட்டுப் போவார்களா!

போத்தியம்மாவின் கையிலிருந்து வள்ளி எப்பொழுது விடுதலை அடைய முடியும்! இன்னும் பத்துப் பதினைந்து நாட்கள் ஆகலாம். ஏன்! இன்னும் இரண்டு அல்லது மூன்று நாட்களுக்குள் விடுதலை கிடைத்தாலும் கிடைக்கலாம். அதை அவள் எப்படி நிச்சயமாகச் சொல்ல முடியும்! அவளுக்குக் குழந்தை பிறந்து அவள் உடல் நிலையும் குணமான பிறகுதான் அவள் அந்தக் கூட்டத்தாரோடு கலந்து கொள்ள முடியும். அவர்களோடு கலந்து கொள்வதால் அவளுக்கு என்ன லாபம்! அவர்களுக்குக் குழந்தைதானே முக்கியம்! பிறந்தவுடனே அதை அவர்கள் கையில் ஒப்படைத்து விட்டு அவள் எங்கு வேண்டுமானாலும் செல்லலாமல்லவா! பெத்தண்ணன்தான் அவள் எங்கு செல்வதாயிருந்தாலும் தடை இல்லை என்று சொல்லி விட்டானே! ஆனால் எந்தத் தாய்க்கும், தான் பெற்ற குழந்தையை பிறர் கையில் ஒப்படைத்து விட்டுச் செல்ல மனம்தான் வருமா! குழந்தை பிறந்த பிறகு எப்படியோ! ஆனால் இப்பொழுதோ அவளுக்கு ஒரு எதிரியின் கையில் ஒப்படைக்கப் பட்டதினால் ஏற்பட்ட வேதனைதான் அளவுக்கு மீறியதாக இருந்தது. அவள் மெதுவாகக் குடிசைக்குள் போய் உட்கார்ந்தாள்.



சிறிது நேரத்தில் மூக்கி முனகியபடி போத்தியம்மா குடிசைக்குள் நுழைந்தாள். அவளுடைய சுருக்கம் நிறைந்த விகாரமான முகமும் உக்கிரமான கண் பார்வையும் வள்ளிக்கு அச்சத்தை உண்டாக்கின. மற்றவர்களுக்காகத் தன் கொடூரத் தன்மையைச் சிறிது மறைத்து வைத்திருந்த போத்தியம்மா, அவர்களெல்லாம் அந்த இடத்தைவிட்டுச் சென்றபின் தன் குரூரத் தன்மையைப் பூரணமாக வள்ளியிடம் உபயோகிக்க நினைத்தாள் என்பது அவளுடைய பார்வையிலிருந்தே நன்கு விளங்கியது. வள்ளி அவளைக் கண்டதும் மெதுவாக எழுந்து நின்றாள்.

"ஹாம்! ஏன் எழுந்து நிக்கறே! அப்படியே ராசாத்திக் கணக்கா உட்கார்ந்திருக்கிறதுதானே! ஹாம். அது முடியாது. உனக்குத்தான் அதிசயமாகக் குழந்தை பிறக்கப் போகிறதுன்னு நினைச்சுக்கிட்டு எந்த வேலையும் செய்யாமல் என்னை ஏமாத்த முடியாது. எனக்குத் தெரியும். இப்பொழுது உனக்கு ஒன்றுமில்லை. இன்னும் பத்துப் பதினைந்து நாளாகும், உனக்குக் குழந்தை பிறக்க. அது வரையில் நீ இங்கே தண்டச் சோறு தின்ன முடியாது. ஆமாம். ஏதாவது நீ வேலை செய்துதானாக வேண்டும். தெரியுமா!" என்றாள் கடுகடுப்போடு போத்தி.

வள்ளி அவளுக்கு ஒரு பதிலும் சொல்லவில்லை. அவள் முகத்தைப் பார்க்க அஞ்சினவளாக வேறெங்கோ தன் பார்வையைச் செலுத்தினாள்.

"ஹாம், என்ன, வாயை மூடிக்கிட்டு எங்கோ பார்த்துக் கிட்டு நின்னா...! என்னை ஏமாத்த முடியாது. ஆமாம். இரண்டு நாளாக மாடு சரியான தீனி இல்லாமல் வாடிப் போய் நிக்குது. எங்கேயாவது பக்கத்து வயல் வெளியிலே புல்லு இருந்தால் பிடுங்கிக் கொண்டு வந்து போட்டுக் குளத்திலிருந்து இரண்டு வாளித் தண்ணியும் கொண்டு வந்து வை" என்றாள் போத்தியம்மா அதிகாரத் தொனியில்.

வள்ளி மெதுவாக நடந்தாள். அந்தச் சமயத்தில் போத்தியம்மா இட்ட வேலை செய்வதைத் தவிர அவளுக்கு வேறு எந்த வழியும் புலனாக வில்லை. ஆனால் அந்தச் சமயத்தில் எந்த வேலையையும் செய்ய அவள் உடல் நிலை அனு

கூலமாயில்லே. இப்பொழுது சிரமத்தோடு அவள் இட்ட வேலையைச் செய்தாலும் அப்புறம் சும்மா விட்டுவிடப் போகிறாளா போத்தி! அவளுடைய பாதுகாப்பில் இருக்கும் வரை அவள் சொற்படி நடக்காமல் தப்ப முடியாது என்பது வள்ளிக்கு நன்கு தெரியும். ஆகவே அவள் குடிசைக்கு வெளியே வந்து சிறிது நேரம் தயங்கி நின்றாள்.

குடிசைக்குள் இருந்த போத்தியம்மா வெளியே வந்து வள்ளி தயங்கி நிற்பதைப் பார்த்து விட்டுக் கோபத்துடன், "ஏன் இங்கே வந்து மரம்போல நிக்கிறே! உன்னை எங்கிட்ட அவங்க எதற்கு ஒப்படைச்சுட்டுப் போனாங்கன்னு எனக்குத் தெரியும். சாகசக் கள்ளி! உன் உடம்பிலே இப்போது எந்தக் கோளாறுமில்லே. அவங்க உன் மேலே வைச்சிருக்கிற பச்சாத்தாபத்திலே நீ ஏதோ சீமான்வீட்டு மகள் மாதிரி செல்லம் கொஞ்சி விளையாடப் பார்க்கிறே. அந்த ஜம்பம் என்கிட்டே சாயாது. மூதேவி! உன்னை எங்கிருந்தோ இழுத்துக்கிட்டு வந்து கல்யாணம் செய்துக் கொண்டதனால் தானே என் பேரன் அல்பாயுசிலே செத்தான்..." என்று சீற்றத்துடன் வார்த்தைகளைச் சரமாரியாக அடுக்கினாள்.

அவளுடைய வார்த்தைகள் ஒவ்வொன்றும் வள்ளியின் காதில் நாராசம் போல் விழுந்தன. அவளுக்குத் துக்கமும் கோபமும் பொங்கி வந்தன. "பாட்டி, அனாவசியமாப் பேசாதே. இப்படிப் பேசினால் நான் உன்னோடு ஒரு விநாடி கூடத் தங்க மாட்டேன். நீ சொல்கிற வேலையை எல்லாம் செய்ய எனக்கு இப்போ உடம்பிலே தெம்பு இல்லே. நான் வேண்டுமானால் போய் அவர்களோடு சேர்ந்து கொள்கிறேன்......" என்றாள் உள்ளக் குமுறலோடு.

"நீ போய் அவர்களோடு சேர்ந்து கொள்ளுவா! உனக்கு அவ்வளவு துணிச்சல் எங்கிருந்து வந்தது! ஓடுகாலிதானே! இல்லாவிட்டால் எங்கோ வேலையில் இருந்தவள் என் பேரனோடு திருட்டுத் தனமாக ஓடி வருவாயா! ஆனால் என்னை மீறி நீ அவர்களோடு சேர்ந்து கொள்ள முடியுமா! அவர்கள் உன்னைச் சேர்த்துக் கொண்டுதான் விடுவார்களா! எங்கே, நீ மாத்திரம் போய் விடு, பார்ப்போம்!" என்று சொல்லிவிட்டு மறுபடியும் குடிசைக்குள் போய் விட்டாள். குடிசைக்குள் போன பின்பும் அவளுடைய குரல் ஓயவில்லை. உள்ளிருந்த வண்ணமே வள்ளியை மனம் போன வாறெல்லாம் திட்டிக்கொண்டிருந்தாள்.

குடிசைக் குள்ளிருந்து சரமாரியாக வரும் வார்த்தைகள் ஒவ்வொன்றும் வள்ளியின் நெஞ்சைப் பிளப்பது போல் இருந்தன. அதைச் சகித்துக் கொண்டு அவளால் அங்கு நின்று கொண்டிருக்க முடியவில்லை. உண்மையாகவே அவளுக்கு அந்த இடத்தை விட்டுக் கிளம்பி விடலாமென்ற உணர்ச்சி தான் ஏற்பட்டது. காலையில் கிளம்பிய கூட்டத்தினர் அந்த நேரத்திற்கெல்லாம் ஒரு மைல் ஒன்றரை மைல் தான் போயிருக்கக் கூடும். சிரமத்தைப் பார்க்காமல் சிறிது வேகமாக நடந்தால் அவர்களைப் பிடித்து விடலாம் என்று அவளுக்குத் தோன்றியது. அப்படியே அவர்களைப் பிடித்து விட்டாலும் அவர்கள் தன்னையும் அழைத்துக் கொண்டு போவார்களா என்ற சந்தேகமும் மனத்தில் எழுந்தது. 'எப்படியோ அவர்களை மன்றாடிக் கேட்டுக் கொண்டால் அனுமதிக்க மாட்டார்களா! போய்த்தான் பார்ப்போமே!' என்ற தைரியத்தில் அந்தக் கிழவியோடு இனி மேல் ஒரு விநாடிகூடத் தங்கக் கூடாது என்ற தீர்மானத்திற்கு வந்தாள் வள்ளி. போத்தியம்மா குடிசைக்குள்ளிருந்து வெளியே வருவதற்குள் அவள் கண்ணில் படாமல் தப்பித்துக் கொண்டு விட வேண்டுமென்ற எண்ணத்தில் அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டும் விட்டாள்.

புறப்படும்போது வேகமாகவும் சுறுசுறுப்பாகவும் தான் நடந்தாள். ஒற்றையடிப் பாதையைத் தாண்டி ரஸ்தாவிற்கு வந்து விட்டாள். இரு புறமும் மரங்களடர்ந்த நேரான ரஸ்தா. கண்ணுக்கெட்டிய வரையில் நேராகச் செல்லும் அந்தப் பாதையை பார்த்தால் தொலையா நெடு வழியாகத் தோன்றும். அந்தப் பாதையில் அச் சமயம் ஜன நடமாட்டமே இல்லை. மாசி மாதம், காலைச் சூரியனின் ஒளி அவ்வளவு கொடுமையாக இல்லை. போகப் போகக் கடுமையாக இருந்தாலும் அடர்ந்த மரங்களின் நிழல் இருக்கிறது. அங்கிருந்து கும்பகோணம் எத்தனை மைல் என்று அவளுக்குத் தெரியாது. எத்தனை மைலாக இருந்தால் அவளுக்கு என்ன! வேகமாக நடந்து தன்னுடைய கூட்டத்தினரைப் பிடித்து விட்டால் அதற்கப்புறம் அவள் அதைப் பற்றிக் கவலைப் பட வேண்டிய அவசியமே இல்லை. தன்னுடைய வேகத்தைத் தளர விடாமல் நடந்தாள். சிறிது தூரம் தான் நடந்திருப்பாள். திடீரென்று அவளுடைய வயிற்றில் ஒருவிதமான வலி ஏற்பட்டது. அப்பொழுது மூச்சு விடுவது கூட அவளுக்குச் சிரமமாக இருந்தது. சிறிது வேகத்தைக் குறைத்துக் கொண்டு மெதுவாக நடந்தாள். ஆனால் அவளுக்கு ஏற்பட்ட வலி குறைவதாய் இல்லை. அவள் சிறிதுநேரம் ஒரு மரத்தின் நிழலில் நின்றாள். 'இந்தச் சமயத்தில் நாம் புறப்பட்டது தவறு, அசட்டுத்தனமான காரியம்' என்று அவளுக்குப்பட்டது. 'ஏன் திரும்பிப் போத்தியம்மாவின் குடிசைக்கே போய் விடக் கூடாது!' என்றும் தோன்றியது. 'போகலாம். ஆனால் அவளுடைய கடு சொற்களையும், ராட்சதத் தன்மையையும் பொறுத்துக் கொண்டு அவளோடு இருப்பதை விட வேறு எந்த





க்யூவிலே நிற்பவர் :—நாங்களெல்லாம் க்யூவிலே நிற்கிறது தெரியவில்லையா? போய் க்யூவிலே கடைசியிலே நில்லய்யா!

வந்தவர்:— நான் க்யூவிலே போய் நின்றால் நீங்களெல்லோரும் சாமான் வாங்கினாற் போலத்தான். நகருங்க, நான் போய்க் கடையைத் திறக்கணும்!

விதமான கஷ்டத்தையும் அனுபவிக்கலாமே' என்ற எண்ணமும் கூடவே எழுந்தது.

வயிற்றில் ஏற்பட்ட உபாதை சிறிது தணிந்தது போலிருந்தது. மறுபடியும் மெதுவாக நடக்கலானாள். ஆனால் ஒவ்வொரு அடி எடுத்து வைக்கும் போதும் அவளுக்குக் கஷ்டமாகத் தானிருந்தது. உடல் முழுதும் வியர்த்தது. உடலிலுள்ள ரத்தம் முழுவதும் முகத்தில் பரவி விட்டது போல் முகமும் கண்களும் வெப்படைந்தன. அடிக்கடி உடம்பிலிருந்து அவளை யறியாமல் நழுவும் புடவைத் தலைப்பை எடுத்து போர்த்திக் கொள்வதிலும், நெடு நாட்களாக எண்ணெயைக் கண்டிராத அவளுடைய தலைமயிர் பிரிந்து பிரிமாகக் காற்றில் பறந்து அவள் நெற்றியில் விழுந்ததை அடிக்கடி ஒதுக்கிக் கொள்வதிலும் அவளுக்கு மிகுந்த ஆயாசம் ஏற்பட்டது. கண்ணுக்கெட்டிய தூரம் வரையில் முன்னால் சென்ற கூட்டத்தினரின் அடையாளம் ஏதேனும் தெரிகிறதா என்று பார்த்தாள். ஒன்றும் தெரியவில்லை. ஆனால் நெடுந் தூரத்தில் ஏதோ புழுதிப் படலம் கிளம்புவதுபோல் தெரிந்தது. அது அவளுக்குச் சிறிது மன ஆறுதலை அளித்தது. அவள் நம்பிக்கையை இழக்காமல் தள்ளாடியபடியே நடக்கலானாள். எப்படியோ அவள் ஒரு மைல் நடந்திருப்பாள். ஆயாசமும் களைப்பும் அடைந்த அவள் அடிக்கடி நின்று நின்று தன் உடலுக்கு நடப்பதற்கு வேண்டிய வலிமையை ஏற்படுத்திக் கொள்ளவேண்டியிருந்தது. அவளுடைய உடல் சிரமம் சிறிது நின்றதினால் தீர்ந்து விட்டதுபோல் தோன்றும். ஆனால் நடக்க எத்தனித்தால் முன்னிலும் அதிகமான உபாதையைக் கொடுக்கும். தேகத்தில் ஏற்படும் வேதனையால் திடீரென்று அவள் உடம்பு முழுவதும் சிலிர்க்கும். தேகத்தில் நரம்புகளெல்லாம் தளர்ந்து, எலும்பு மூட்டுக்களெல்லாம் விட்டு விட்டதுபோலிருக்கும். பூரண கர்ப்பிணியாகிய அவளுக்கு எந்த நிமிஷம் என்ன நேருமோ என்ற திகில் ஒருபுறம் இருந்தாலும் துணிவும் ஒருபுறம் இருந்தது.

தூரத்தில் தெரிந்த புழுதிப் படலத்திற்கிடையே கூட்டமாக அவர்கள் செல்வதுபோல் அவள் கண்களுக்குப் பட்டது. இவ்வளவு நேரமும் இல்லாத மன ஆறுதலும் நம்பிக்கையும் அவளுக்கு ஏற்பட்டன. இன்னும் நூறு கஜ தூரம்தான் இருக்கும். சற்று வேகமாக நடந்தால் அவர்களைப் பிடித்து விடலாம் என்ற எண்ணத்தில் வேகமாக நடக்க முயற்சித்தாள். அவள் உள்ளத்தில் துணிச்சல் இருந்தது. உடலில் வலுவில்லை. என்ன செய்வாள்! திடீரென்று அவளுடைய கண்கள் இருண்டன. கால்கள் தள்ளாடின; உடல் முழுதும் அனலாகக் கொதித்தது. இனிமேல் ஒரு அடிகூட எடுத்து வைக்க முடியாது என்ற தீர்மானத்திற்கு அவள் வந்து விட்டாள். கால்கள் தள்ளாடியபடியே அங்கொரு மர நிழலில் அமர்ந்தாள். அப்பொழுதுதான் அவளுக்குத் தன் கணவன் மல்லய்யாவின் நினைவு வந்தது. 'என்னை இப்படி நீ ஏன் தவிக்க விட்டு விட்டுச் சாக வேண்டும்!' என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள். ஆனால் மறு நிமிஷம் தன் கணவன்மீது பழி சொல்லுவது தவறு என்று அவள் மனத்தில் பட்டது. 'நான் ஏன் குறைவில்லாமல் வாழ்ந்த ஒரு வீட்டை விட்டு ஒரு நாடோடியை நம்பிப் பின் தொடர்ந்து வரவேண்டும்!' என்று சொல்லித் தனக்குத்தானே நொந்து கொண்டாள். தன்னைத்தானே நொந்துகொண்டாலும், பிறரை நொந்துகொண்டாலும் இந்தச் சமயத்தில் அவளுக்கு இரக்கப்பட்டு உதவி செய்வதற்குக் கடவுளைத் தவிர வேறு துணை யார்? அவள் மனத்தில் அப்பொழுதும் ஒரு நிம்மதியும் சந்தோஷமும் நிறைந்திருந்தது. காரணம் அந்தச் சமயத்தில் போத்தியம்மாவின் குடிசையிலிருந்து கொண்டு அவளுடைய உதவியை வள்ளி எதிர்பார்க்கவில்லையல்லவா! அதுவே அவள் மனத்திற்குச் சிறிது ஆறுதலை அளித்தது. ஆனால் அத்துடன் கூடவே அந்தச் சமயத்தில் பக்கத்தில் ஒருவரும் உதவி செய்ய இல்லாமலிருந்ததும் ஒரு புறத்தில் அவளுக்குக் குறையாகத்தான் இருந்தது. அவள் உடம்பில் ஏற்பட்ட வேதனையிலிருந்து அவள் எதிர்பார்த்த நேரம் நெருங்கி விட்டதை உணர்ந்தாள். அந்த ரஸ்தாவிலேயே அந்தத் தனிமையான இடத்திலேயே இறந்தாலும் இறந்துவிடலாம் என்ற திகிலும் அவளுக்கு ஏற்பட்டது. அவளுக்கு ஏற்பட்ட வலியிலும் அதிர்ச்சியிலும் வாய் திறந்து கூட அவளால் கதற முடியவில்லை.

அவள் அந்த மரத்தடியில் உட்கார்ந்தபடியே சுற்றிலும் பார்த்தாள். மங்கலடைந்த அவளுடைய கண்களுக்குச் சிறிது தூரத்தில் ஏதோ சில கூரை வீடுகள் இருப்பது போல் பட்டது. மெதுவாக உடம்பில் பலத்தையும் நெஞ்சில் துணிவையும் ஏற்படுத்திக்கொண்டு அந்த வீடுகளை நோக்கிச் செல்ல முயற்சித்தாள்.

அவள் மெதுவாக எழுந்தாள். அவள் கண்களுக்குத் தெளிவாகத் தெரிந்த அந்த வீடுகள் இப்பொழுது நிழல்போல் பட்டன. சமீபத்திலிருப்பது போல் பட்ட அந்த இடம் வெகு தூரத்திற்கு நகர்ந்து விட்டது போல் தோன்றியது. அவள் ஒரு அடி கூட எடுத்து வைக்கவில்லை. திடீரென்று அவள் உடல் முழுவதும் ஈட்டி பாய்ச்சுவது போன்ற வலி ஏற்பட்டது. மறு நிமிஷம் அவள் தன் உணர்வற்று அப்படியே கீழே சாய்ந்தாள். அந்த சமயத்தில் அவளைத் தாங்கிக் கொண்ட பூமி தேவியின் கரங்கள் கட்டாயம் மலர்க் கரங்களாகத்தானிருக்கவேண்டும்.

குடிசைக்குள் சென்ற போத்தியம்மா சிறிது நேரம் கழித்து வெளியே வந்து பார்த்தாள். குடிசை வாசலில் நின்று கொண்டிருந்த வள்ளியைக் காணவில்லை. வள்ளி தன் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து மாட்டிற்குப் புல் சேகரிப்பதற்காகப் போயிருப்பாள் என்று நினைத்தாள். ஆனால் அவள் மனத்துக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. சுற்றிலும் தன் பழுதடைந்த கண்களுக்கு எட்டிய வரையில் பார்த்தாள். பூரண கர்ப்பிணியாகிய வள்ளி மாட்டுக்குப் புல் எடுப்பதற்காக நெடுந் தூரம் சென்றிருப்பாள் என்று போத்தி நினைக்கவில்லை. 'வள்ளி, வள்ளி' என்று உரத்த குரலில் இரண்டு தடவை கூப்பிட்டாள். எவ்விதமான பதிலும் காணோம். உண்மையாகவே அவள், தான் சொல்லியபடி காலையில் சென்ற கூட்டத்தாரைப் பின் பற்றிச் சென்றிருப்பாள் என்று நிர்மாணித்தாள். அதற்கு மேல் அவளால் அங்கு தாமதித்து நிற்க முடியவில்லை. கையில் ஊன்று கோலை எடுத்துக் கொண்டு கிளம்பினாள்.

வள்ளி அவளை அலட்சியம் செய்து விட்டுப் போனது அவளது கோபத்தை இன்னும் அதிகமாக்கியது. வேகமாகச் சென்றால் எப்படியும் வள்ளியைப் பிடித்து விடலாம் என்று அவள் எண்ணினாள். ஏனெனில் கர்ப்பிணியாகிய வள்ளி அப்பொழுது இருந்த நிலையில் முன்னால் சென்ற மனிதர்களைப் பிடித்திருக்க மாட்டாள் என்று அவளுக்குத் தோன்றியது.

போத்தியம்மாவுக்கு வயதாகி விட்டாலும் வேகமாக நடப்பதற்கு வேண்டிய உடல் வலிமை சிறிது இருந்தது. அவளுக்குச் சிறிது கண் பார்வை தெரியா விட்டாலும் எவ்வளவோ தடவை நடந்து பழக்கப்பட்ட அந்த ரஸ்தாவில் நடப்பது அவளுக்கு அவ்வளவு கஷ்டமாகப் படவில்லை. அவள் ஒற்றையடிப் பாதையைத் தாண்டி பெரிய ரஸ்தாவிற்கு வந்தாள். அவளுடைய ஆவேசம் நிறைந்த கண்கள் ரத்தம் சொட்டுவது போல் சிவந்திருந்தன. கீழ் உதட்டை உள்ளே மடக்கிக் கடித்துக் கொண்டே உறுமியபடி நடந்தாள். சுருக்கம் விழுந்திருந்த அவளுடைய குறுகிய நெற்றியில் பஞ்சுத் திரளை போல் நரைத்த வெண் மயிர் காற்றில் பறந்து தொங்கியது. கைத்தடியோடும் கூனிய முதுகோடும் அவள் அந்த ரஸ்தாவில் அதிவேகமாக நடந்தாள். அவள் ஒரு மைல் தூரம் நடந்திருப்பாள். திடீரென்று எங்கிருந்தோ ஒரு குழந்தை அழும் சப்தம் கேட்டது. திடுக்கிட்டு நின்று நான்கு புறமும் தன் சூன்ய திருஷ்டியைச் செலுத்தினாள். சமீபத்தில் எதுவும் இருப்பதாக அவளுக்குத் தெரியவில்லை. ஆர்வத்தோடும் ஆவேசத்துடனும் இருபுறமும் பார்த்த வண்ணம் இன்னும் சிறிது தூரம் நடந்தாள். அவளுடைய பார்வை ஒரு மரத்தடியில் சென்ற போது அப்படியே திகைப்படைந்து நின்று விட்டாள். அந்தப் பாதைக்குச் சமீபத்தில் ஒரு மரத்தடியில் வள்ளி தன் நினைவற்ற நிலையில் கிடந்தாள். அவளுக்குப் பக்கத்தில் ஒரு குழந்தை கிடந்து கதறிக் கொண்டிருந்தது. போத்தி குனிந்து வள்ளியின் முகத்தையும் குழந்தையின் முகத்தையும் பார்த்தாள். சில நிமிஷங்களுக்கு முன்னால் தான் அவளுக்குக் குழந்தை பிறந்திருக்க வேண்டும் என்று தெரிந்தது. அப்பொழுதும் அவள் கண்களில் இரக்கமோ பச்சாத்தாபமோ ஏற்படவில்லை. "சாகசக்காரி! என்ன துணிச்சலிருந்தால் இவள் என்னை அலட்சியம் செய்து விட்டு இந்த மரத்தடியில் வந்து பிரசவிப்பாள்!" என்று உதட்டைக் கடித்துக் கொண்டே தனக்குள் சொல்லிக் கொண்டாள். வள்ளி தன் நினைவிழந்து கிடக்கிறாள் என்பதை அவள் எளிதில் உணர்ந்து கொண்டாள். மெதுவாகக் கீழே கிடந்து அலறிக் கொண்டிருந்த குழந்தையைக் கையிலெடுத்துக் கொண்டாள்.

தாய் உணர்ச்சி என்பது இப்படித்தானிருக்கும் என்று சற்றுக்கூட அறியாத அந்தக் கிழவியின் இரும்புக் கரங்களில் அந்தக் குழந்தை துடித்த வண்ணம் கதறிக் கொண்டிருந்தது. தன் நினைவற்றுக் கிடக்கும் வள்ளியிடம் அப்பொழுது அவளுக்குப் பரிவோ பச்சாத்தாபமோ ஏற்படவில்லை. அவளுக்கு வள்ளியிடம் ஏற்பட்டிருந்த பகைமை உணர்ச்சியும் வெறுப்புணர்ச்சியும் துளிக்கூடக் குறையவில்லை. வள்ளியிடம் எவ்வளவு குரோத மனப்பான்மை வைத்திருந்தாளோ, அவ்வளவு குரோத மனப்பான்மையும் அப்பொழுது தான் உலகத்தில் ஒரு ஜன்மமெனத் தலை காட்டிய அந்தக் குழந்தையிடமும் அவளுக்கு ஏற்பட்டது. பாவம். பிறந்த அந்தக் குழந்தையும் ஒரு பெண்ணாகப் பிறக்க வேண்டுமா! (தொடரும்)

## பாரதி காட்டிய பாதை

"எது வரினு மிடர்ப்பட மாட்டோம்;
அண்டஞ் சிதறினு லஞ்ச மாட்டோம்;
கடல் பொங்கி யெழுந்தாற் கலங்க மாட்டோம்;
யார்க்கு மஞ்சோம், எதற்கு மஞ்சோம்"

ஆபத்தைக் கண்டஞ்சுவது கூடாது. துன்பத்தைக் கண்டு சோர்வடைதலும் கூடாது. மனச் சோர்வு மனித இனத்தின் பரமவைரி. பயம் மனித வாழ்வைப் பாழ்படுத்திவிடுகின்றது. அதன் காரணமாகத்தான் "எதற்கு மினி யஞ்சாதீர் புவியிலுள்ளீர்" என்கிறார் பாரதியார். பயம் மனிதனின் அறிவை, ஆற்றலை, ஆசையைஅடக்கி யொடுக்கி விடுகின்றது. உணர்ச்சியை, ஊக்கத்தை, நம்பிக்கையை நாசமாக்கி விடுகிறது. மனிதனின் ஒழுக்கத்தையும் கெடுத்து விடுகிறது. உயர்வைக் குலைத்து விடுகின்றது. பயம் பதுங்கிக் கிடக்குமிடத்தில் இன்பமும் எழிலும் தலை காட்டாது. இதை யறிந்துதான் "எதற்கெடுத்தாலும் அஞ்சும் இயல்புடைய கோழை யொருவன் தன்னைப் பல சாஸ்திரங்கள் கற்றவனென்றும், அறிவாளி யென்றும் சொல்லுவானானால் அவனை நம்பாதே. அவன் முகத்தை நோக்கிக் காறியுமிழ்ந்து விட்டு, அவனிடம், "அப்பா, நீ ஏட்டைத் துளைக்கும் ராமபாணப் பூச்சியைப்போல், பல நூல்களைத் துளைத்துப் பார்த்து ஒரு வேளை வாளுளை விளுனாக்கி யிருக்கக் கூடும். ஆனால் அச்ச மிருக்கும் வரை நீ அறிவாளியாக மாட்டாய்......" என்று சற்றுக் காரசாரமாகவே கூறுகின்றார் பாரதியார்!

எத்தகைய பேராபத்துக்களையும் எதிர்த்துச் சமாளிப்போம் என்ற அசையாத நம்பிக்கை தான் வெற்றிக்கு வழி வகுத்துக்கொடுக்கிறது. ஆகவேதான் புதிய ஆத்திச்சூடியில், 'அச்சந் தவிர்' என்று உபதேசித்திருக்கிறார் நம் பாரதியார்.

ரத்னசபாபதி புரம்

— என். சதாசிவம்




"இரண்டு வருடங்களாக எனது முகத்தில் பருக்களும், தடிப்புகளும் நிறைந்து இருந்தன. கைக்குக் கிடைத்த எல்லாவிதமான தைலங்களையும், க்ரீம்களும், களிம்புகளும் உபயோகித்தும் யாதொரு பலனும் சிறிதும் காணாததனால் பெரிதும் கவலையுற்றேன். கடைசியில் அதிர்ஷ்டவசமாக "க்ருஷன்" உபயோகிக்கத் தீர்மானித்தேன். ஆச்சரியம்! ஆறு வாரங்களில் எனது முகம் யாதொரு களங்கமுமின்றி ஆனதோடு இது வரை ஒருவிதமான பருவோ, புள்ளிகளோ வந்ததில்லை. தினந்தோறும் "க்ருஷன்" உட்கொள்ளும் நான் அது இல்லாமல் ஒரு நாளும் இருக்க மாட்டேன்." —Mrs. J.A.

முகத்திலுள்ள பருக்களையோ அவலட்சணமான புள்ளிகளையோ மறைக்க முயலாதீர்கள். இரத்த அசுத்தியே இவற்றிற்குக் காரணமாதலால் உட்புற சிகிச்சையே இவற்றின் மூல காரணத்தைத் தாக்கும். "க்ருஷன்" இரத்தத்திலுள்ள அசுத்தங்களை வெளியேற்றட்டும்; உடனே சருமத்தின்மேலுள்ள சகலவித களங்கங்களும் அகன்றுவிடும். தினந்தோறும் உட்கொள்ளும் ஒரு சிறு அளவு "க்ருஷன்" உங்களது இரத்தத்தைச் சுத்தமாய் வைத்திருப்பதோடு சருமத்தை ஆரோக்கியமாயும், தெளிவாயும் வைத்திருக்கிறது.

**"க்ருஷன்"** உங்கள் ஆரோக்யத்திற்கும் ஆனந்தத்திற்கும் உற்ற உதவி

KSM - 5




"அப்பா, உங்கள் கையாலே வீணையின் இனிய நாதத்தை எழுப்பக் கூடாதா? நாதமிழந்து நிற்கும் இந்த இல்லத்திற்குப் புத்துயிரளிக்கக் கூடாதா?" என்றாள் பத்மா வீணையைச் சுமக்க முடியாமல் சுமந்து வந்து. ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்த வரதராஜுலு மூக்குக் கண்ணாடியைக் கழற்றிக்கொண்டே பெருமூச்சு விட்டார். அவரது கை விரல்கள் நடுங்கின. அதை ஆவலுடன் கைநீட்டி வாங்கிக் கொள்ளுவதற்குப் பதிலாக அவர் கைகள் குறுகிப் பின்னிப் பின்னுக்கு இழுத்துக் கொண்டன.

வீணை வரதராஜுலு நாயுடு என்றால் இருபத்திரண்டு வருடங்களுக்கு முன்பு பிரசித்தம். இதே ஊரில் அவர் காலக்ஷேபம் செய்து வந்தார். அவருடைய விரல்கள் வீணைத் தந்திகளின் மீது லாகவமாக நர்த்தனமாடி எழுப்பும் இனிய நாதம் கேட்போரைப் பரவசப் படுத்தும். ஆனால், அதிர்ஷ்டம் அவருக்குத் துணை செய்யவில்லை. வீணையை ஜீவனாகக் கருதிய அவர், குடும்பத்தைப் பற்றியே கவலை கொள்ளவில்லை. அதிகாலையில் சிஷ்யர்களுக்கு வீணையைக் கற்றுக் கொடுக்க அமர்ந்தாரானால், நேரம் போவதே அவருக்குத் தெரியாது. ஆகவே அநேகமாகப் பகல் சாப்பாட்டுக்கே வழி இராது.

அவர் மனைவி பங்காரு அம்மாளுக்குக் கோபம் கோபமாக வரும். வீணையின் நாதம் அவள் செவிகளில் வீழ்ந்து ஆத்திரத்தை மூட்டும். சமையலறையின் நிலைப்படியருகே யமர்ந்து, தாழ்வாரத்தே தன் கணவர் வீணையில் லயித்து இருப்பதைப் பார்க்கும்போது அவளுக்கு ஆத்திரம் பொங்கும். சிஷ்யர்கள் சென்ற பின் வரதராஜுலு குளித்துவிட்டு வருவார். பின் போராட்டம்தான்.

தன் ஒரே பெண்ணான பங்காருவை வரதராஜுலுவுக்குக் கொடுக்கும்போது தன்பெண் இப்படிக் கஷ்டப்படுவாள் என்று கேசவலு நாயுடு எதிர்பார்க்கவில்லை. தாசில்தாராகப் பெரும் அந்தஸ்துடன் இருக்கும் அவர் தன் மகள் இப்படிக் கஷ்டப்படுவதை விரும்பவில்லை. ஆயினும் என்ன செய்வார்?

* * *

அன்று குழந்தை பத்மாவுக்குக் கடும் ஜுரம். பங்காரு எங்கிருந்தோ எட்டணா கடன் வாங்கி வந்தாள். குழந்தைக்குப் பழம் வாங்கிவர வென்று கடைத் தெருவுக்குப் போன வரதராஜுலு கடையில் புதிய வீணைத் தந்தி வந்திருப்பதைக் கண்டார். இரண்டு நாட்களாகத் தந்தி அறுந்துபோய் மீட்ட வழியில்லாது தவித்துக்கொண்டிருந்த அவர் உடனே அதை வாங்கிவிட்டார். களிப்பு மிக வீடு வந்த வரதராஜுலு வீணையை எடுத்து வைத்துத் தந்தியைக் கட்டுவதிலே ஈடுபட்டார். பங்காருவுக்குக் கோபம் கோபமாக வந்தது. ஆவேசம் வந்தவள் போல் கூவினாள். வரதராஜுலுவைச் சபித்தாள்; வீணையைச் சபித்தாள்; வீணை கற்க வரும் வரதராஜுலுவின் சிஷ்யர்களையும் சபித்தாள்.

வரதராஜுலு மௌனமாயிருந்தார். 'ட்ரிங்...ட்ரிங்' என்று சரி பார்ப்பதற்காக அவர் மீட்டும் வீணை யொலி பங்காருவின் ஆத்திரத்தை இன்னும் அதிகப்படுத்தியது.

"வீடு, குழந்தை என்பது உங்களுக்கு மறந்து போய் விட்டதா?"—பங்காரு கணவனெதிரே வந்து நின்றாள். வரதராஜுலு மௌனமாகத் தலை நிமிர்ந்தார்.

"ஏன் இப்படி ஆத்திரப்படுகிறாய்? குழந்தைக்குப் பழம் இல்லாததும், வீணைக்குத் தந்தியில்லாததும் எனக்குச் சமமாகவே பட்டது, பங்காரு. இதுவும் முக்கியம் தானே?" என்றார் மெதுவாக.

அதைக் கேட்டதுதான் தாமதம்; பங்காருவின் கட்டவிழ்ந்த உள்ளம் வீணையைத் தன் பரம சத்துருவாகக் கருதியது.

டங், டங்! அடுத்த நிமிஷம் வீணைத் தந்திகள் தாறுமாறாக அறுந்து தொங்கின.

வரதராஜுலு இதை எதிர்பார்க்கவில்லை. மனைவி ஆரம்பத்திலிருந்தே வீணையை வெறுத்து வந்தாளென்பது அவரறிந்த விஷயமே. ஆயினும் இன்று உச்ச நிலையை

அடைந்த இந்தக் கோர நாடகம் அவரது ஜீவனையே குலுக்குவது போலிருந்தது.

நாயுடு மெள்ள எழுந்து, "பங்காரு!" என்று கம்பீரமான குரலில் அழைத்தார்.

ஆத்திரத்தில் இன்னது செய்கிறோமென்று தெரியாமல் செய்து விட்ட பங்காருவின் துடிப்பு அப்பொழுதும் தணியவில்லை.

"என்னைக் கூப்பிடவேண்டாம். இந்த வீட்டின் அமைதியைக் குலைக்கும் அந்த வீணை ஒழிய வேண்டும். அல்லது நான் போக வேண்டும்" — பங்காருவின் ஆத்திர உரை தணிவதற்குள் வரதராஜுலு உணர்ச்சியுடன் பேசினார்:

"வேண்டாம். நீ ஏன் போகவேண்டும்? உனக்கு வேண்டுவது பணம். அந்தப் பணத்தால் சிருஷ்டிக்கப்படும் குடும்ப அமைதி. அவை இரண்டும் ஏற்படும் வரை இந்த வீணையை மீட்டும் நான் இதைத் தொட்டு நாதம் எழுப்பேன். வீணையின்மீது ஆணையாக..."—அவர் வாக்கியத்தை முடிக்கக் கூடவில்லை. அதற்குள்ளாக ஆணையை நிறைவேற்ற வேண்டி அவர் கால்கள் நடக்கலாயின.

* * *

**ப**ங்காருவுக்கு ஒரு விதத்தில் சந்தோஷமே. கணவர் சொன்ன சொல் தவற மாட்டார். ஆணை வேறு இட்டிருக்கிறார். குடும்பம் அமைதியாக நடக்கக் கட்டாயம் பணம் தேடிவருவார் என்று எண்ணினாள்.

ஆனால் வரதராஜுலு வரவேயில்லை. வாரம் ஓடியது; வரவில்லை. மாதங்கள் கடந்தன; வரவில்லை. ஆணையிட்டுச் சென்று ஓராண்டும் பூர்த்தியாகியது; வரவே யில்லை. தைரியமாயிருந்த பங்காருவின் உள்ளத்தில் கலக்கம் தோன்றியது. 'அப்பா, அப்பா' என்று ஏங்கும் குழந்தை பத்மாவின் முகம் அவளுள்ளத்தில் கலக்கத்தை இன்னும் வளர்த்தது. பணம் அமைதி எதுவும் அவளுக்குப் பெரியதாகத் தோன்றவில்லை. தனக்காகக் கணவர் வராவிட்டாலும் குழந்தையின் நலத்துக்காகவாவது வரட்டும் என்று விரும்பினாள். வீணை அவள் எதிரேவந்து நின்றது. வீணையைப் பழித்த அச் சொற்கள் வந்து நின்றன. கணவரின் ஆணை வந்து நின்றது. எல்லாமாகச் சேர்ந்து அவளைச் சுற்றி அவளுடைய உள்ளத்தை வண்டாகத் துளைக்க ஆரம்பித்தன. அந்த வீட்டிலே இருக்க அவளுக்குப் பிடிக்கவில்லை. ஆகவே, கதவைப் பூட்டிக் கொண்டு தந்தையின் வீடு நோக்கிக் குழந்தையுடன் கிளம்பினாள்.

* * *

**வ**ரதரா‌ஜுலு நாயுடு சென்ற இடமே தெரியவில்லை. அவரை இங்கே பார்த்தேன், அங்கே பார்த்தேன் என்று சிலர் சொல்லுவார்களே யொழிய அவரது சரியான இருப்பிடம் யாருக்குமே தெரியவில்லை. ஊரை விட்டுக் கிளம்பிய வரதரா‌ஜுலு ஒரு வாரம் வரை சென்னையில் சுற்றிக் கொண்டிருந்தார். பிறகு மலேயா போகும் ஒரு குடும்பத்துக்கு அறிமுகமானார். அந்தக் குடும்பத்து இரண்டு குழந்தைகளுக்குப் பாட்டும், பாடமும் சொல்லித் தரும் வேலை அவருக்குக் கிடைத்தது. தனக்கு வீணையும் தெரியுமென்று சொல்லத் துடித்தது அவருள்ளம். ஆனால் ஆணை முன் வந்து நின்றது. அதனால் தெரிந்த கலைத் திறனை மறைத்து வைத்துக் கொண்டு பணியாற்றி வந்தார்.



அந்தக் குடும்பத்தோடு குடும்பமாகப் பழகிய வரதராஜுலுவினால் மனைவியையும் மகளையும் எவ்வளவோ முயன்றும் மறக்க முடியவில்லை. ஊருக்குக் கிளம்பி வந்துவிடலாமா என்று எண்ணுவார். கிளம்பி வந்தால்?.......... பழையபடி வீணை வரதராஜுலுவாக அல்லவா ஆகிவிட

வேண்டியிருக்கும்? அது கிடக்கட்டும். பணத்தைக் கொண்டு வந்து குடும்ப அமைதியைச் சிருஷ்டிக்கிறோமென்றோமே, அந்த வார்த்தை என்ன ஆவது என்ற எண்ணம் தோன்றி அவரை மௌனத்தி லாழ்த்திவிடும்.

ஜப்பானியர்களின் படையெடுப்புப் பீதி அப்பொழுது மலேயாவையும் பீடித்திருந்தது. வரதராஜுலுவை ஆதரித்த குடும்பத்தில் எல்லோரும் தாய் நாடு கிளம்பக் கப்பலேறிவிட்டனர். வரதராஜுலுவும் கிளம்பி வந்தார். ஊர் வந்ததும் குடும்பத்துப் பெரியவர் நோய் வாய்ப்பட்டார். அந்த நோயே அவருக்கு எமனாகவும் முடிந்தது.

வரதராஜுலுவுக்குத்தான் எல்லோரையும் விட அதிகத் துக்கம். நாம் உழைத்ததற்குக் கூலியாக உண்டோம்; கவலையின்றி இருந்தோம். இப்படியே இருந்து மற்ற காலத்தையும் தள்ளிவிடுவதா என்ற சிந்தனையி லாழ்ந்திருந்த அவரை வக்கீல் தட்டி எழுப்பினார். இறந்துபோன பெரியவர் தம் சொத்தைப் பல தர்ம காரியங்களுக்கும் உறவினர்களுக்கும் பங்கிட்டிருந்ததைப் போல் வரதராஜுலுவுக்கும் ஒரு பகுதி எழுதி வைத்திருந்தார். வியப்பும் திகைப்பும் மேலிட்ட வரதராஜுலுவால் பதில் ஏதும் பேச முடியவில்லை. பேசாமல் பத்திரத்தை வாங்கிக் கொண்டு கண்ணீர் விட்டார்.



"என்னப்பா, நீ வந்து, டில்லியில் பிறந்தாயாம். அம்மா திருச்சியில் பிறந்தாளாம். தங்கை லால்குடியிலே பிறந்தாளாம். நான் இலங்கையில் பிறந்தேனும். இப்படி எல்லோரும் ஒவ்வொரு ஊரில் பிறந்துவிட்டு, எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்திருப்பதை நினைத்தால் ஆச்சர்யமாக இல்லையா?

* * *

**ப**ல வருடங்களுக்குப் பிறகு சொந்த ஊரை நோக்கி வந்த வரதராஜுலு தன் மனைவி மக்கள் அங்கு இல்லாததை அறிந்து மாமனாரின் ஊரை அடைந்தார்.

மாமனார் கேசவலு நாயுடு ரிடையர் ஆகி ஐந்தாண்டுகள் ஆகிவிட்டன. தம் ஒரே மகள் இறந்து விட்ட துயரம், முதுமை எல்லாமாகச் சேர்ந்து அவரைப் படுத்த படுக்கையாக்கி விட்டன. பூங்கொடி போல் வளர்ந்து தாயைப் போன்ற சாயலுடன் கூடிய மகள், பத்மாவைப் பார்த்த மாத்திரத்திலேயே வரதராஜுலுவின் தந்தை யுள்ளம் புரிந்து கொண்டு விட்டது. அவர் ஊரைவிட்டுப் போகும்பொழுது பத்மாவுக்கு இரண்டு வயது. இப்பொழுது எத்தனை மாறுதல்?......ஆனால் யாருக்காக இத்தனை நாள் கண்காணாத தேசம் போய் உழைத்து நல்ல பெயர் வாங்கிப் பணம் சேகரித்து நாடு திரும்பினேனோ, யாருக்காக ஜீவகலையின்மீது ஆணையிட்டுச் சென்றேனோ, அவள் இப்பொழுது இல்லையே! பணம் இருந்து என்ன பயன்? ஐயோ, இது என்ன வாழ்வு?-இதை நினைத்தபொழுது புழுவாகத் துடித்தார் வரதராஜுலு.

கூடத்தில் மாட்டப்பட்டிருந்த லக்ஷ்மி படத்தினடியிலே தம் வீணை வைக்கப்பட்டிருப்பதைக் கண்டார். இவர், வீணையைப் புரிந்து கொண்டதுபோல் இவரை இன்னார் என்று புரிந்து கொள்ளக் கேசவலு நாயுடுவுக்கும் அதிக நேரம் பிடிக்கவில்லை.

கேசவலு நாயுடுவின் மனம் மாறிப் போயிருந்தது. மகளின் பொல்லாச் சொல்லால் தான் தம் மருமகன் எங்கோ போய் விட்டான் என்று அறிந்து துக்கித்திருக்கிறார். இப்பொழுது இத்தனை ஆண்டுகளுக்குப் பின் வரதராஜுலு திரும்பி வந்ததறிய அவருக்கு ஆனந்தம் தாங்கவில்லை. படுக்கையினின்று எழுந்து உட்கார்ந்து கூறினார்:

"வரதராஜுலு, நானும் என் மகளும் பணப் பிசாசாகத் தானிருந்தோம். பணம் வரும், போகும் என்பதை நான் அப்போது அறியவில்லை; என் மகளும் அறியவில்லை. அற்புதக் கலைத் திறமையுடைய உன்னை விரட்டினேன். அந்தக் கலை ஆர்வம் உன் மகளிடமும் இருக்கிறது. ஆனால், நான் இன்னும் எத்தனை நாள் இருந்து இதைக் கண்டு களிக்கப் போகிறேன்? என் மகள் — உன் மனைவி இறக்கும் போது கட்டளை யொன்று இட்டாள். அது நிறைவேறுமோ நிறைவேறாதோ என்று கவலையுடனிருந்தேன். நல்ல வேளை, நீ வந்து விட்டாய்! வரதராஜுலு, வரதராஜுலு......நாராயணி ராகத்திலே 'ராமா நீவே' என்ற பாட்டைப் பாடுவாயே, கேட்டு ரொம்ப நாளாயிற்று. வீணையை எடுத்துப் பாடப்பா" என்று அவர் கூறும்போது அவர் நெஞ்சு தழுதழுத்தது.

வரதராஜுலுவின் கண்களினின்று நீர் தாரை தாரையாகப் பெருகிற்று. பாடலாம்; ஆசையுடன் கேட்கும் மாமாவின் ஆசை தீரப் பாடலாம். ஆனால் ஆணை...... ஆணையை நிறைவேற்ற அவள் இல்லையே! வீணையைத் தொடுவதா? தொடாமல் இருப்பதா?

# வெற்றிக்குப் படிகள்

"அரும்பும் வேர்வை உதிர்த்துப் புவிமேல்
ஆயிரந் தொழில் செய்திடு வீரே
பெரும்புகழ் நுமக்கே இசைக்கின்றேன்
பிரமதேவன் கலை இங்கு நீரே"

பாரதி அரும்பும் வேர்வையுடன் ஆர்வத்தோடு உழைத்துப் புகழைத் தேடிக் கலைகளை படைக்கும் பிரமதேவர்களாக நம்மை ஆக்கி மகிழ்கிறார். பாரதி வாக்கு தீர்க்க தரிசனம் வாய்ந்தது. ஆம்! தமிழுலகம் பிரமதேவர்களைப் படைத்திருக்கிறது; இனியும் படைத்து மகிழத்தான் போகிறது. இதிலும் ஐயமில்லை.

என்ன ஐயா கதை அளக்கிறீர், கஷ்டம் தெரியாமல் என்கிறீர்களா! இது கட்டுக் கதை அல்ல. கனவும் அல்ல. பாரதி கண்ட தீர்க்கதரிசனம். 'கொத்தனுக்கு வீடு இல்லை. கொல்லனிடம் இரும்புக் கட்டில் இல்லை. தச்சனிடம் கள்ளிப் பெட்டி கூடக் கிடையாது. இவர்களா பிரமதேவன் ஆகப்போகிறார்கள்!' என்று தோன்றலாம். வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்களை உண்டாக்கும் கலைஞர்கள் கையில் பொருளின்றித் திண்டாடுவது உண்மைதான். வேலையில் ஆர்வத்தோடு கூடிய ஊக்கமும், அறிவோடு கூடிய முயற்சியும் வேண்டுமே! அவை இல்லாததால்தான் துன்பமே இயற்கை யென்று சோம்பித் திரிகிறார்கள். இன்னல் வந்துற்றிடும் போததற்கு அஞ்சி ஏழையராகி மடிகிறார்கள். இன்பத்தை வேண்டி நின்று இடையறாது ஊக்கத்துடன் உழைப்போமானால் நாம் பிரமதேவனாகவே எல்லாவற்றையும் இவ்வுலகில் படைத்து மகிழ்வோம்.

ஆக்கம், அதாவது மனிதனால் ஆக்கப்படக்கூடிய எல்லாப் பொருள்களும், செல்வங்களும் இடைவிடாத முயற்சியுடைய மனிதனின் வீடு தேடி விசாரித்துக் கொண்டு தானாகவே வந்து சேரும். "ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா ஊக்கமுடையான் உழை" இது வள்ளுவரின் பொய்யாமொழி. வீடு தேடிப் பொருளெல்லாம் வரும்!

நாம் தோல்விகளைக் கண்டு கலங்கக் கூடாது. வெற்றிக்குச் செல்லும் படிகளே தோல்விகள். தோல்வியில் சிலர் வாழ்வே முடிந்து விட்டதாகச் சுய நம்பிக்கை இழந்து மயங்குகிறார்கள். இது தவறு. எங்கள் வீட்டுத் தோட்டத்திலிருந்த முருங்கை மரம் காற்றில் அடியோடு முறிந்து விட்டது. நானும் அறியாமையால் மிச்ச அடி மரத்தையும் சேர்த்து வெட்டி விட்டுக் காய்ப்பு மரம் போய்விட்டதே என்று வருந்தினேன். வேர் இருப்பது ஞாபகம் இல்லை. இப்பொழுது அதன் வேரிலிருந்து வெடித்த ஐந்து மரங்கள் நிற்கின்றன. நமக்கும் வேர் உண்டு என்ற நம்பிக்கையுடன் எறும்பைப் போல நாம் ஏதாவது சிறிய பெரிய காரியங்களைத் தொடர்ந்து செய்துகொண்டே இருந்தால் பெரும் புகழும், பிரமதேவன் கலையும் நம்மைத்தானாகவே வந்து அடையும்.

ரங்கூன் — கரு. நாச்சியப்பன்

வரதராஜுலுவுக்கு ஒன்றுமே புரியவில்லை. தம் ஜீவனான வீணையைத் தொடாமல் இருப்பதா? அவரால் அது முடிந்த காரியமா? ஆனால், யாருக்காக ஆணை யிட்டாரோ, அந்த அருமை மனைவி இன்று இல்லை. அவள் மனம் சம்மதப்பட்டாலன்றி அவர் வீணையைத் தொடுவதென்பது இயலாத காரியம். அவர் மனம் சிந்தனையிலாழ்ந்தது.

* * *

அப்பொழுதுதான் அவர் மகள் பத்மா வீணையைச் சுமக்க முடியாமல் சுமந்து வந்து தந்தையின் முன் வைத்து வீணையை மீட்டுமாறு வேண்டினாள்.

தந்தையின் மௌனத்தையும் தயக்கத்தையும் கண்ட அவள், "அப்பா! அம்மா சொல்லி விட்டுச் சென்றிருக்கிறாள். அதை அவள் ஆணை என்றும் சொல்லலாம், அப்பா, எனக்கு அப்பொழுது வயது ஐந்து. 'அப்பா எங்கே? அப்பா எங்கே?' என்ற என் தொந்திரவு அம்மாவை இன்னும் துக்கத்திலாழ்த்தி விட்டது. இந்த வீணையைக் கையிலெடுத்தாள். என் முன் வைத்தாள். எங்கேயோ வெளியில் சென்றாள். திரும்பி வரும் போது உங்களிடம் வீணை பயின்ற சிஷ்யரை அழைத்து வந்தாள். 'உங்கள் குருவிடம் கற்றது முழுமையும் அவர் மகளுக்கு நீங்கள் குருவின் நினைவாகச் செய்ய வேண்டும்' என்றாள். அன்று தொட்டு நான் வீணை பயிலத் தொடங்கினேன். அம்மாவின் உற்சாக மூட்டும் வார்த்தைகள் வேறு என்னை ஊக்கின. பத்து வயதிற்குள் நான் மேடையேறிக் கச்சேரி செய்யத் தொடங்கினேன். சிறு வயதிலேயே இத்தனை திறமை இருப்பதை அறிந்து என்னை எல்லோரும் போற்றினர். வருடங்கள் ஓடிக் கொண்டிருந்தன. நான் உலகமறிந்தேன். எனக்கு வீணை கற்றுக் கொடுக்கும்போது என் குரு தம் மகனுக்கும் கூடவே வீணை கற்றுக் கொடுத்து வந்தார். எங்கள் நட்பு காதலாக மலர்ந்தது.

ஆனால் என் அம்மா அந்தச் சமயம் நோய் வாய்ப் பட்டாள். டாக்டர்கள் எந்நோயுமில்லை என்றனர். ஆனால் தாயின் உடம்பு இளைத்து வந்தது. ஒரு நாள் தாய் என்னையும் தாத்தாவையும் அருகே அழைத்தாள். தான் கணவரைப் பணத்துக்காகத் துன்புறுத்தியதையும் அவமரியாதையாக நடத்தியதை

பாரதி காட்டிய பாதை

## தைரிய லக்ஷ்மி

ஒரு குடியானவன் வீட்டில் எட்டு லட்சுமிகளும் கூடி வசித்தார்களாம். அவனுக்குப் போதாத காலம் வந்ததோ என்னவோ, அவர்கள் அவனை விட்டுப் பிரிந்து போவதாக ஒரு நாள் தீர்மானித்தார்கள். இந்த முடிவை அந்தக் குடியானவனிடமும் தெரிவித்தார்கள். "சரி, நீங்கள் போகலாம்" என்று அவர்களிடம் சொல்லிவிட்டு வாயில் பக்கம் ஒரு பெருந்தடியுடன் போய் நின்று கொண்டான். ஒவ்வொரு லட்சுமியாக வந்தனர். ஒவ்வொருவராக 'நீ என்ன லட்சுமி !', 'நீ என்ன லட்சுமி !' என்று கேட்டுக் கேட்டு வெளியே போக வழி விட்டான். ஒருத்தி 'தனலட்சுமி' என்றாள். மற்றொருத்தி 'தானிய லட்சுமி' என்றாள். ஏழு லட்சுமிகள் வெளியேறினர். கடைசியாக வந்தவளை 'நீ என்ன லட்சுமி?' என்று கேட்டான். 'நான் தைரியலட்சுமி' என்றாள். உடனே அவன் என்ன சொன்னான், தெரியுமா ! "நீ மட்டும் வெளியே போனால், உன் காலை முறித்து விடுவேன். திரும்பி உள்ளே போ" என்றான்.

இக் கதையிலிருந்து தெரிவதென்ன ! மனத்தில் உரம் வேண்டும் என்பது தானே ! இதைத்தான் வரப்போகும் பாரதத்திற்கு வரவேற்புக் கூறும் பாரதியாரும் தம் உரம் வாய்ந்த தமிழ் மொழியில் கூறுகிறார் :

ஒளி படைத்த கண்ணினாய்—வா, வா, வா
உறுதி கொண்ட நெஞ்சினாய்—வா, வா, வா.

களி படைத்த மொழியினாய்—வா, வா, வா
கடுமை கொண்ட தோளினாய்—வா, வா, வா.

திம்மலை — தி. வே. நடேசன்

யும் நீங்கள் இட்ட ஆணையையும் கூறி 'அம்மா, குழந்தை ! நீ தந்தையைப் போல் வீணை வாசிக்கிறாய். உன் புகழ் ஓங்குகிறது. உனது மன எண்ணத்தை, அதாவது உன் குருவின் புதல்வன் மீது நீ ஆசை கொண்டிருப்பதை நான் அறிவேன். உன் கலியாணத்தையும் என் கண்ணெதிரேயே செய்து பார்க்க ஆசைதான். ஆனால் என்றைக்காவது உன் தந்தை இங்கு வருவார். நான் அவர் பாதத்தை நனைக்கும்படியான கண்ணீர் விட்டதாகக் கூறு, குழந்தாய்! அவரது கரத்தால் வீணையை மீட்டி இன்ப நாதம் எழுப்புவதை உன் காதால் கேட்ட பிறகுதான் நீ உன் கையாலேயே வீணையைத் தொட வேண்டும். அது வரை உன் காதலையும் கட்டி வைத்திருக்க வேண்டும்' என்றாள். அம்மாவின் உயிர் பிரிந்தது. அம்மா எதற்காகக் கட்டளையிட்டாளோ, எனக்குத் தெரியாது. இன்று வரை அதை நான் கடைப் பிடிக்கிறேன். அப்பா, நீங்கள் வந்து விட்டீர்கள். வீணையை மீட்டுங்கள்" என்று கெஞ்சினாள்.

வரதராஜுலு மௌனமாகக் கண்ணீர் விட்டாரே யொழிய ஒன்றும் பேசவில்லை. "குழந்தாய், காலம் ஆகவில்லை. ஆணையை நான் மீறவில்லை என்னும் திருப்தி என் மனத்தில் ஏற்பட வேண்டும். உன் தாய் தெய்வம். அவள் வாக்கை நாமிருவரும் மீறாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்" என்றார்.

* * *

வரதராஜுலுவுக்கு மனக் குழப்பம் தீர்ந்தபாடில்லை. தம் சிஷ்யனின் மகன் நந்தகோபாலனைத் தம் மகள் விரும்புவதை அறியும்போது அவர் மனம் குதூகலித்தது. ஆனால், தாம் கொண்டு வந்த செல்வத்தை வாழ்நாள் முழுவதும் விரும்பிய மனைவிக்குக் கொடுக்க முடியாமற் போய் விட்டதே என்ற வேதனை அவர் மனத்துள்ளே புகுந்து அவரை மிகவும் வதைத்தது.

ஒரு நாள் மாலை வரதராஜுலு வெளியே உலாவி விட்டுத் திரும்பி வந்தார். படியேறும் போதே வீட்டின் கூடத்தினின்று இனிய நாதம் பிறந்து வந்து கொண்டிருந்தது. சந்தடியின்றி நின்றார் வரதராஜுலு. தம் மகளின் திறமையை எண்ணிக் குதூகலப்பட்டது அவருள்ளம். அவள் தாய், அதாவது அவருடைய மனைவி முன்பு தவறு செய்திருந்தாலும் தன் மகளைத் திறமைசாலியாக ஆக்குவித்ததின் மூலம் பரிகாரம் தேடிக் கொண்டாள் என்று எண்ணும்போது அவருள்ளம் மகிழ்ச்சியுற்றது.

லக்ஷ்மி படத்தின் எதிரே குத்து விளக்கு ஏற்றப்பட்டிருந்தது. நந்தகோபாலன் வீணையை மீட்டிக் கொண்டிருந்தான். பத்மா இனிய குரலில் பாடிக்கொண்டிருந்தாள்.

வரதராஜுலு இதைக் கவனித்தார். 'என் வாழ்க்கையில் நேராத இந்தப் பாக்கியம் மகளுக்காவது கிடைத்ததே ! இரு நாதங்களும் ஒன்று சேர்ந்து லயக் கோப்பை உண்டாக்குகின்றனவே ! அவர்கள் வாழ்க்கையிலும் இந்த நாதம் என்றும் விளங்க என் பணியை நான் உடனே நிறைவேற்றியாக வேண்டும்' என்று எண்ணியவர் சட்டென்று உள்ளே நுழைந்தார்.

தந்தையைக் கண்ட பத்மாவும், நந்தகோபாலனும் எழுந்து நின்றனர். அவர்களைக் கையமர்த்தி விட்டு, படத்தருகே இருந்த வீணையை எடுத்தார் நாயுடு.

பல வருடங்களாகத் தொடாதிருந்த வீணைத் தந்திகளின்மீது அவரது நடுங்கும் விரல்கள் தாண்டவமாடின.

அந்த வீட்டின் கூடம், தாழ்வாரம் எங்கும் அந்த நாதம் பரவிப் புத்துயிரை அளித்தது. படத்தருகே ஏற்றி வைத்திருந்த விளக்கினின்று ஒரு சுடரும், படத்தில் மாட்டப்பட்டிருந்த மாலையிலிருந்து ஒரு மலரும் உதிர்ந்து அந்தச் சுபவேளையைத் தெரிவித்தன.

எங்கோ ஒலிக்கும் கோயில் மணியின் இனிய நாதம் வேறு வீணையின் நாதத்தோடு இழைந்து மங்களகரமாக ஒலித்தது.

# பாவம், பத்மா!

## ஆர். எஸ். ஞானும்பாள்

**ப**த்மாவுக்கு ஒரே சலிப்பாக இருந்தது. அவள் தன் அப்பா சொன்ன வார்த்தைகளை எண்ணி எண்ணிப் பார்த்துக் கொண்டிருந்தாள். காலையில் வந்த கடிதத்தைப் படித்து விட்டு அவளுடைய அப்பா, "பத்மா, உன்னுடைய பிடிவாதத்தை எல்லாம் விட்டு விடு. இவனை விட உயர்ந்த ஒருவன் உனக்கு வரப்போவதில்லை. எம். எஸ்ஸி. பாஸ் செய்திருக்கிறான். டாக்டர் பட்டம் வேறு வாங்கியிருக்கிறான். காசி சர்வ கலாசாலையிலே புரொபஸரா யிருக்கிறான். உனக்குச் சம்மதமானல் காசு பணம் சீர் விவகாரமெல்லாம் முடிந்தாற் போலத்தான்" என்றார்.

"அப்பா! நம் குடும்பமே வாத்தியார் குடும்பமாயிருக்கிறது. மறுபடியும் வாத்தியார் குடும்பத்திலேயே வாழ்க்கைப்பட நான் விரும்பவில்லை. வேறு எந்த வரனைத் தாங்கள் சொன்னாலும்..." என்று இழுத்தாள் பத்மா.

"பத்மாவுக்கு வாத்தியார் என்றால் இளப்பம் போலிருக்கிறது. நீ இப்படி மீன மேஷம் பார்க்கிறதற்கு உனக்கு ஒரு வாத்தியார்தான் கணவனாக வாய்க்கப் போகிறான். இது நிச்சயம்" என்று அடித்துக் கூறினான் பத்மாவின் அண்ணா சுந்தரம்.

"அண்ணா! நீ சொல்லுவது இந்த ஜன்மத்தில் ஒன்றும் நிறைவேறப் போவதில்லை. கல்யாணமே செய்து கொள்ளாமலாவது இருப்பேனே தவிர வாத்தியார் குடும்பத்தில் வாழ்க்கைப்பட மாட்டேன்!" என்றாள் பத்மா தீர்மானமாக.

"பத்மா! அண்ணாவோடு சண்டை பிடிப்பது இருக்கட்டும். நீ நான் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லு. உனக்கு அந்த வரனைக் கல்யாணம் செய்து கொள்ள இஷ்டமா?" என்றார் பத்மாவின் தந்தை. இப்படிச் சொல்லிக்கொண் டிருக்கும்பொழுதே, பத்மாவின் தாயார் வந்து, "சின்னஞ் சிறு பெண்ணிடம் போய்க் கல்யாணம் செய்து கொள்கிறாயா என்று கேட்டால் அவள் என்ன பதில் சொல்வாள்?" என்றாள்.

பிறகு பத்மாவின் பக்கம் திரும்பி, "ஏண்டி! அந்தப் பையனுக்கு என்ன குறைச்சல்? கை நிறையச் சம்பளம் வாங்குகிறான். அந்தஸ்துள்ள குடும்பம். சிமைக்குக் கூடப் போகப் போகிறானும். நீ என்ன டிப்டி கலெக்டர் பெண் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாயோ? ஒரு வாத்தியார் பெண்ணுக்கு இதைவிட உசத்தி இடம் கிடைக்குமா? உன் அக்கா நாங்கள் பார்த்து வைத்த பிள்ளையைத்தான் மணந்து கொண்டாள். ஒரு வார்த்தை எதிர்த்துச் சொல்லவில்லை. உன் அத்திம்பேரும் வாத்தியார்தான். அதற்காக அவர்களுக்கு என்ன குறைச்சல்?" என்று கண்டித்தாள் பத்மாவின் தாயார்.

"அம்மா! நம் குடும்பமே உபாத்தியாயர் குடும்பம்தான். நம் உடலிலே ஆசிரிய ரத்தம்தான் ஓடுகிறது. அதுதான் நல்ல தொழில். எழுத்தறிவித்தவன் இறைவன் அல்லவா?" என்று தன் அம்மாவுக்குப் பின் பாட்டுப் பாடினான் சுந்தரம். பத்மாவுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது.

"அம்மா! என்னைக் குளத்திலோ, குட்டையிலோ தள்ளிவிடுவதே மேல். எனக்குப் பிடிக்காத வரனைக் கல்யாணம் செய்து கொள் என்று தொந்தரவு செய்ய வேண்டாம்!" என்று கூறி விட்டு மேலும் பேச்சுத் தொடராம விருப்பதற்காகப் பத்மா அங்கிருந்து நகர்ந்து விட்டாள்.

"இந்தாருங்கள்! நீங்கள் எல்லாரும் ஒன்று சேர்ந்து பத்மாவைத் துன்புறுத்தவேண்டாம். நான் சாயங்காலம் வந்து சமாதானப் படுத்திப் பார்க்கிறேன்" என்று கூறிவிட்டுப் பத்மாவின் தகப்பனார் கோட்டை மாட்டிக் கொண்டு ஒரு கையில் 'டர்பனும்' இன்னொரு கையில் ஒரு கட்டுக் காம்போஸிஷன் நோட்டுகளுமாகப் பள்ளிக்கூடத்திற்குப் புறப்பட்டார். அவள் அண்ணா சுந்தரம் எம். ஏ. பி. டி. அதே ஊரில் இன்னொரு பள்ளிக்கூடத்துக்குத் தலைமையாசிரியர். கோட்டும் சூட்டும் தரித்துச் சைக்கிளில் ஏறிப் பள்ளிக்கூடத்தை நோக்கிப் பறந்தான். பத்மா நூல் சவுக்கத்தை எடுத்து வைத்துக்கொண்டு உட்கார்ந்தாள். அவள் மனம் நூல் பின்னுவதில் செல்லாமல் சிந்தனைகளைப் பின்னுவதில் ஈடுபட்டது.

சுந்தரம் சொன்னதுபோல் அவர்கள் குடும்பமே உபாத்தியாயர்கள் குடும்பம். சிநேகிதிகள் அவளை, 'வாத்தியார் வீட்டுப் பத்மா' என்றே குறிப்பிடுவார்கள். அவள் தந்தை ஒரு பி. ஏ. எல். டி. அண்ணா ஒரு தலைமையாசிரியர். அவள் சித்தப்பா ஒரு செகண்டரி கிரேட் வாத்தியார். அவள் மாமா ஒரு ட்யூடோரியல் காலேஜ் பிரின்ஸிபால். மாமி அதில் இங்கிலீஷ் லெக்சரர். பத்மாவின்



மகன்:—என்னுடைய 'மார்க்கு லிஸ்டு' விஷயமாக என்னைப் பார்க்கணும் என்று சொன்னியாமே, அதற்குத்தான் வந்திருக்கிறேன்.

தகப்பனார்:—இப்பொழுது கோபம் வரவில்லை. போய்விட்டுக் கோபமாக இருக்கும்போது வா.

அத்தங்காள் புருஷன் ஒரு எலிமெண்டரி ஸ்கூல் வாத்தியார். இன்னும் நாலைந்து தூரத்துப் பந்துக்கள் கூட உபாத்தியாயர்களாகத்தான் இருந்தார்கள். பத்மாவின் அக்கா சாவித்திரியின் கணவர் முதலில் கல்யாணத்தின் போது ராணுவத்தில் இருந்தார். பிறகு அந்த வேலை அவருக்குப் பிடிக்காததால் ஆசிரியராகி விட்டார். பத்மாவின் எட்டு வயதுத் தம்பி ரகு சாக்குக் கட்டியால் கதவுகளில் படம், பட்டம் என்று எழுதி, "ஏய், பசங்களா! படிங்கடா" என்று பிரம்பை வைத்துக்கொண்டு வாத்தியாராக நடிப்பான். அவன் உடலிலுங் கூட ஆசிரிய ரத்தமேதான் ஓடிக் கொண்டிருந்தது!

பத்மா வீட்டில் ஏதாவது விசேஷமென்று உறவினர்கள் வந்து விட்டால் போதும். எல்லாம் கல்வி சம்பந்தமான பேச்சுத்தான் எழும். 'எங்கள் தலைமையாசிரியர் ரொம்ப கர்வி' என்பார் ஒருவர். மற்றவர் 'புது ஜில்லாக் கல்வி அதிகாரி மிகவும் கெடுபிடி ஆசாமி, அவரிடம் வாத்தியார்கள் எல்லாம் என்ன பாடுபட்டார்கள் தெரியுமா?' என்பார். இன்னொருவர் தலைமையாசிரியர் தமக்கு இரண்டு டியூஷன் பிடித்துக் கொடுத்ததைப் பெருமையாகச் சொல்லிக் கொள்வார். இப்படியேதான் ஏதாவது பள்ளிக்கூட சம்பந்தமாகவே சம்பாஷணைகள் எழும்.




"உன்னை விட முடியாது, சார்! மார்த்தாண்டம் பிள்ளையிடம் லெட்டர் வாங்கி வந்தால்தான் உன்னை விடுவேன்."

"அடே! நான்தான் ஐயா, மார்த்தாண்டம் பிள்ளை..."

"நீங்கள் யாரா யிருந்தாலும் அவரிடமிருந்து லெட்டர் கொண்டு வந்தால்தான் உன்னை விடுவேன்"

பத்மாவின் வீட்டில் எங்கு பார்த்தாலும் காப்போஸிஷன் நோட்டுகளும் பள்ளிக்கூடப் புஸ்தகங்களுமே நிறைந்து கிடக்கும்.

'பழகப் பழகப் பாலும் புளிக்கும்' என்று சொல்வார்களே, அதைப்போல் பத்மாவுக்குப் பள்ளிக்கூடப் பேச்சும், வாத்தியார் குறைகளும் கேட்டுக் கேட்டு அலுத்து விட்டது. அவளுக்கு வெறுப்பே ஏற்பட்டு விட்டதென்றால் மிகையில்லை. ஆகவேதான் அவளுக்குத் தனக்கு வாய்க்கப் போகும் கணவன் வேறு உத்தியோகத்தில் இருப்பவனாக அமையக் கூடாதா என்று தோன்றியது. அந்த வெறுப்பாலேயே அவள் பி. ஏ. பாஸ் செய்ததும் வலுவில் கிடைத்த உபாத்தியாயினி வேலையைக் கூட ஏற்க மறுத்து விட்டாள்.

"காசிவரன் சிறந்த இடம் என்பதில் சந்தேகமில்லை. ஆயினும் எத்தனை உயர்ந்த அந்தஸ்தானாலும் வாத்தியார் வாத்தியார்தானே?

மாலையில் அவள் தன் உறுதியைச் சொல்லியும் விட்டாள். செல்லப் பெண்ணாக வளர்த்து நல்ல அறிவாளி என்று பெருமைப் பட்டுக் கொண்டிருந்த தந்தை பத்மாவின் உறுதியைக் கேட்டதும் பிரமாதமாகக் கோபித்துக்கொண்டார்; குதித்தார்; கத்தினார்.

"எல்லாம் நீங்கள் போதித்தது தானே? நீங்கள் இடங் கொடுத்து வந்ததினால் தான் பத்மா தைரியமாக உங்களை எதிர்த்துப் பேசி விட்டாள்! செல்லம் கொடுக்காமலிருந்தால் இந்தக் கதி ஏற்பட்டிருக்குமா?" என்று அவள் அம்மா குத்திக் காட்டினாள்.

பத்மா கொஞ்சம் கூடக் கலங்காமல் இருந்தாள். அவள் உறுதியைக் கண்டு அவள் தகப்பனார் அடங்கி விட்டார். அவளை வற்புறுத்த அவருக்கு இஷ்டமில்லை; தைரியமுமில்லை. நல்ல வரன் தட்டிப் போனதைப் பற்றி அவருக்கு வருத்தம்தான். இருந்தாலும் பெண் என்று பிறந்து விட்டால் வேறிடங்களில் வரன் தேடித்தானே ஆக வேண்டும்?

சீக்கிரமே ஒரு இடம் நிச்சயமாயிற்று. பத்மா யோகசாலிதான். கோபாலன் பி. ஏ. போலீஸில் உயர்ந்த பதவி வகித்துக் கொண்டிருந்தான். பணக்காரப் பெற்றோருக்கு ஒரே பையன். நல்ல அழகன். பத்மாவுக்கும் கோபாலனைப் பிடித்திருந்தது.

கல்யாணம் நடந்தது. பத்மா கணவனுடன் புறப்பட்டாள். ஊர் சேர்ந்த கோபாலனுக்காக மேலிடத்து உத்தரவு காத்துக் கொண்டிருந்தது. "வேலூர் போலீஸ் பள்ளிக்கூடத்திற்குத் தலைவராக நியமித்திருக்கிறோம். இரண்டு நாட்களில் வேலையை ஒப்புக் கொள்ளவும்" என்ற உத்தரவைக் கோபாலன் தன் அருமை மனைவிக்குக் காட்டினான். கீழே விழுந்து விடாமலிருக்கப் பக்கத்திலிருந்த நாற்காலியைப் பிடித்துக் கொண்ட பத்மா புடவைத் தலைப்பால் நெற்றி வியர்வையைத் துடைத்துக் கொண்டே நீண்ட பெருமூச்சு விட்டாள். பத்மா வேறு என்ன செய்வாள், பாவம்!

# ஆரோக்கிய ரகசியம்

**வி. என். குமாரசாமி**

## 31. ஆஸ்துமா தொடர்ச்சி

ஒரே நோய் பல காரணங்களால் வரலாம். அதை நீக்குவதனால் அந்நோய் மறைந்தும் விடலாம். ஆனால் அக்காரணங்களை நீக்கச் சாத்தியமானதுதானா! அல்லது வேறு வழிகளால் தான் நீக்க வேண்டுமா! என்பது அந்நோய்களுக்குக் காரணங்களாயிருக்கும் வஸ்துக்களைப் பொருத்தோ நாம் எடுத்துக் கொள்ளும் நடவடிக்கையைப் பொருத்தோ இருக்கிறது.

ஆஸ்துமாவுக்குக் காரணம் இன்னதுதான் என்று திட்டமாகச் சொல்ல முடியாது. பொதுவாக குளிர்ச்சியானது ஆகாது என்று இருந்தாலும் மற்றும் பல காரணங்களாலும் அவ்வியாதி உண்டாகிறது. ஜலதோஷம் பிடித்தால் ஆஸ்துமா ஆரம்பித்து விடுகிறது. சிறிது சளி கட்டினாலும் ஆஸ்துமா வந்து விடுகிறது. தூசி கலந்த காற்றைச் சுவாசித்தாலும் ஆஸ்துமா வந்து விடும். திடீர் பயம், திடீர் கோபம் உணர்ச்சி வசப்படுதலும் ஆஸ்துமாவிற்குக் காரணங்களாகும். பூனை, நாய், குதிரையைப் போன்ற பிராணிகளின் வீச்சத்தைச் சுவாசித்தாலும் ஆஸ்துமாக்காரர்களுக்கு ஆகாது. அதிக உணவு, கடின உணவு முதலியனவும் ஆஸ்துமாவை வரவழைக்கும் இனிப்புப் பலகாரம் ஆகாது. மனக் கவலையினாலும் ஆஸ்துமா வரும். மாமிசம் சாப்பிட்டால் ஆகாது. வாயுப் பண்டங்கள் சாப்பிட்டால் பிடிக்காது சிலருக்குப் பால் பிடிக்காது. பாலைச் சாப்பிட்டதும் ஆஸ்துமா ஆரம்பித்து விடும். சிலருக்கு மோர் பிடிக்காது இவ்வாறு சிலருக்குச் சில பொருள்கள் பிடிக்காது. அதை அனுபவத்தில் தான் அறிய வேண்டும். மலச்சிக்கல் ஏற்பட்டால் ஆஸ்துமா வந்து விடும். வயிற்று உப்புசம், அஜீரணம் முதலியவற்றாலும் ஆஸ்துமா வரும். மிளகாய், மிளகு, கடுகு, மசாலா போன்ற கார வஸ்துக்களைச் சாப்பிட்டாலும் ஆகாது. சிலருக்குச் சில பூக்களின் வாசனை பிடிக்காது. அல்லது சில பூக்களின் மகரந்தப் பொடியின் வாசனை பிடிக்காது. பழங்கள், தக்காளி போன்றவை சிலருக்குப் பிடிக்காது. சிலருக்கு எது எது உடலுக்கு நல்லதோ அதெல்லாம் அவர்களுக்கு விபத்தமாயிருக்கும். சிலருக்கு வீட்டுச் சூழ்நிலையும் ஆஸ்துமாவை உண்டாக்கி விடும். இவ்வாறு ஒன்றல்ல இரண்டல்ல; பல காரணங்கள். எடுத்ததெல்லாம் ஆஸ்துமாவிற்குக் காரணமாய் இருக்கலாம். இவைகள் இத்தனையும் ஆஸ்துமாக்காரர்களுக்குத் தானே தவிர மற்றவர்களுக்கு அல்ல.

இந்தக் காரணங்களெல்லாம் நீக்கிவிட்டு ஒரு மனிதன் சமூகத்துடன் சுகமாய் ஆனந்தமாய் வாழ முடியுமா! வாழத்தான் சாத்தியமாவென்று யோசிக்க வேண்டும். சரி பால் பிடிக்கவில்லையென்றால் பாலைச் சாப்பிடாமல் இருந்து விடலாம். காரம், மசாலா பிடிக்காதென்றால், சாப்பிடாம விருந்தால் போகிறது எனலாம். ஆனால் வாழ்க்கையில் எழும் கோப, தாப, மனோ எழுச்சிகளை எப்படிக் கட்டுப்படுத்த முடியும்! அம்மாதிரி ஏற்படாமல் வாழ முடியுமா! வாழலாமே என்று சொல்வது எளிது. நடப்பது கஷ்டம். முற்றும் துறந்த முனிவர்கள் கூடக் கோப, தாப, உணர்ச்சிகளுக்கு வயப்படுகின்றார்கள். சரி, இதையும் அடக்கி வைத்துக் கட்டுப் படுத்த முயற்சிக்கலாமென்றால், இயற்கையாய் உண்டாகும் சீதோஷ்ண மாறுதல்களைக் கட்டுப்படுத்த முடியுமா! மழையை வேண்டாமென்று சொல்ல முடியுமா! அதது அந்தந்த காலத்தில் வரத்தானே செய்யும்! இதற்குப் பயந்து உள்ளேயே அடைந்து கிடக்க முடியுமா! அப்படி அடைந்து கிடந்தாலும் ஆஸ்துமா என்னமோ விடுவதாக இல்லை. எங்கு பதுங்கி இருந்தாலும் அது தன் வேலையை ஆரம்பித்து விடுகிறது.

அப்படியும் ஆஸ்துமா ஒரு தொத்து நோய் என்று சொல்லுவதற்கில்லை. பரம்பரையாக வரும் என்று சொல்லுவதற்கும் இல்லை. சில குடும்பங்களில் பெற்றோர்களுக்கு இருக்கிறது. அவர்கள் சந்ததிகளுக்கும் இருக்கின்றது. சில சந்ததிகளில் அதற்கு மாறாகவுமிருக்கிறது. சில குடும்பங்களில் பெற்றோர்களுக்கு அந்த அம்ச அடையாளம் கூடக் கிடையாது. ஆனால் அவர்கள் சந்ததிகளுக்கு இருக்கிறது. சந்ததிகளிலும் எல்லோருக்கும் வருகிறது என்று சொல்வதற்கில்லை. ஒரு சிலருக்கு வருகிறது. அவ்வளவு தான். ஆஸ்துமா வருவதற்கு வயதின் வரம்பே கிடையாது. சிறு குழந்தைகள் முதல் முதியோர்கள் வரையில் இந்த வியாதி வருகிறது.

ஆஸ்துமா ஆரம்பமாவதையும் கண்டு பிடிப்பது கஷ்டமாயிருக்கிறது. முதலில் ஜலதோஷம் போல் பிடிக்கிறது. பிறகு சளி பிடித்து இருமல் ஆரம்பிக்கிறது. அதற்குச் சாதாரண வைத்தியம் செய்தால் போவது போல் போய் மறுபடி அடிக்கடி வருகிறது. பிறகு ஒரு நாள் ஆஸ்துமாவைப் போல "கர் கர்" என்ற இழுப்பும் மூச்சு முட்டலுமாக மாறி விடுகிறது. பிறகு ஆஸ்துமா வென்று தெரிகிறது. சிலருக்கு "புல் ஜுரம்" என்று வந்து அதிலிருந்தும் ஆஸ்துமா ஆரம்பித்து விடுகிறது. சிலருக்கு இந்த ஆஸ்துமாவே க்ஷயத்திலும் கொண்டு போய் விடுகிறது.

எனவே, ஆஸ்துமா நோய்க்கு உண்டான இத்தனை காரணங்களையும் அறிந்து அவைகளை விலக்குவதென்பது சாத்தியமல்ல என்று ஏற்படுகிறதல்லவா! தவிர ஆஸ்துமா வென்பது ஒரு வியாதியே அல்ல. ஏதோ உடலில் ஏற்பட்டிருக்கும் சில மாறுதலினால் ஏற்படும் குறை. சூழ்நிலையில் ஏற்படும் மாறுதல்களைச் சமாளிக்கக் கூடிய உடலுறுதி இல்லாமையே காரணம். எது எப்படி இருப்பினும் ஆஸ்துமா வந்தவர்கள் பெரும் நோயாளிகளைப் போலத் தான் அவதிப்படுகின்றனர். இதற்கு ஒரு நிச்சயமான பரிகாரம் கண்டு பிடிக்க வேண்டியது மிக அவசியம். மனிதன் எடுத்ததற் கெல்லாம் பயந்து பயந்து, அஞ்சி, அஞ்சி, எங்கு ஆஸ்துமா வந்து விடுமோ, எங்கு இருமல் வந்து விடுமோ என்று சதா ஒதுங்கி வாழ முடியுமா! எது வரினும் என்ன கேடிடினும், எப்படி மாறினும் அத்தனையும் சமாளிக்கக் கூடிய உடலுறுதி வேண்டும்; ஆரோக்கியம் வேண்டும். இவை யில்லாமல் உலகில் இன்பமாய் வாழ முடியாது.

ஆஸ்துமா காற்றுக் குழாய் சம்பந்தப்பட்ட ஒரு நோய் என்பதில் யாருக்கும் சந்தேகமில்லை. அதை உடற் பயிற்சிகளினால்தான் குறைப் படுத்த



ஒருவர் :— என் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ள விரும்பும் வாலிபன் படிப்படியாக உத்தியோகத்தில் மேலே போகக் கூடியவனுயிருக்க வேண்டும்.

நண்பர் :— அப்படியானுல் நம்ம பயல் தான் லாயக்கு. அவன் தான் ஆபீஸில் கடைசி உத்தியோகத்தில் இருக்கிருன்.

முடியும் என்று வைத்திய உலகத்தார் எப்பொழுதோ முடிவு கட்டிவிட்ட விஷயம். ஆனுல் நடை முறையில் அதைக் கொண்டு வர முடியவில்லை. அதற்குக் காரணம் மக்களின் மனப்பான்மை. மக்களுக்கு மருந்தின் மேலிருக்கும் மாரு நம்பிக்கை. எனவே அதற்கும் வைத்தியர்கள் ஒரு குறுக்கு வழியைக் கண்டு பிடித்து விட்டனர். ஆஸ்துமாவுக்கு மூச்சுக் குழாய்களைச் சீர் செய்ய பிட்யூடரி கோளத்தின் ஹார்மோனும் அட்ரினேல் கோளத்தின் ஹார்மோனும் வேண்டியது அவசியம். இவை கிடைக்கக் கூடிய சிகிச்சை தேவை. அவை சரியான வழியில் அளிக்கக் கூடியது யோக ஆசனங்களே. ஆனுல் வைத்தியர் எங்காவது "வசிஷ்டர் வாயால் பிரம்ம ரிஷி" என்று சொல்வார்களா! ஆசனம் செய்யும்படி சொல்வது அவர்கள் தொழிலுக்கே முற்றிலும் புறம்பானதும், புதுமையானதும் கூட. அதனுல், இந்த யோகாசனத்தினுல் ஏற்படும் பிட்யூடரி ஹார்மோனையும், அட்ரினேல் ஹார்மோனையும் செயற்கை முறையில் தயார் செய்து ஊசி மூலம் குத்தி விடுகிருர்கள். இவ்வூசி மருந்து உட்சென்றதும், ஆஸ்துமாக்காரர்களுக்குச் சற்று விடுதலை கிடைக்கிறது. ஆனுல் இந்த மருந்து அடிக்கடி போட்டுக் கொண்டிருக்க வேண்டும். உள் சென்ற மருந்தும் ரத்தத்துடன் கலந்து காற்றுக் குழாய்களைச் சீர்திருத்தி விட்டு மறுபடியும் வரும் வழியில் மூத்திரக் காய்களால் வடிகட்டப் பட்டு விடுகிறது. மறுபடி வேண்டுமானுல், மருந்தைச் செலுத்த வேண்டியதுதான். இப்படி அடிக்கடி இம்மருந்து செலுத்துவதினுல் காற்றுக் குழாய் சீர்ப்பட்டு நரம்புகளுக்குச் சக்தி ஏற்பட்டு ஆஸ்துமாவும் போய் விடும். நோயாளிக்கு மட்டற்ற மகிழ்ச்சி உண்டாகும். பெரும் விடுதலை கிடைத்த மாதிரி ஒரு உணர்ச்சி இருக்கும்.

ஆனுல், இது நீடித்து நிற்க வேண்டுமே! அது தான் கிடையாது. ஒரு வருஷத்திற்குப் பின் மறுபடியும் ஆஸ்துமா ஆரம்பித்து விடும். இரண்டு வருஷங்கள் பொருத்தும் ஆரம்பிக்கும். இவ்வாறு அவரவர்களின் தேக திடத்தைப் பொருத்தும் காற்றுக் குழாயின் பலத்தைப் பொருத்தும் ஆஸ்துமா மறுபடியும் சீக்கிரம் திரும்புவதோ நாட் பொறுத்துத் திரும்புவதோ நடைபெறும். அப்படி வந்தால் நாள்கணக்கில் கஷ்டப்பட்டு மறுபடி இந்த மருந்துகளை எடுத்துக் கொள்ள வேண்டியது தான். இதுதான் இன்று நடக்கும் குறுக்கு வழி சிகிச்சை. இந்த முறை வைத்திய உலகத்திற்கு ஏற்றதாயிருந்ததால் அதையே அவர்கள் கடைப் பிடிப்பதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை.

ஆனுல் இந்த முறையினுல் நோயாளி உலகிற்கு நிரந்தர பலன் ஒன்றும் கிடையாது. வைத்திய உலகுக்கு நிரந்தர பலன் என்னமோ உண்டு. இயற்கை இயற்கைதான். செயற்கை செயற்கைதான். இந்த முறைதான் டயாபெடிஸ் விஷயத்திலும் நடை பெறுகிறது. இன்ஸுலின் உற்பத்தியாகும் பாங்கிரியாஸ் கோளம் சரிவர இன்ஸுலினை உற்பத்தி செய்து உணவிலுள்ள சர்க்கரையை மாற்றவில்லையென்ருல், இன்ஸுலின் ஊசியைக் குத்தி விடுகின்றனர். அதைப் போல் பிட்யூடரி கோளத்தின் ஹார்மோன் குறைவினுலும், அட்ரினேல் கோளத்தின் சோம்பலினுலும் அதன் வேலையாகிய நரம்புகளைச் சுறுசுறுப் புண்டாக்கல், உயிர் கொடுத்தல், உஷ்ணத்தை உண்டாக்கல் முதலியன தடைப் படுகின்றன. அப்பொழுது தன்கும் நிலையிலுள்ள மாறுதல்களைத் தாக்குப் பிடிக்கும் சக்தி குன்றி விடுகிறது. உடனே ஆஸ்துமா வந்து விடுகிறது. அதற்குச் சரியான வழி தூங்கிக் கிடக்கும், சோம்பிக் கிடக்கும், பிட்யூடரி கோளத்தையும் அட்ரினேல் கோளத்தையும் இயற்கை வழியாய் விழிப்படையச் செய்வித்துத் தன் வேலையை ஒழுங்காய்ச் செய்விக்க வேண்டும். இது இயற்கை வழி. அவ்வழி இந்த யோகாசன வழியே. அதிலும் ஆரம்பத்தில் ஆஸ்துமாக்காரர்கள் செய்ய வேண்டியது இந்த விபரீதகரணி ஆசனமே யாகும்.

கிணற்றின் தண்ணீர் வற்றி விட்டது வென்ருல் தூர் எடுக்கலாம். அல்லது இன்னும் சற்று ஆழம் செய்யலாம். அப்பொழுது தண்ணீர் அடைந்து கிடக்கும் ஊற்று திறந்து கொள்ளும். தண்ணீர் தானுகக் கிடைக்கும். அப்படியெல்லாம் ஒன்றும் செய்யாமல் அடைபட்ட ஊற்றைத் திறக்க முயற்சி செய்யாமல் கிணற்றில் தண்ணீர் வற்றி விட்டால் வேறு எங்கிருந்தாவது தண்ணீரைக் கொண்டு வந்து கிணற்றில் விட்டு அதை வேண்டும் போது உபயோகத்திற்கு எடுத்துக் கொண்டால் எவ்வளவு புத்திசாலித்தனமோ அவ்வளவு புத்திசாலித் தனமாய் இருக்கிறது. இந்த ஆஸ்துமா நோய்க்குப் பிட்யூடரியின் ஹார்மோனையும், அட்ரினேல் ஹார்மோனையும் உடலுக்குள் செலுத்துவது. கிணற்றில் தூர் எடுப்பதால் நிரந்தரமாய்த் தண்ணீர் கிடைப்பது போல் யோகாசனங்கள் செய்தால் நிரந்தரமான ஹார்மோன் சத்து கிடைத்துக் கொண்டிருக்கும். அப்படிச் செய்யாமல் மருந்தைச் செலுத்துவது கிணற்றில் வெளியிலிருந்து தண்ணீரைக் கொண்டு வந்து நிரப்புவதற்கு ஒப்பாகும்! எது சரியான வழி! நிரந்தர வழி என்பதை நேயர்களின் முடிவுக்கே விட்டு விடுகிறேன். (தொடரும்)



# ஆனந்த வாழ்க்கை

திருப்தி பிளிர்கிறது அவர் முகத்தில். அவள் கையால் ஆசையுடன் போட்டுக் கொடுத்த அந்த ஒரு டம்ப்ளர் 'டீ'யைக் குடித்தார், நாள் முழுவதும் ஆபிஸில் உழைத்த அவர் களைப்பு பறந்தோடி விட்டது. உற்சாகம் அடைகிறார். இனி மனைவியுடன் சரச சல்லாபம், குழந்தைகளுடன் விளையாட்டு. ஆனந்த வாழ்க்கைக்கு வேறு என்ன வேண்டும்?

தினம் கணவன் வீடு திரும்புதலை அவள் ஆவலுடன் மட்டுமல்லது முன் யோசனையுடன் ஒரு டம்ப்ளர் 'டீ'யுடன் எதிர்பார்க்கிறாள்.

உற்சாகமளிக்கும் 'டீ' போடுவது எவ்வளவு சுலபம்! செலவுக்கு செலவும் குறைவு; நொடிப்பொழுதிலே தயாரித்து விடலாம். நல்ல 'டீ'யை தினம் ரசித்துக் குடியுங்கள்.

**மந்திர சக்தியுள்ள**

**'டீ'யைக் குடியுங்கள்.**



[illegible] டீ போர்டாரால் வெளியிடப்பட்டது.

(சென்ற வாரத் தொடர்ச்சி)




ரோஸ் மேரியின் வேண்டுகோளை டேவிட் மறுக்க முடியாமல் முதலில் தவித்தான். தன் சகோதரியின் மேலுள்ள அன்பு காரணமாக அவள் கூறியதைச் சற்று அசட்டையாகக் கேட்டுக் கொண்ட டேவிட், "ஆகட்டும் முடிந்தால் சந்திக்கிறேன்" என்றான். ஆனால் மேரி அவனை விடவில்லை. "முடிந்தால் என்று சொல்லாதீர்கள் அண்ணா. அவசியம் நீங்கள் மைதானத்துக்கு வந்து பார்த்து விட்டு விஷயத்தை என்னிடம் வந்து சொல்ல வேண்டும்" என்று விடாமல் வற்புறுத்தவே வேறு வழியின்றி ஒப்புக்கொண்டு சென்றான்.

சிறிது நேரத்துக்குப் பிறகு வெளியிலிருந்து திரும்பிய ஜேம்ஸ் வீட்டினுள் நுழைந்தபோது மேரியின் அற்புதமான அலங்காரத்தைக் கண்டு அதிசயித்தான். ரோஜா நிற ஜார்ஜட் புடவையும், கனகாம்பர வர்ண ஜாக்கட்டும் அணிந்து தன்னை வெகு அழகாக அலங்கரித்துக் கொண்டிருந்த மேரியை இமை கொட்டாது பார்த்துக்கொண்டே நின்ற ஜேம்ஸ், "இவ்வளவு சீக்கிரமாகவா வெளியே போகப் போகிறாய் மேரி! வெய்யிலின் கடுமை இன்னும் குறைய வில்லையே" என்றான்.

புன்னகை புரிந்த மேரி "இல்லை; நான் இன்று வெளியிலெங்கும் போகப் போவதில்லை" என்று பதிலளித்தவள், மீண்டும் மிகவும் குழைவாக, "ஜேம்ஸ், நீங்கள் எனக்கொரு உதவி செய்ய வேண்டுமே" என்று இனிமையாகக் கேட்டாள்.

மகிழ்ச்சியடைந்த ஜேம்ஸ், "ஒரு உதவி என்ன மேரி, ஒன்பது உதவி வேண்டுமானாலும் செய்கிறேன். நானும் இன்று வெளியிலெங்கும் போகப் போவதில்லை" என்றான்.

மெல்லச் சிரித்துக் கொண்ட மேரி தன் அழகிய விழிகளால் அவன் முகபாவத்தை ஆராய்ந்தபடி, "நான் இன்று என் கம்பெனி நண்பர்கள் இருவரை வரவேற்க வேண்டும். அதனால் நீங்கள் சற்று முன் ஹாலில் உட்கார்ந்து அவசர ஜோலியாக வெளியே சென்றிருக்கும் அண்ணா டேவிட்டைத் தேடி வருபவர்களுக்கு ஜவாப் கொடுத்துக் கொண்டிருந்தால் போதும்" என்றாள்.

இதைக் கேட்டுச் சிரித்த ஜேம்ஸ், "இவ்வளவு தானா! ஏதோ பெரிய உதவியாகச் செய்யச் சொல்வாய் என்றல்லவா பார்த்தேன்" என்று சொல்லி விட்டுத் தன் ஆடைகளை மாற்றிக் கொள்ள அவசரமாகச் சென்றான்.

அரைமணிக்குப் பிறகு ஜேம்ஸ் முன் ஹாலில் மின்சார விசிறிக் கடியில் உட்கார்ந்து, ஏதோ ஒரு நாவலைப் பிரித்துப் படித்துக் கொண்டிருந்தான்.

இவ்விதமாகத் தன் ஏற்பாடுகளைத் துரிதமாகச் செய்து கொண்டே வந்து திருப்தியடைந்த மேரி பரபரப்புடன் பின் கட்டுக்குச் சென்று வேலைக்காரப் பெண்ணைக் கூப்பிட்டு, "இதோ பாரு! நான் சொன்னது நன்றாக நினைவிருக்குமா? சரியாக மணி ஆறு ஆனவுடன் முன் ஹாலில் உட்கார்ந்திருக்கும் ஜேம்ஸ் துரையிடம் சென்று 'உங்களை மேரியம்மா மேலே கூப்பிடுறாங்க' என்று சொல்ல வேண்டும் தெரிந்ததா! மறந்து விடாதே. சரியாக மணி ஆறுக்கு. நினைவு வைத்துக் கொள்" என்று எச்சரித்துவிட்டுச் சென்றாள்.

மணி நாலு அடித்தது. மேரியிடம் சொன்னபடி சரியாக நாலு மணிக்கு மேரியின் வீட்டிற்குள் நுழைந்தான் ரங்கநாதன். 'கம்'மென்று வீசிய செண்டின் மணமும், சரக் சரக்கென்று ஒலித்த செருப்பின் சத்தமும் ஜேம்ஸை நிமிரச் செய்தது. 'இஸ்திரி' மடிப்புக் கலையாமல் சிறந்த முறையில் அலங்காரம் செய்து கொண்டு வந்துள்ள இவ்வழகிய வாலிபன் யாராக இருக்கும்! என்ற யோசனையுடன் அவனை வரவேற்க ஜேம்ஸ் எழுந்த போது, வெண்கல மணியின் நாதம்போல் ஒலித்தது மேரியின் குரல்:—

"ஹலோ! ரங்கநாத்! சொன்ன நேரம் தவறாமல் வந்து விட்டீர்களே! வாருங்கள்" என்று உற்சாகமாக வரவேற்று அழைத்துச் சென்றாள்.

ஜேம்ஸ் நாற்காலியில் உட்கார்ந்து மீண்டும் மூடிய புத்தகத்தைப் பிரித்துக் கொண்டே, நாவலைப் படிக்கத் தொடங்கி விட்டான்.

மேரி, ரங்கநாதனுடன் அரைமணி நேரம் உலக விவகாரங்களைப் பற்றி ஏதேதோ பேசிய பின் மிகவும் மெதுவான குரலில் சொன்னாள்: "ரங்கநாதன்! இன்று உங்களிடத்தில் ஒரு முக்கியமான விஷயத்தைச் சொல்லவே கூப்பிட்டேன். அந்த விஷயத்தைச் சொல்ல நம்பிக்கையான மனிதர் தாங்கள்தான் என்று தீர்மானித்தே உங்களை வரச் சொன்னேன். நம் கம்பெனி ஆசாமி யொருவர் இன்று மாலை ஏழு மணிக்குப் பூங்காவை யடுத்துள்ள மைதானத்துக்கு என்னை வரும்படி அழைத்திருக்கிறார். (சற்றுக் கோபத்துடன்) இது எவ்வளவு அயோக்யத்தனம் என்பதை புத்திசாலியான உங்களுக்கு நான் விவரித்துச் சொல்ல வேண்டியதில்லை. இன்று மாலை மைதானத்தில் எனக்காகக் காத்து நிற்கும் அந்த அயோக்ய நபரைச் சந்தித்துச் சரியான பாடம் கற்பிக்க வேண்டும். இந்த முக்கியமான விஷயத்திற்காகத்தான் உங்களை— உங்களிடம் எனக்குள்ள அபாரமான நம்பிக்கையால் அழைத்தேன்" என்று முடித்தாள்.

இதைக் கேட்டதும் கோபத்தால் கொதித்தான் ரங்கநாதன். "அப்படித் துணிந்து உங்களை அழைத்த அந்த மடையன் யார்! இன்று நான் அவனுக்குக் கற்பிக்கும் பாடத்தை அவன் இனி என்றுமே மறக்க மாட்டான்" என்று உதடுகள் துடிக்க உறுதியாகச் சொன்னான்.

சந்தோஷமாக எழுந்த மேரி, "ஓ! நீங்கள் நிச்சயம் செய்வீர்கள் என்பதே என் நம்பிக்கை. அந்த அற்ப மனிதரின் பெயரைச் சொல்ல நான் விரும்பவில்லை. நீங்கள்தான் நேரில் பார்க்கப் போகிறீர்களே. பார்த்து அவசியம் அவனுக்குச் சூடு கொடுங்கள். இன்று இதை வெற்றிகரமாக நடத்தி விடுங்கள். வெற்றியைக் கொண்டாட

நாளை நாம், 'ஸீஸர் அன் கிளியோபாட்ரா' என்ற சினிமாப் படத்துக்குப் போவோம்'' என்ருள்.

உச்சி முதல் உள்ளங்கால் வரை ரங்கநாதனுடைய உடலில் ஒரு குளுமையைக் கொடுத்தது, மேரியின் இவ்வினிய வார்த்தைகள். அப்பொழுதே அவள் இட்ட பணியை நிறைவேற்றத் துடிப்புடன் புறப்பட்டான் அவன். அவனை வாசல்வரை வந்து வழியனுப்பிய மேரி, இடத்தை விட்டு அசையாமல் நாவலில் இரண்டறக் கலந்து விட்ட ஜேம்ஸைக் கண்டு உள்ளுக்குள் அதிசயித்துக் கொண்டே அன்ன நடை நடந்து வந்தாள்.

மேரி சொன்ன நேரப்படி மணி ஐந்தடித்து பத்து நிமிஷத்துக் கெல்லாம் ஆஜராகி விட்டான் லோகநாதன். 'டக்' 'டக்'கென்று சிமெண்டுத் தரையில் ஒலித்த பூட்ஸின் சத்தம் கேட்டு நிமிர்ந்தான் ஜேம்ஸ். அசல் ஆங்கிலேயனைப்போல ஆடையணிந்து நின்ற அந்த அழகான வாலிபனைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டே எழுந்த ஜேம்ஸ் அவனை வரவேற்க வாயைத் திறக்கு முன் கணீரென்று ஒலித்தது மேரியின் குரல்.

'' ஹலோ! ஹலோ! லோகநாதன்! உங்கள் வரவைத்தான் எதிர்பார்த்துக் கொண்டே யிருந்தேன். ஒரு வேளை நேரம் தவறி விடுவீர்களோ என்று பயந்தேன். நேரப்படி கணக்காக வந்து விட்டீர்கள். வாருங்கள் மேலே போவோம்'' என்று மிக இனிமையாகச் சிரித்தபடி எல்லையற்ற உற்சாகத்துடன் அவனை




வரவேற்று அழைத்துக்கொண்டு சென்ருள் மேரி. சிறிது நேரம் வரை ஜேம்ஸ் ஷேக்ஸ்பியரை மறந்து, அசந்து உட்கார்ந்திருந்தான். அதன் பிறகு ஒரு பெருமூச்சுடன் மீண்டும் புத்தகத்தைப் பிரித்துப் படிக்க ஆரம்பித்து விட்டான்.

அரைமணி நேரம் வரை லோகநாதனுடன் கலகலவென்று சிரித்துப் பேசிக் கொண்டிருந்த மேரியின் குரல் கீழ்வரை நன்ருகக் கேட்டது. அரை மணிக்குப் பிறகு லோகநாதனுக்கு மிகவும் அருகில் நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்த மேரி மிகவும் மெதுவான குரலில், ரங்கநாதனிடம் அளந்த அதே கற்பனைக் கதையை இப்போது லோகநாதனிடமும் அளந்து கொண்டிருந்தாள். அவள் அளந்த அந்தக் கதையை அதிக கவனமாகக் கேட்ட லோகநாதன் ஆத்திரமடைந்து கொதித்தான்.

பல்லை நறநறவென்று கடித்த அவன் '' இன்று அந்த மூட்டாள் என்னிடம் படுகிற பாட்டில் இனி என்றுமே தலை நிமிர மாட்டான். பாருங்கள்! இது நிச்சயம்'' என்ருன்.

நன்றியுடன் அவனை நோக்கிய மேரி, ''பதட்டப் படாமல் காரியத்தை வெற்றிகரமாகக் கவனிப்பீர்கள் என்ற நம்பிக்கையால்தான் உங்களிடம் சொன்னேன். இதையெல்லாம் நான் லட்சியமே செய்ய மாட்டேன். இருந்தாலும் கண்யமானவர் என்று கருதப்படும் ஒருவரே...'' மேலே தொடர இஷ்டப்படாதவள்போல் நிறுத்தி விட்ட மேரி தன் கைகடிகாரத்தைப் பார்த்துக் கொண்டே, '' லோகநாதன், நாளை சினிமா முதல் ஆட்டத்துக்குப் போவோமா!'' என்ருள் மிக இனிமையாக.

புளகாங்கிதம் கொண்டு பூரித்த லோகநாதன், ''ஓ! நான் தயார்'' என்ற அதே சமயம் 'டக்' கென்று போடப்பட்ட மின்சார விளக்கின் ஒளியால் திடுக்கிட்டு எழுந்தான். அதிர்ச்சியுடன் எழுந்த மேரி அதிக கோபத்துடன் திரும்பினுள். அவள் முன் வந்து நின்ற ஜேம்ஸ் ''கூப்பிட்டாயா மேரி'' என்ருன் மிக நிதானமாக.

அளவில்லாமல் எழுந்த கோபத்தை அடக்கிக் கொள்ளும் நிமித்தம் கீழ் உதட்டைக் கடித்துக் கொண்ட மேரி, லோகநாதன் பக்கம் திரும்பி, '' நல்லது நீங்கள் புறப்படலாம். நான் சொன்னதை மட்டும் மறந்து விடாதீர்கள்'' என்ருள்.

லோகநாதன் சென்றதும் கடுங்கோபத்துடன் ஜேம்ஸின் பக்கம் திரும்பிய மேரி, '' ஜேம்ஸ், இது என்ன! நான் கூப்பிட்டேனு! என்ன நாடகம் இது!'' என்ருள் எகத்தாளமாக.

வியப்படைந்த ஜேம்ஸ், '' நீ கூப்பிடவில்லையா? பின் வேலைக்காரப் பெண்......'' ஜேம்ஸ் மேலே தொடரு முன் இடைமறித்துச் சொன்னுள் மேரி: ''ஜேம்ஸ்! எதற்கு இந்தப் பொய்! நான் சொல்லுகிறேன், ஆண்களுக்கே இயற்கையாகவுள்ள சந்தேகம், பொருமை இவைகள் உங்களை மட்டும் விட்டு விடுமா! நானும், அவரும் பேசிக்கொண்டிருப்பதைப் பொறுக்காமல் வேவு பார்க்கவே வந்து விளக்கைப் போட்டீர்கள். இது உண்மை தானே!'' என்று கோபத்துடன் கேட்டாள்.

இதைக் கேட்ட ஜேம்ஸ் பிரமித்து விட்டான். பிரமிப்பினுல் விரிந்த விழிகளால் மேரியின் முகத்தைக் கூர்ந்து நோக்கிய அவன் மெதுவான — ஆனுல் உறுதியான குரலில், '' சந்தேகமா! மேரி, நீ என்னை அறிந்தது இவ்வளவுதானு! மேரி, உன்னுடன் பல தினங்கள் பழகி உன் மனத்தை நன்ருக அறிந்துள்ள நானு உன்மீது சந்தேகப்படுவேன்! மேரி, உன் அழகைக் காட்டிலும் அதிகமாக என் மனத்தைக் கவர்ந்தது எது தெரியுமா!

அசைக்க முடியாத உன் மன உறுதிதான். அந்நிலையை உன் மனத்தை ஒருவன் கவர்ந்து விடுவான் என்று சந்தேகிக்க எனக்கென்ன பயித்தியமா!"

இப்போது மேரியின் அழகிய விழிகளில் நீர் நிறைந்தது. களிப்பினாலும், அன்பினாலும் நிரம்பிய அவளது மனத்தை வெளியிட உதடுகள் துடித்தன. ஆயினும் அவளால் அப்போது எதுவுமே பேச முடியவில்லை. எல்லாவற்றிற்கும் மேலாக அவள் மனத்திலே எழுந்த ஒரே ஒரு சொல்லைத்தான் அவளால் சொல்ல முடிந்தது. கண்களில் நீர் ததும்ப, உதடுகள் துடிக்க, "ஆ! கடவுளே!" என்றாள் மேரி. அடுத்த நிமிஷம் அவளது அழகிய முகம் ஜேம்ஸின் விரிந்த மார்பினிடையே புதைந்து விட்டது.

மணி எட்டு அடிக்கும்போது, "மேரி! மேரி! நான் பந்தயம் வைத்த அந்த ஆயிர ரூபாய்க்கு என்னவேண்டும் உனக்கு!" என்று வீடே அதிரும்படி சத்தமிட்டுக் கொண்டே வந்த டேவிட், வீட்டின் முன் ஹாலில் நிரம்பி நின்ற அமைதியைக் கண்டு அதிசயித்தான். அந்த அதிசயத்தைத் தொடர்ந்து இன்னுமோர் அதிசயத்தையும் கண்டான் அவன். மெத்தைப் படிகளில் மெதுவாக இறங்கி வந்து கொண்டிருந்த மேரி, ஜேம்ஸ் இருவருடைய முகத்திலும் பொங்கிய மகிழ்ச்சியைமாறி மாறிப் பார்த்த அவன், "மேரி! இதோ பார்! அழகான அழைப்பிதழ்கள் அத்தனையையும் கட்டித் தூக்கி ஒரு மூலையில் போட்டு விடலாம் அல்லவா!" என்றான்.

அருமை அண்ணனின் பரிகாசத்தால் சிவந்த தன் முகத்தைத் தாழ்த்திக் கொண்ட மேரி, "அதற்கு அவசியமில்லை அண்ணா! அவ்வழைப்பிதழ்களை இன்றே வேண்டுமானாலும் எல்லோருக்கும் அனுப்பி விடுங்கள்" என்றாள்.

* * *

மெல்ல மெல்ல அடுக்களையிலிருந்து எழுந்த புகை வீடு முழுவதையும் ஆக்கிரமித்துக் கொண்ட





"என்ன பாலு, ஏன் உன் தலை முழுவதும் இப்படி நரைத்துப் போய் விட்டது?"

"எல்லாம் கவலையினால்தான்!"

"கவலையா? உனக்கு என்ன அப்படிக் கவலை வந்து விட்டது!"

"தலை நரைத்துப் போகிறதே என்ற கவலைதான்!"

போது, "ஏன் இப்படிப் புகை! வீட்டிலே யாருமே இல்லையா!" என்று இரைந்து சத்த மிட்டான் லோகநாதன்.

"வீட்டிலே எல்லாரும் இருக்கான்னு ஞாபகப் படுத்துடா உங்கப்பாவுக்கு, வீட்டில் ஒரு விறகுக் குச்சிகூட இல்லை என்று சொல்லி இரண்டு நாளாச்சு என்றும் ஞாபகப் படுத்து. இன்று விறகு வரவிட்டால் சமைக்க வழியில்லை என்றும் சொல்லுடா கிட்டு" என்று எதிர்ச் சத்தமிட்டாள் லோகநாதனின் அருமை மனைவி.

ஆத்திரமாக எழுந்த லோகநாதன் ஐந்து ரூபாய் நோட்டொன்றை எடுத்து வீசியெறிந்து, "இந்தாடா! கிட்டு, விறகு வாங்கிக் கொள்ளச் சொல். எனக்கு ஆபீஸிலே வேலை கிடக்கு" என்று சொல்லிவிட்டுப் பரபரப்புடன் ஷேவிங் செட்டை எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்தான்.

"வேலை கிடக்காம்! அலங்காரம் செய்துகொள் வதிலே ஒன்றும் குறைச்சலில்லை" என்று முணு முணுத்த மனைவியின் முணு முணுப்பைத் துளியும் லட்சியம் செய்யாத லோகநாதன் தன் காலை அலுவல்களையெல்லாம் அவசரமாகவே முடித்துக் கொண்டு, மனத்தைக் கவரும் வண்ணம் ஆடை அணிந்துகொண்டு மிக உற்சாகமாகக் கிளம்பினான் கம்பெனிக்கு. அன்று மாலை அழகி மேரியுடன் சினிமாவுக்குப் போகிற ஆனந்தத்தில் மிதந்து கொண்டிருந்த அவனுக்கு! அப்போது பசி, தாகம் ஒன்றுமே லட்சியமாக இல்லை.

வீட்டுப் படிகளைக் கூடக் கடக்கவில்லை லோக நாதன், அவன்முன் ஸைக்கிளில் வந்து இறங்கிய ஒரு சிறுவன், "ஸார்! இதை மேரியம்மா உங்க கிட்டம் கொடுக்கச் சொன்னாங்க" என்று ஒரு கவரை நீட்டினான். கவரைக் கையில் வாங்கிக் கொண்ட லோகநாதன் மனம் ஒரு கணம் உயரப் பறந்தது. ஆம்; ஒரு கணம்தான்! கவரைப் பிரித்து அழைப்பிதழைப் படித்தபின் அவன் மனம் அவனையும் அறியாமல் அதள பாதாளத் திலே விழுவதுபோல இருந்தது.

கண் முன்னும் இருந்து பல வர்ண ஜாலங்களைப் பொழிந்து, மனத்தை முற்றிலும் கவர்ந்து இழுத்து மகிழச் செய்து கொண்டிருந்த ஒரு கண்ணாடி விளக்கு, கணநேரத்தில் எதிர்பாராமல் உடைந்து சுக்கு நூறாகி விட்டால் எப்படி யிருக்குமோ அப்படியிருந்தது லோகநாதனுக்கு. அவன் அப்படியே பிரமித்து நின்று விட்டான். பிரமை தெளிந்தபோது அவன் தனக்குத்தானே சமாதானம் சொல்லிக் கொண்டான். "படித்த பெண். நம்முடன் சகஜமாகப் பழகினால் அதைத் தவறாக எடுத்துக் கொள்வது நம் குற்றம்......சே! சே! நாம்தான் என்ன குற்றம் செய்துவிட்டோம்! யாரார் ஏதேதோ கதை கட்டினார்கள். இப்படி யாக எல்லாவற்றையும் மூடி மெழுகி தனக்குத் தானே சமாதானம் செய்து கொண்டான் லோக நாதன். பாவம்! இப்போது அவன் உள்ளம் ஏனோ நண்பன் ரங்கநாதனிடம் எல்லையில்லாத அனு தாபம் கொண்டு தவித்தது. ஒரு பெரு மூச்சுடன் அவன் தன் கையிலிருந்த அந்தக் கல்யாண அழைப்பிதழை ஜன்னல் மூலம் மேஜைமீது போட்டு விட்டு மிகவும் மெதுவாகவே தெருவில் இறங்கி நடந்து சென்றான்.

இதே நேரத்தில் அதி உற்சாகத்துடன் மிக அழகாக அலங்காரம் செய்து கொண்டு படி இறங்கிய ரங்கநாதனிடமும் பத்திரிகைக் கவரைக் கொடுத்துச் சென்றான் பையன். லோகநாதன் அடைந்த அதே மாதிரியான உணர்ச்சிகளால் அலைப்புண்ட ரங்கநாதனும், கடைசியாகத் தன் நண்பனைக் காணத் துடித்தான். முதல் நாள் மாலை மைதானத்தில் அவர்கள் இருவரும் நேருக்கு நேராகச் சண்டை போட்டுக் கொண்டதை நினைத்தபோது அவன் மனம் வெட்கினான். "சே! சே! என்ன முட்டாள்தனம்! அந்தப் பெண் யாரைக் குறிப்பிட்டாளோ! லோகநாதன்தான் அது என்று நான் எப்படித் தீர்மானிக்கலாம்!" இப்படியாக நண்பனிடம் இரக்கம் கொண்டு தவித்தது அவன் மனம். அவனும் தன் கையி லுள்ள அந்த அழைப்பிதழை மேஜைமீது போட்டு விட்டுப் பல பல ஆலோசனைகளுடன் மெது வாகவே கம்பெனியை நோக்கி நடந்தான்.

தன்னை மறந்து தெருவில் நடந்து வந்து கொண் டிருந்த லோகநாதனை மோதித் தள்ளிவிட்டுச் சென்றது ஒரு குதிரை வண்டி. பின்னாலேயே வந்து கொண்டிருந்த ரங்கநாதன் இதைப் பார்த் துப் பதறி ஓடி வந்து லோகநாதனைத் தூக்கினான். "அட! நீயா!" என்றான் லோகநாதன். "காயம், கீயம் பட்டு விட்டதா! பார் முதலில்" என்று அவனை ஆஸ்வாசப் படுத்தினான் ரங்கநாதன். இது நடந்த சிறிது நேரத்திற்குப் பிறகு அந்த 'காதல் நண்பர்'கள் இருவரும் கை கோர்த்துக் கொண்டு கம்பெனிக்குள் நுழைந்தபோது தங்கள் கண் களையே நம்ப முடியாமல் திகைத்தனர் கம்பெனி யிலிருந்த மற்றச் சிப்பந்திகள்.

* * *

சீனவனது பராமுகத்தைக் கண்டு பொருமிய லோகநாதன் மனைவி வெகு நேரம் விம்மி அழுது கொண்டிருந்தாள். அதன் பிறகு எழுந்தவள், கீழே கிடந்த அந்த ஐந்து ரூபாய் நோட்டை எடுத்து மேஜைமீது வைக்கப் போனபோது,

காற்றிலே படபடத்த அந்தப் பத்திரிகையைக் கையிலெடுத்துப் படித்தாள். படித்தவள் பரபரப்புடன் பக்கத்துத் தெருவை நோக்கி ஓடினாள்.

'இன்றைக்கு ஏதாவது ஒரு வழி செய்தாலொழியத் தன் கணவன் வழிக்கு வரமாட்டார்' என்று தீர்மானித்த ரங்கநாதன் மனைவி 'கடிதம் ஒன்று எழுதிக் கணவன் பார்க்கு மிடத்தில் வைத்து விட்டுப் பிறந்தகம் புறப்பட்டுப் போய்விடுவது' என்ற தீர்மானத்துடன் பேப்பர் பேனா எடுக்க மேஜை அருகில் வந்தவள், பள பள வென்று மின்னிய அந்த அழகான அழைப்பிதழைக் கையிலெடுத்துப் பிரித்தாள். பிரித்துப் படித்தவள் பிரமிப்புடன், போட்டது போட்ட வாக்கில் கிடக்கக் கதவைக்கூடப் பூட்டாமல் ஓடி வந்தாள்.

தெரு மூலைத் திருப்பத்தில் வேகமாக ஓடி வந்த அவ்விரு பெண்களும் ஒருவர்மீது ஒருவர் மோதிக் கொண்டனர். மோதிய வேகத்தில், 'அம்மாடி' என்று நின்ற இருவரும் அடுத்த நிமிஷம் 'குபீர்' என்று சிரித்து விட்டார்கள். பாவம், வெகு நாட்களுக்குப் பிறகு அன்றுதான் அவர்கள் வாய் விட்டு, மனம் விட்டுச் சிரித்தார்கள். சிரிப்பு ஓய்ந்ததும் அவ்விரு வனிதைகளும் ஒருவர் கையை மற்றவர் கவனிக்காமலே, இருவரும் ஏக காலத்தில் சேர்ந்தாற் போல, "இதைப் படிக்கிறேன், கேளடி!" என்று, "......மகள் ரோஸ் மேரிக்கும் மகன் ஜேம்ஸிற்கும் விவாஹம் நடத்துவதால்..." மீண்டும் அப் பெண்கள் குப்பென்று சிரித்து விட்டனர். அதன் பிறகு அவர்கள் அது தெரு என்பதையும், தங்கள் வீடுகள் திறந்து கிடக்கிறது என்பதையும் மறந்து பலபல பேசி மகிழ்ந்தனர். கடைசியாக அன்று மாலை வீடு திரும்பும் கணவன் மார்களைப் பலவிதத்திலும் மகிழ்வித்து, நிரபராதியான அவர்களைச் சந்தேகித்த பாவத்தை மறக்கக் குழந்தைகளையும் அழைத்துக் கொண்டு அன்றே ஒரு சினிமாவுக்குப் போவது என்ற தீர்மானத்துடன்தான் இருவரும் பிரிந்து தங்கள் தங்கள் வீட்டை யடைந்தார்கள்.

அன்று இரவு ஆறு ஜோடிக் கண்கள் அதிக ஆனந்தத்துடன் "ஸீஸர் அண் கிளியோ பாட்ரா" என்ற படத்தை அனுபவித்துப் பார்த்துக் கொண்டிருந்த அதே சமயம், பிட்டுவின் சின்னஞ் சிறு கண்கள் மட்டும் சஞ்சலமடைந்து தவித்தது. காரணம் அவனது சின்னஞ்சிறு உள்ளத்திலே எழுந்து கொண்டே யிருந்த கேள்விகளுக்கு விடை காண முயன்றும் முடியாமல் இருந்ததே! "இன்று காலை வரை எதற்கெடுத்தாலும் சண்டை போட்டுக் கொண்டே யிருந்த அம்மாவும், அப்பாவும் மாலை முதல் இப்படி இழைவதற்குக் காரணம் என்ன! காலையில் விறகு இல்லை என்ற அம்மா ஒரு வண்டி விறகை வைத்துப் புகைத்தாலும் புகைக்க முடியாத அவ்வளவு புகையை உண்டாக்கினாள்! மாலையில் ஈரம் சொட்டச் சொட்டத் தளிருடன் இருந்த விறகைத் துளிப் புகைகூட இல்லாமல் எரித்தாள்! இது எப்படி முடியும்! எடுத்ததற்கெல்லாம் சள்ளு, சள்ளு என்று விழுந்து கொண்டும், அழுது கொண்டும், அனாவசியமாகத் தன்னையும், பாப்பாவையும் அடித்துக் கொண்டும் இருந்த அம்மா திடீரென்று மாலையில் எடுத்ததற்கெல்லாம் சிரித்துக் கொண்டும், பாடிக் கொண்டும், அனாவசியமாகத் தன்னையும், பாப்பாவையும் தூக்கித் தூக்கிக் கொஞ்சிக் கொண்டும் இருந்தாளே! இதற்கெல்லாம் காரணம் என்ன!" குழந்தை பிட்டுவின் உள்ளத்திலே எழுந்து கொண்டேயிருந்த இந்தக் கேள்விகளுக்கு அவன் எப்படி விடை காணமுடியும்!

ரோஸ்மேரி தன் திருமணத்துக்காகச் செய்த சோதனையை அந்தச் சிறுவனால் தெரிந்து கொள்ள முடியுமா! இல்லை காதலன்பர்கள் தான் அதை உணர்ந்து கொண்டிருப்பார்களா!



அம்மா:—அடுத்த வீட்டு மணியோடு விளையாடாதே! அவன் துஷ்டன்!

பையன்:—அப்படியானால் அவனோடு சண்டை போடட்டுமா, அம்மா!

பாரதி காட்டிய பாதை

## நான்கு வரிகள்!

"திடங் கொண்டு வாழ்ந்திடுவோம் தேம்பல் வேண்டா
தேம்புவதிற் பயனில்லை: தேம்பித் தேம்பி
இடருற்று மடிந்தவர்கள் கோடி கோடி,
எதற்குமினி அஞ்சாதீர் புவியிலுள்ளீர்!"

என்ற வீர முழக்கம் விண்ணை முட்டிற்று; திக்கெட்டும் சுழன்று சுழன்று வந்தது; ஒவ்வொரு மனிதனின் செவியிலும் சென்று பாய்ந்து, நரம்புகளில் புது முறுக்கையும், குருதியில் ஓர் புதிய உணர்ச்சியையும் ஓட்டத்தையும் ஊட்டிற்று; கண்களில் ஓர் புதிய ஒளியையும், வாட்டமுற்ற வதனத்தில் ஓர் வண்ண மலர்ச்சியையும் கொடுத்தது. இரண்டு நூற்றாண்டுகளாக மறைந்திருந்த—அல்ல, மறைக்கப்பட்டிருந்த—அஞ்சாமை, சோம்பாமை, மனோவலிமை, ஊக்கம், உற்சாகம் முதலியவற்றை மீண்டும் மக்களுக்குக் கொடுத்தது அந்நான்கு வரிகள்.

என். வி. வி. இராமன் (புகலூர்)

# சகுனமாகவில்லை!

டி. ஜி. எஸ்.

மன்னார்சாமி, தான் காலையில் வீட்டை விட்டுக் கிளம்பிய போது எதிரில் வந்த கிழவியை மனமாரச் சபித்தான். காரணம் பகல் மணி பன்னிரண்டுக்கு மேலாகியும் அவன் வலையில் யாரும் விழாததுதான். அவனும் எத்தனையோ தடவை இந்த மாரியம்மன் திருவிழாவிற்கு வந்திருக்கிறான். ஆனால் ஒரு சமயமாவது அரை மணிக்கு மேல் அவனுக்கு வேலையிருந்ததில்லை.

அவன் கையில் வைத்திருந்த உயர்ஜாதி மாம்பழத்தை ஒருமுறை நுகர்ந்து பார்த்தான். பசி அவன் வயிற்றைக் கிண்டிற்று. 'இன்னும் அரை மணி பார்ப்போம்; இல்லா விட்டால் கைக்காசு போட்டு வாங்கிய இந்த மாம்பழம்தான் இன்றைய ஆகாரம்' என்று எண்ணினான். வெய்யில் ஏற, ஏற அவன் அணிந்திருந்த ஸில்க் சட்டையும் வேஷ்டியும் வியர்வையில் கச, கசத்து அவனுக்கு வேதனையை அளித்தன. ஆனால் நாய் வேஷம் போட்டால் குரைத்துத் தானேயாக வேண்டும்!

“இன்று நம் கடை வீண்தான்” என்று அவன் தீர்மானமாய் முடிவு கட்டிவிட்ட போது சற்றுத் தூரத்தில் சிலர் கும்பலாய் நின்றிருப்பது அவன் கண்ணில் பட்டது.

“இதைத் தவற விட்டால் நாம் முட்டாள் தான்” என்று தீர்மானித்து வேகமாய் நடந்தான் அவன். கும்பலில் முண்டியடித்துக் கொண்டு முன்னேறிய பின்னர்தான் அவனுக்கு விஷயம் விளங்கிற்று.

கும்பலிடையே ஒரு நாலு வயதுச் சிறுமி நின்று, ‘அம்மா! அம்மா!’ என்று கேவிக் கேவி அழுது கொண்டிருந்தாள். இரண்டு மூன்று பேர் அவளைச் சமாதானம் செய்ய முயற்சித்துக் கொண்டிருந்தனர். மன்னார்சாமி அச் சிறுமியின் முகத்தைப் பார்த்தான். பின்னர் அதன் கழுத்தைப் பார்த்தான். குறைந்தது மூன்று சவரனாவது இருக்கும் என்று மதிப்பிட்டது அவன் உள்ளம். எல்லாம் ஒரே விநாடியில் தான்! அடுத்த விநாடியே அவன் மேற்கொண்டு என்ன செய்ய வேண்டுமென்பதைத் தீர்மானித்து விட்டான்.

“அம்மாளு! இங்கே யாம்மா இருக்கே நீ! ஊரெல்லாம் தேடிவிட்டு வரேனே! அந்த மாரியம்மன்தான் என் வயிற்றிலே பால் வார்த்தாள்” என்று துயர் நீங்கிய குரலில் சொல்லியபடி குழந்தையை நெருங்கி அதைத் தூக்கிக் கொண்டு தன் கையிலிருந்த பெரிய மாம்பழத்தை அதனிடம் நீட்டினான்.

அத்தனை நேரம் அழுது கொண்டிருந்த சிறுமி பழத்தைக் கண்டதும் ‘கப்’பென்று வாயை மூடிக் கொண்டு விட்டாள்.

“பார்த்தீங்களா! இத்தனை நேரம் நாமும் என்னென்னவோ சொல்லிச் சமாதானம் செய்து பார்த்தோமே! கேட்டதா! இப்போ அப்பாவைக் கண்டதும் வாயை மூடிக் கொண்டது” என்றார் அங்கிருந்த ஒரு கிராமவாசி.

இன்னொரு மீசைக்காரர், “ஏனையா, திருவிழாக் கும்பலில் ஜாக்கிரதையாக இருக்க வேண்டாம்! இப்படியா கையிலும், கழுத்திலும், நகையை மாட்டி இழுத்து வந்து நடுச் சந்தியிலே விடுவாங்க! களவாணிப் பயலுங்க பெருத்த ஊராச்சே இது!” என்று சுவாதீனமாய்க் கடிந்து கொண்டார்.

“இவள் தாயாரிடம் நின்று கொண்டிருந்தாள். திடீரென்று பார்த்தால் காணோம்; அரை மணி நேரமாய்த்தான் இவளைத் தேடி அலைந்து பட்ட பாடு அந்த மாரியம்மனுக்குத்தான் தெரியும். இவள் தாயாரை ஒரு சத்திரத்தில் இருக்கச் செய்து விட்டு வந்தேன். ‘குழந்தையை உயிரோடு பார்க்கப் போகிறேனோ’ என்று அவள் கதறிக் கொண்டிருக்கிறாள். நான் வரேனுங்க” என்று சொல்லிய படியே கும்பலை விலக்கிக் கொண்டு பரபர வென்று வெளியேறினான் அவன்.

இன்னும் ஐந்தே நிமிஷம். கும்பலில்லாத ஏதோ வொரு சந்தில் திரும்பித் தன் காரியத்தை முடித்துக் கொண்டு விட்டால்...குழந்தையை ஏதாவது வீட்டுத் திண்ணையில் இறக்கி விட்டு விடலாம்...மன்னார்சாமி குழந்தையைக் கொஞ்சியபடியே விடு, விடென்று நடந்தான்.

ஆயிற்று. அவன் பக்கத்துச் சந்தும் திரும்பியாய் விட்டது. அப்போதுதான் வந்தான் அந்தப் பழிகாரன்! கும்பலில் அவனைச் சுவாதீனமாய்க் கடிந்து கொண்ட மீசைக்காரப் பேர்வழி!

பின்னாலேயே வேகமாக வந்து “ஐயாவுக்கு இந்த ஊரு தானுங்களா!” என்று கேட்டான்.

மன்னார்சாமி சற்று நின்று அவனைச் சந்தேகத்துடன் பார்த்தான். ஒரு வேளை சகோதரத் தொழிலாளியா யிருப்பானோ என்ற சந்தேகம் அவனுக்குத் தட்டிற்று. பின்னர் நிதானமாக “நமக்கு அயலூருங்க, நம்ப கான்ஸ்டேபிள் கண்ணாயிரம் இருக்கிறாரே! அவருக்குச் சொந்த மச்சான் முறையாகவேணும்” என்றான் மன்னார்சாமி.

கான்ஸ்டேபிள் கண்ணாயிரத்தின் பெயரை அவன் எப்பொழுதோ கேள்விப்பட்டிருந்தானே யொழிய அவனைப் பார்த்ததில்லை. அச்சமயம் அந்த மீசைக்காரப் பேர்வழியிடமிருந்து தப்ப போலீஸ்காரனை உறவாகச் சொல்லிக் கொள்வது தான் உசித மென்று பட்டது அவனுக்கு.

“அப்படிச் சொல்லுங்க! எங்கேயோ இதுக்கு முன்னாலே பார்த்தாப்போல் இருக்கேன்னு நினைத்தேன். எனக்குக்கூடக் கண்ணாயிரத்தை நன்றாகத் தெரியும் வாங்களேன் காப்பி சாப்பிட்டுப் போகலாம்” என்று சொல்லியபடி மன்னார்சாமியின் அருகில் வந்து அவன் கையை இறுகப் பற்றிக் கொண்டான் மீசைக்காரன்.

பின்னர் பையிலிருந்து ஊதலை எடுத்து ஊதினான். அடுத்த நிமிஷம் எங்கிருந்தோ திடு திடுவென்று கெடிதுயர்த்த இரண்டு போலீஸ்காரர்கள் ஓடி வந்தார்கள்.

மன்னார்சாமி பொறியில் விழுந்த எலியைப் போல் திருதிருவென்று விழித்தான்.

“நம்ப மச்சானைக் குழந்தையோடே கொஞ்சம் ஸ்டேஷன் பக்கம் அழைத்துக் கொண்டு போங்கள். நமக்கு இன்றைக்கு ‘ட்யூடி’யில்லாமல் போனாலும், இந்தமாதிரி பசங்கள் நடமாடுவார்கள் என்று தெரிந்துதான் இப்படி வந்தேன். இவர் கையிலே மாம்பழத்தோடு கத்துவதைப் பார்த்ததுமே தெரிந்து கொண்டேன். உண்மையான தகப்பன்கூடப் பெண்ணைப் பார்த்து அப்படி உருகியிருக்க மாட்டான். பலே! பலே!” என்றான் சாதாரண உடையணிந்து கொண்டிருந்த மீசைக்காரக் கண்ணாயிரம்!

இரண்டாம் முறையாகக் காலையில் எதிரில் வந்த கிழவியைச் சபித்தான் மன்னார்சாமி!

# இது என்ன உலகம்?

வசுமதி ராமசாமி

"வாங்கோ ஸார். உங்களால் தான் எல்லாம் நடக்கணும். நீங்கள்தான் ஐயா முதல் சம்பந்தி. உங்கள் நண்பர் எப்பொழுது முஹூர்த்தம் வைக்கச் சொன்னார்? பிள்ளையை எல்லாருக்கும் பிடித்து விட்டதா?" இப்படி உற்சாக மிகுதியில் சிவசுப்ரமண்யம் பேசிக் கொண்டே போனார்.

ஆனால் வந்த நண்பர் முகத்தில் மகிழ்ச்சியில்லை. பேசவும் நா வரவில்லை. சிவசுப்ரமண்யத்தின் உற்சாகத்தைக் கெடுக்க விரும்பாதவராய் இருந்தார். ஆனால் இவர் மேன்மேலும் பல கேள்விகளை அடுக்கும்பொழுது அவரால், உண்மையை மறைக்க முடியவில்லை. "பிள்ளை நம் வீட்டுச் சம்பந்தத்தை விரும்பவில்லையாம்" என்ற வார்த்தைகள் ஒவ்வொன்றாய் வந்தன.

"என்ன! என்ன! நம் சம்பந்தம் பிடிக்கவில்லையா? கலாவதி அழகில் குறைந்தவளா? இல்லை, படிப்பில் தான் குறைந்தவளா? அவளிடம் என்ன குறையைக் கண்டார்கள்?"

"கலாவதிக்கு ஒரு குறைவும் இல்லை. அதிகப் படிப்பு படித்த பெண் வேண்டாமாம். படித்த பெண்கள் எப்படி இருப்பார்களோ வென்று பிள்ளையாண்டான் மிகவும் கவலைப்படுகிறான்."

இதைக் கேட்டதும் சிவசுப்ரமண்யத்தின் மனம் ஆழ்ந்த சிந்தனைக் கடலில் மூழ்கி விட்டது. வந்த நண்பர் எழுந்து போனதைக் கூட அவர் கவனிக்கவில்லை. தனக்கு மணமானதிலிருந்து ஒவ்வொரு சம்பவமும் சுருள் சுருளாக அவர் மனத் திரையில் விரிந்தன.

** ** **

சிவசுப்ரமண்யம் கல்லூரியில் படிக்கும்பொழுது அவருக்கு மணம் நடந்தது. சென்னையில் ஹாஸ்டலில் இருந்து படித்து வந்தார். பெண் பார்த்துப் பேசி முடித்து விட்டதாயும், உடனே புறப்பட்டு வரும்படி தந்தையிட மிருந்து கடிதம் வந்தது.

பன்னிரண்டு வயதுநிரம்பாத நீலவேணியை அவர் முன்பின் பார்த்ததில்லை. நீரோடையிலும், தோட்டத்திலும் அவளிடம் காதல் மொழி பேசவில்லை. காதலுக்கு இடையூறாகப் பெற்றோர்கள் குறுக்கே வரவில்லை. பூர்ணிமையில் சிலு சிலுவென்ற குளிர்ந்த காற்றில் அழகிய நதியில் ஆளுக்கொரு துடுப்பைத் தள்ளிக் கொண்டு காதல் பாட்டு பாடிக் கொண்டு போகவில்லை. பூரண சந்திரன் நிலா முகத்தைப் பார்த்து வெட்கி மேகத்தினிடையில் மறைந்து கொண்டதாகச் சொல்லிக் கொஞ்சி இருவரும் ஒரே மாதிரியாய்க் கல கலவென்று சிரிக்கவில்லை.

அப்பா பெண் பார்த்து வைத்திருந்தார். நண்பர்கள் கையாண்டி செய்தார்கள். அது ரொம்ப இன்பமாக இருந்தது. மாலை மாற்றும் வரை அவர் பெண்ணைப் பார்க்கவில்லை. ஆனால் அவர் மனத்துக்குள் அவளைப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் நிறைய இருந்தது. சின்னப் பெண். குனிந்து கொண்டே மாலையிட்டாள். அவள் முகம்தெரியாமல் மறைத்து விட்டது,நெற்றிச் சுட்டி அலங்காரம். கூர்ந்து பார்க்க அவருக்கு வெட்கம். குஞ்சலம் போன்ற சின்னக் கைகள். கையில் மருதோன்றி சிவப்பு குரு குருப்பாக இருந்தது. அந்தக் கரங்கள் மாலையிட்டதைக் கீழ்க் கண்ணால் பார்த்தார். அவ்வளவுதான். கல்யாணம் ஆனதும் மீண்டும் சென்னைக்குப் படிக்க வந்து விட்டார். மனம் நிரம்பி இருந்தது. கவசமணிந்த அன்போ, காதலோ அவர் மனத்தில் நிறைந்திருந்தது. ஆனால் தன் மனைவிக்குப் படிப்புப் போதாது என்ற சிறு எண்ணம் இதய மூலையில் ஒளிந்திருந்தது.

பின்னால் அவர் நான்கு பெண் குழந்தைகளுக்குத் தந்தையானபோது அவருடைய தாயின் பரிவான வார்த்தைகள் காதில் ஒலித்துக் கொண்டே இருந்தன. "சுப்பு, பிள்ளை குட்டிக்காரன். நான்கும் பெண்கள். கல்யாணம் செய்து முடிக்கவேணும்" என்று பரிவுடன் சொல்லுவாள். அப்பொழுதெல்லாம் சுப்புவினால் அந்த விஷயத்தின் ஆழத்தை நன்றாகத் தெரிந்து கொள்ள முடியவில்லை.

என்ன பிரமாதம்! தனக்கோ நல்ல உத்தியோகம். பெண்களோ தாயைப் போல் துடைத்து விட்ட மாதிரி அழகிகளாக இருக்கிறார்கள். மனைவி படிக்காதவள் என்ற எண்ணமும் விச்வ ரூபம் எடுத்தது. தன் குழந்தைகளுக்காவது நன்றாகக் கல்வி புகட்ட வேண்டும் என்று கருதினார்.

மூத்த பெண் சுசீலாவை நன்றாகப் படிக்க வைத்தார். பாட்டம் சொல்லி வைத்தார். நீலவேணியும் தன் பெண்ணுக்கு வீட்டு வேலைகள் அவ்வளவும் கற்றுக் கொடுத்தாள். வயது வந்த பெண்ணைக் கல்லூரிக்கு அனுப்பவில்லை. ஆனால் தன் பெண்ணைப் பிள்ளைகள் கொத்திக் கொண்டு போய் விடுவார்களென்று நினைத்து வந்தாள்.

பெரிய வக்கீலின் மகன் பெண்ணைப் பார்க்க வந்தான். அவன் பட்டம் பெற்றுப் பெரிய வேலையில் இருந்தான். சிவசுப்ரமண்யம் "நல்ல இடம். சுசீலாவைப் பார்த்ததும் ஒப்புக் கொள்வதற் கென்ன கசக்குமா? உடனே கல்யாணம்தான்" என்று நினைத்தார். பிள்ளைக்கு மூக்குகூடக் கிளி மூக்கு மாதிரி இருந்தது. அவர் நினைத்தபடி பெண்ணைக் கொத்திக் கொண்டு போகலாம். ஆனால் என்ன ஏமாற்றம். அந்தப் பிள்ளை நடனமாடத் தெரியாத பெண். வேண்டாமென்று சொல்லி விட்டான். பொல்லாத மனம் கொஞ்சங்கூட அடங்குவதில்லை. சுப்புவுக்குப் புது

அநுபவமானதால் பிள்ளை பெண்ணைப் பார்க்க வந்ததுமே மனத்துக்குள் கல்யாணத் திட்டமெல்லாம் போட்டு நடத்தி முடித்து வைத்திருந்தார். அவருடைய ஏமாற்றம் அத்துடன் இல்லை. பார்க்கும் வரனெல்லாம் தட்டியது.

பாட்டு போதாது, படிப்பு போதாது, சம்மதமில்லை, சகுனமில்லை இப்படி பலப்பல நொண்டிச் சாக்குகள் கிளம்பின. சுப்புவின் மனம் கலங்கியது. பெண்ணும் ஏங்கினாள். உறவில் சம்பந்தம் வேண்டாமென நீக்கின தங்கைப் பிள்ளைக்குத் தன் முதல் மகள் சுசீலாவைக்கொடுத்து கல்யாணத்தை முடித்தார்.

இரண்டாவது பெண்ணுக்கு விழித்துக் கொண்டதாக அவர் எண்ணம். இரண்டாவது பெண் கமலாவுக்கு நடனக் கலையை முறைப்படி சொல்லி வைத்தார். அந்த பெண் நடப்பதே நடனமாக இருக்கும். பேச்சே அபிநயமாக இருக்கும். அவளுடைய ஒவ்வொரு அசைவும் ஒரு பாவத்தைக் காட்டும். அவள் கல்யாணத்தைப் பற்றி ஒரு விதமான கஷ்டமில்லையென மலைபோல் நம்பினார்.

டில்லியிலிருந்து ஒரு உத்தியோகஸ்தன் பெண்ணைப் பார்க்க வந்தான். அவன் கலா ரசிகன். தென்னிந்திய கலா மன்றத்தின் காரியதரிசி என்றெல்லாம் அந்தப் பிள்ளையைப் பற்றி அறிந்த விஷயம். கமலாவும் பிள்ளைக்கு ஒரு பதம் அபிநயம் செய்து காட்டினாள்.

ஊருக்குப் போய் எழுதுவதாகச் சொல்லிக் கிளம்பினான். சுப்பு முஹூர்த்த தேதி குறிப்பிட்டு எழுதும் கடிதத்தை எதிர்பார்த்தார். அந்தப் பிள்ளையாண்டான் நாட்டியமாடும் ஒரு பெண்ணைப் பம்பாயில் ஒரு கோடீஸ்வரன் மணந்து கஷ்டப்பட்ட வரலாறை, எந்தப் பத்திரிகையிலோ வெளியான விவரத்தை அப்படியே கத்தரித்து வைத்து அத்துடன் ஒரு குறிப்பும் எழுதி யனுப்பி யிருந்தான். "இம்மாதிரி கஷ்டத்தை நான் விலைக்கு வாங்க விரும்பவில்லை. நான் கலா ரசிகன். எங்கள் மன்றத்தில் நடனத்திற்குத்தான் பெரும் பகுதி அளித்திருக்கிறோம். ஆனால் என்ன? நடனக் கலையில் ஆர்வமிருந்தாலும் எனக்கு மனைவியாக வர வேண்டியவள் நடனம் ஆடுவதை நான் விரும்ப முடியாது. உங்கள் பெண்ணுக்குப் பாட்டு நன்றாகச் சொல்லி வைத்திருந்தாலாவது மனைவியாக ஏற்கலாம்" என எழுதியிருந்தான்.

இந்தப் பிள்ளை நிச்சயமாக ரசிகன் தான். வேண்டாமென சொல்லுவதைத் தனிப்பட்ட முறையாகச் சொல்லுகிறானென்று சுப்பு நினைத்துத் திருப்தியடைந்தார்.

காலம் ஓடியது. அதை ஒரு விநாடி நிறுத்தச் சக்தியிருந்தால் உலகத்தில் எவ்வளவோ காரியங்களைச் சாதித்து விடலாமே. கமலத்துக்குக் கடைசியாக தன் கீழ் டைபிஸ்ட் ஆக வேலை பார்க்கும் சாதுப் பிள்ளையைக் கணவனாகத் தேர்ந்தெடுக்கும்படி ஆயிற்று.

மூன்றாவது பெண் திருமணத்தைப் பற்றி அவர் மனம் சலித்துப் போகவில்லை. பெரிய பெண் பொதுவாக எல்லாம் தெரிந்தவளாக வளர்க்கப் பட்டாளே யன்றி தனியாக ஒன்றிலும் தேர்ச்சி பெறவில்லை. அதனால் அவள் விவாகத்துக்குச் சிரமம் ஏற்பட்டது. இரண்டாவது பெண்ணுக்குப் போயும், போயும் காசைக் கொட்டி நடனத்தைச் சொல்லி வைத்தோம். அது குடும்பப் பெண்ணுக்கு நீடித்த வித்தையா? அல்லது நிரந்தர வித்தையா? என்ற உண்மையை டில்லிப் பையன் அறிவித்தான். மூன்றாவது பெண் சாந்தாவுக்கு நல்ல பிராசீன வழியில் சங்கீதத்தைச் சொல்லி வைத்தால் இந்தக் காலத்தில் ஞானமுள்ள பிள்ளைகளுக்கா பஞ்சம்?

சாந்தாவுக்குச் சங்கீதத்தைக் கரைத்துப் போட்டினார். அவளுக்கும் இணையற்ற சாரீரம் இருந்தது. அவள் பாவத்துடன் பாடும் பொழுது மெய்மறக்கச் செய்யும். ஆனால் கல்யாண வயது வந்ததும் ஐந்தாறு பிள்ளைகள் பெண்ணை வந்து பார்த்தார்கள். பாட்டையும் கேட்டார்கள். அவள் சங்கீதத்தின் உயர்வை யாரும் உணர்ந்ததாகத் தெரியவில்லை. அதனால் யாரும் அவளை மணக்க முன்வரவில்லை. கடைசியில் அண்ணாமலை சர்வ கலாசாலையில் பாட்டுப் பரீட்சையில் பட்டம் பெற்ற அழகிய வாலிபனும் பெண்ணைப் பார்க்க வந்தான். சுப்பு இவன்தான் சாந்தாவின் கணவன் என நிச்சயித்தார். அவனும் வழக்கம்போல் கடிதம் எழுதுவதாகச் சொல்லி விட்டுப் போனான். அவன் எழுதிய கடிதத்தைப் பெரு மூச்சுடன் படித்தார்.

அவருக்கு உலகமும், கல்யாணமும் புரியாத புதிராகவே இருந்தது! கடிதத்தில் மிக விநயமாக "நான் உங்கள் பெண் சாந்தாவை மணக்கச் சிறிதும் கொடுத்து வைக்கவில்லை. நான் எவ்வளவோ பாடுபட்டுச் சங்கீதம் பயின்றேன். எனக்கு ஆதரவில்லை. மூன்று மாதங்களுக்கு ஒரு முறை அரை மணி நேரம் ரேடியோவில் பாடுகிறேன். அதுதான் அரசாங்கத்தின் ஆதரவு. பெற்றோர்கள் தங்கள் பெண்ணின் சங்கீதத்தை மலிவான விலைக்கு வாங்கப் பார்க்கிறார்கள். ஞானசூன்யமான பெண்களை மூன்று மாதத்தில் நான் ரேடியோ நட்சத்திரமாகச் செய்யாவிட்டால் உங்கள் சிட்சை தேவையில்லையென்று அனுப்பி விடுகிறார்கள். சினிமா கம்பெனியில் பின்னணி சங்கீதம் பாடி வாரி விடலாமென்றாலோ முதலாளிகள் 'டப்பா மெட்டுத் தெரிந்தால் பாட வாரும்; உம்து கர்நாடக வழி இங்கு செல்லாது' என்று கண்டிப்பாகச் சொல்லி விடுகிறார்கள். அதுமட்டும் மனம் வரவில்லை. என் குரு என்னைச் சங்கீதத்தை அபசுரமாகப் பாடாதே. அது ஆத்மஹத்திக்கு மேல் பாவகரமானது என்று உபதேசம் செய்திருக்கிறார். அதை என்னால் மீற முடியாது.

சபாக்களில் கச்சேரி வைத்தால் அங்கத்தினர்கள் வர மாட்டார்களாம். இலவசக் கச்சேரி செய்ய நான் தயாரா யிருந்தால் கூட அவர்களுக்கு நிதி வசூலாகாதாம்

## பாரதி நாமம் வாழ்க!

கலைஞர்கள் கவிஞர்க் கெல்லாம்
கடமையைச் செய்யா நாடு
உலகினி லுயர்வு மங்கி
ஒழிவது திண்ணம்! திண்ணம்!

கலைஞரைப் போற்றா நாடு
காரிருட் காடு கண்டீர்!
கலைஞரை வழிபட் டோர்கள்
கடவுளை வழிபட் டாரே!

வித்தைசேர் கவிதை மாலை
விதத்தினுக் கொன்றாய்க் கோத்து
முந்தையர் வாழ்ந்த இந்த
முடிவிலாக் கீர்த்தி கொண்ட

பைந்தமிழ்த் தாயாம் எம்மின்
பழம்புகழ் தேவிக் கிந்த
மைந்தனும் பார தியின்
மாண்புறு நாமம் வாழ்க!

—பு. க. மகாவீர் (வையம்பாளையம்)

கூட்டம் வாராதாம். இந்தக் கூற்றுக்கு என்ன செய்வது? என் குடும்பம் பெரிது. வயது வந்த தங்கைகள் மணத்திற்குக் காத்துக் கொண்டிருக்கிறார்கள். உங்கள் பெண் சங்கீதம் எங்கள் குடும்பத்திற்கு ஏற்காது. தாங்கள் அந்தப் பெண்ணைச் சங்கீதத்தில் போட்டு வாட்டினதால் குடும்ப வேலைகள் செய்யக் கூடச் சக்தி இல்லாமல் இருக்கிறாள். பொருள் படைத்தவர் தங்கள் மருமகனாக வந்தால் சங்கீதத்தை இன்பமாகக் கேட்பார். படித்து உபாத்தியாயினி வேலையாவது பார்த்து என் வீட்டுப் பொருளாதாரத்தைச் சரிக் கட்டும் மனைவியை நான் தேடுகிறேன். என் கஷ்டத்தை உணர்ந்து மன்னிக்கவும்" என்று எழுதி யிருந்தது.

இந்தக் கடிதம் சுப்புவுக்குக் கோபத்தை எழுப்பவில்லை. ஆனால் அனுதாபத்தைத்தான் எழுப்பியது பாடகனின் உள்ளத்தைக் கண்ணாடியில் காண்பதுபோல் கண்டார்.

அலுத்துச் சலித்துப் பாட்டு காதில் விழுந்தால் காதில் பஞ்சடைத்துக் கொள்ளும் ஒரு பணக்காரன் தான் சாந்தாவைக் கல்யாணம் செய்து கொண்டார். அவர் மனம் உருகியது. ஒரு மாப்பிள்ளையும் நினைத்தபடி கிடைக்கவில்லையே யென்ற ஏக்கம் அவரைத் தாக்கியது.. உலகமே நம்பிக்கை மயம். ஒவ்வு நம்பிக்கையின் உருவம். ஆசை நிரக் கடைக்குட்டியான குமாரி லலிதாவைத் தகுந்த மாப்பிள்ளைக்குக் கல்யாணம் கொடுப்பதென்றே முடிவு செய்தார்.

உலக வழக்கப்படி லலிதா செல்லப்பெண். கால தேச வர்த்தமானத்துக்கு ஏற்ப லலிதா எல். டி. பரீக்ஷை பாஸ் செய்தாள். உபாத்தியாயினி வேலைக்குப் போக யோக்கியதை இருந்தது. வேலைதான் கிடைக்கவில்லை. வரன் தேடும் படலம் ஆரம்பமாயிற்று. ஒரு பணக்காரரின் பிள்ளை வந்து பெண்ணைப் பார்த்தான். அந்த வரனைச் சுப்புவின் நண்பர் கொண்டு வந்தார். இந்த வரன் தட்டாது என்று சுப்பு திடமாக நம்பி யிருந்தார்.

அந்தப் பிள்ளை, "எங்கள் வீட்டில் அதிகப் படிப்புப் படித்து உத்தியோகம் பார்க்கும் என் அண்ணி அவள் கணவனை மதிப்பதில்லை. குடும்பத்தில் ஏற்கனவே படித்த பெண்ணால் அண்ணா படும் கஷ்டத்தைப் பார்த்து விட்டதால் இவ்வளவு படித்த பெண் எனக்கு வேண்டாம்" என்று எழுதி விட்டதாக நண்பர் சொன்னார்.

"என்ன இப்படிக் கல்லாய் சமைந்து விட்டீர்கள், பிள்ளை சம்மதித்தானா?" என்று நீலவேணி கேட்ட பிறகுதான் சுய உணர்வை அடைந்தார் சுப்பு.

"உலகத்தில் பிறந்த ஒவ்வொரு பெண்ணும், பிள்ளையும் தான் மணம் செய்து கொள்ளுகிறார்கள். அது யுகம் யுகமாக நடந்து கொண்டுதான் வருகிறது. அதில் இவ்வளவு சிக்கலும், பிரச்னையும் ஏனோ என்றுதான் தெரியவில்லை. அதைத்தான் யோசிக்கிறேன்" என்றார் சிவசுப்ரமண்யம்.

"ஏன் லலிதாவை அவனுக்கு மணக்கக் கசக்கிறதா? நேற்றுக்கூட வக்கீல் வீட்டு ஜெயம்மாள் வந்தாள். அவளுக்கு ஐந்து பெண்கள். அப்படி ஒன்றும் அழகுமில்லை. 'நீ இப்படிப் பெண்களை வைத்துக் கொண்டு திண்டாடுகிறாயே? நான் கஷ்டப்படாமல் மாப்பிள்ளைகள் படைத்து விட்டேன். நீங்கள் ரொம்ப வடிகட்டினால் கல்யாணம் ஆகுமா' என்று கேலி செய்தாள்" என்றாள் நீலவேணி.

"நீலவேணி! ஒருவர் சுகமாய் இருந்தால் வயிற்றெரிச்சல் படும், கஷ்டப் பட்டால் ஏளனம் செய்யும் இந்த சமூகத்தைப் பற்றி என்னிடம் சொல்லாதே. நாம் எதிர்பார்ப்பது போல் கல்யாணம் நடப்பதில்லை. சில இடங்களில் வீட்டுக்கு வந்த மூத்த மருமகனே மற்ற மருமகன்களைத் தேடிக் கொண்டு வருகிறார்கள். அதுவும் ஒரு குருட்டு அதிர்ஷ்டம். நமக்கு அந்தப் பாக்கியமில்லை" என்றார் மனம் உடைந்த சுப்பு.

பொறுமைசாலியான நீலவேணிக்கு என்ன சொல்ல பதில் இல்லை. லலிதாவுக்குக் கல்யாணம் நடந்தது. ஆனால் அவள் படித்த உபாத்தியாயினி படிப்புக்கு ஏற்றதாக இல்லை. குக்கிராமத்தில் வாழும் மிராசுதாரரை மணந்து மாடு, வீடு, நிலம் நட்டு எனக் கிராம வேலையில் உழன்று வருகிறாள்.

'கல்யாணம் பண்ணிப் பார்க்க வேண்டும், வீட்டைக் கட்டிப் பார்க்க வேண்டும்' என்று பெரியவர்கள் சொல்வதில் எவ்வளவு உண்மை இருக்கிறது? அது சிவசுப்ரமண்யத்தின் வாழ்க்கையில் நிதர்சனமாகத் தெரிந்து விட்டதல்லவா? 'அவர் இது என்ன உலகம்!' என்று வியக்காமல் என்னதான் செய்வார்?

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras


வெப்பத்திலோ...
அல்லது குளிரிலோ...
Erasmic
HIMALAYA
BOUQUET
SNOW
நீங்கள் எங்கிருந்தாலும்...
ஹிமாலயா புக்கே
ஸ்னோ
உபயோகியுங்கள்.
ஏனென்ருல் இது பிரத்தியேகமாக இந்தியாவின்
சீதோஷ்ணத்திற்கேற்ப தயாரிக்கப்பட்டது
சீதோஷ்ண நிலை எப்படி இருந்தாலும்—இந்தியாவில் நீங்கள் எங்கிருந்தாலும், ஹிமாலயா புக்கே ஸ்னோ உங்கள் சருமத்தை அதிக மிருதுவாகவும், அழகாகவும் வைத்துக்கொள்கிறது. இதன் நறுமணத்தை நீங்கள் மிகவும் விரும்புவீர்கள்.
இன்னுமொரு நேர்த்தியான இராஸ்மிக் தயாரிப்பு
HBS 6A-X30 TM
இராஸ்மிக் கம். லிட். லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தது.

